ஓம்

தத் ஸத்

பரப்பிரஹ்மணேநம:

# ஆத்மஞானதீபிகை.

இஃது

அத்துவைத விவேக சமாஜத்திலொருவரும்

திருமூலர்மரபு ஸ்ரீமத் சாந்தாநந்தசுவாமிகளின்

சிஷ்யர்களிலொருவருமாகிய

திரு-குருசரணாலயன் என்பவரால்

இயற்றப்பட்டு,

சாதுக்களின் வேண்டுகோளின்படி

சென்னை:

கோல்டன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

---

இதன் விலை] 1914. [அணா 8.

ஓம்

தத் ஸத்

பரப்பிரஹ்மணே நம:

# முகவுரை.

தத்துவவிசாரஞ்செய்து, சித்தந்தெளிந்து தூய ஞதற்பொருட்டு, அவ்வப்போது பெரியாரிடங்கேட்டு மனனஞ்செய்துள்ள விஷயங்களை மீட்டும் மீட்டும் ஞாபகத்துக்குக் கொண்டுவருமாறு சிறுதுண்டு கடிதங்களிலும் புத்தகத்திலு மெழுதிவைத்திருந்தனன். அவற்றை யெனது தத்துவவிசாரநண்பர்களுள் சிலர் கண்ணுற்று, நீவிரெழுதியுள்ள விவ்வரியவிஷயங்களைக் குருசிஷ்ய சம்வாதமாகவெழுதி, ஒரு புத்தகரூபமாக, அச்சிட்டு வெளிப்படுத்தினால், அது பலர்க்கு உபயோகமாகுமென வற்புறுத்தினர். அதனை யாம் குருமொழியாகக்கொண்டு அவர்கள் கூறியவாறே வெழுதியச்சிட்டு வெளிப்படுத்தினன்.

ஜீவன்முத்த புருஷர்கள் லோகோபகாரமாய்த் தமிழ்ப்பாஷையிற் செய்துள்ளகிரந்தங்கள் அளவிறந்தனவாயிருக்கின்றன. அக்கிரந்தங்களின் அபிப்பிராயம்

மனோதுக்கம் நீங்கி மிக்கபண்டிதத்திறமையடைந்து சிதாத்மாவே தாமெனக்கண்ட ஞானச்செல்வர்களே உணருந்தன்மையதாம். அக்கிரந்தங்களைப் படித்து ணருஞ் சத்தியில்லாதவர்களுக்கு இந்நூல் பயனுடைய தாமென்பது தமியேனபிப்பிராயம். இந்நூல் ஆத்ம ஞானத்தை யடையும் வழியையே விளக்கிக் கூறுவது பற்றி இதற்கு ஆத்மஞானதீபிகையென்று பெயரிடப் பட்டது. இதில் தத்துவஞானிகளுடைய பாடல்கள், பல சந்தர்ப்பத்துக்கேற்றவாறு வேண்டியவளவாக காட்டப்பட்டிருக்கின்றன.

இந்நூலின்கண், ஜீவேசுவர வேகத்துவம், பந்தத்தையொழித்து நித்தியாநந்தத்தைப் பெறும்வழி, சற்சீடந் அசற்சீடரிலக்கணம், இந்திரியநிக்கிரக மனோநிக்கிரகமார்க்கம் பந்தமோக்ஷ நிரூபணம், பத்தி யின் பயன், தேவாலயவழிப்பாட்டின் பயன், உபாசனை யின்கிரமம், விவேசம் வைராக்கிய முதலியவற்றின் நிரூபணம், இல்லறநிலை துறவறநிலை, கருமயோக ஞான யோகவியல்பு, ஜீவன்முத்தி விதேகமுத்தியினிலக்கணம், சமாதிக்கிரமம், மகாவாக்கிய விசாரம், மௌனவியல்பு முதலிய அநேகஅரிய பெரிய விஷயங்கள் அமைந்திருக் கின்றன.



வேதார்த்தங்களின் சாரங்களையெல்லாமொருங்கே திரட்டி, நம்மனோருய்ய அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பாலென்னும் முப்பால்வடிவ திருக்குறளென் னும் தமிழ்வேதத்தைத் திருவாய்மலர்ந்தருளிய தெய் வப்புலமைத் திருவள்ளுவநாயனர், சென்னை திருமயிலை யின்கணுள்ள இலுப்பைத்தோப்பில், சமாதிகொண் டிருக்குந் திருக்கோயிற்றிருப்பணிகளில் சில குறைவா யிருப்பதால் அத்திருப்பணிகளைப் பூர்த்திசெய்யுமாறும் அத்திருக்கோயிலை புதுக்குவதற்கும் அன்னதானத் க்கும் இப்புத்தக விக்கிரயத்தால் வருந்திரவியத்தை

தவ
அதனை
ார்த்திக்
வெளியி
டு மு
ல்லாம்
க்கண பு
னென்
பெற்
- பி

யுபயோகிக்க நிச்சயித்திருக்கின்றனன். நம் தமிழ் தேயத்தில் திருக்குறளைப் படியாதிருப்பவர் சில ரென்றே சொல்லலாம். அங்ஙனமிருந்தும் அம்மகானது சமாதித்திருக்கோயிலை நம்மனோர் கவனியாதிருப்பது வியப்பாகவே யிருக்கிறது. இப்புத்தகத்தை வாங்குவோ ரொவ்வொருவரையும் மேற்படி திருக்கோயில் திருப் பணிக்குத் திரவியம் உபகரித்தவராக மனப்பூர்வகமாக நிச்சயித்திருக்கின்றனன். ஆரிய அபிமானிகள் திரு வள்ளுவநாயனார் திருக்கோயில் திருப்பணிசெய்ய அச்சிட்டுள்ள இப்புத்தகத்தைப், பெரிதும் ஆதரிப்பார் களென்று நம்புகின்றனன்.

இப்புத்தகத்தை அச்சிடுவதற்குமுன் பரிசோ தித்துக் கொடுத்த இந்துதியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத் கோ. வடிவேலுசெட்டியாரவர் களுக்கும், அச்சிடும்போது புரூப்பார்த்துக்கொடுத்த ம-ா-ா-ஸ்ரீ அமிர்தலிங்கமுதலியார் அவர்களுக்கும் நான் வந்தனம்புரிய கடமைப்பட்டிருக்கிறேன்.

ஜீவபோதமுடையோர்க்குத் தவறுதலுண்டாவ தியல்பாதலின், அடியேனெழுதிய புத்தகத்தில் தவறிரா தென்பதூஉ கூடுமோ? யான் பெரியாரிடங்கேட்டு,



மன்னஞ்செய்தவற்றை யெழுதும்போது தவறாக வெங்கேயாயினுமெழுதியிருப்பேனாயின், அதனை நன் மனதோடு அன்பர்கள் தெரிவிக்குமாறு பிரார்த்திக்கின் றேன். அவற்றைத்திருத்தி, மறுபதிப்பில் வெளியிடப் படும்.

இப்புத்தகம் முழுதுமெழுதி யச்சிட்டு முற்று பெறவும் வெளிப்படுத்தவும், அருள்புரிந்த எல்லாம்வல்ல இறைவன் இஃது என்றும்நிலவுமாறுங் கருணைபுரியத் திரிகரணசுத்தியோடு பிரார்த்திக்கின்றனன்.

இங்ஙனம்

| | | |
|---|---|---|
| February 1914<br>No. 20 Palayeppen st.<br>G. T. Madras. | } | திரு. குருசரணாலயனென்ற<br>தீக்ஷா நாமம்பெற்ற<br>தி. ரே. திருவேங்கட பிள்ளை. |

## காப்பு.

---

### சோருப வணக்கம்.

சிதம்பரத்தின் வேருய்த் திருக்குவினைத் தேடல்
சிதம்பரத்தின் சிரறியார் தேட்டம்-சிதம்பரந்தான்
சோதியா னென்று துணிந்து தொழுகின்றேன்
ஆதியா மாயை யற

---

### சற்குரு வணக்கம்.

அகம்பிரம மாமென் றறிவறியக் காட்டிச்
சகம்பிரம மாமென்று சாற்றி-யகமமதை
யற்றிருக்கின் சிந்தை யசையா தெனவுரைத்த
சற்குருவின் றாளே சரண்.

---

### மஹான்கள் வணக்கம்.

கல்லாதேன் காமுற்றுக் கற்றுணர்ந்த மெய்யடியார்
சொல்லைக் கடைப்பிடித்துச் சொல்லின்றால்-தொல்
யாரு துநிற்க மகான்கள் பதந்தொழுதேன். [லுலகில்
ஆரூத காதலுட னூர்ந்து.

---

9/1

# OPINION.

THE HON.

MR. T. SADASIVA AIYAR AVL. B.A. M.L.,

DEWAN BAHADUR *Judge High Court Madras.*

The Small Tamil work called "ATMA GNANA-DEEPIKA" written by Mr. T. R. Tiruvengada Pillai (Retired Government Servant) is full of deep truths, expressed in simple and yet refined language. Quotations from great Tamil Sages like *Thayumanavar and Pattinathu Pillai,* are scattered through the pages of the book and are very illuminating. The compilation has evidently been a labour of love and the author is desirous of utilizing the sale proceeds of his books in another labour of love, namely, the repairs to and improvement of the small temple of Theiva Pulamai *Thiruvalluva Nainar* of Mylapore. Those who purchase the books are therefore sure of double merit.

Mylapore
1-3-14. } (Signd.) T SADASIVA AIYAR

## பண்டித சிரோமணிகளின் அபிப்பிராயம்.

---

ஷட்தர்சந பாரங்கதராகிய ஜநகபூர்,
ப்ரும்மஸ்ரீ ஸஹஜாநந்த உபாத்தியாயரென்னும்
மஹாநுபாவரிடம் வித்தியாப்யாஸம் செய்தவராகிய
ப்ரம்மஸ்ரீ-மருவூர்-கே. கணேசசாஸ்திரியாரவர்கள்,

திரு-குருசரணாலயரென்னும் தீக்ஷாநாமம் பெற்ற ம-ா-ா-ஸ்ரீ, தி. ரெ. திருவேங்கடப்பிள்ளை யவர்களால் இயற்றி யச்சிடப்பட்ட ஆத்மஞானதீபிகை என்னும் இந் நூல், வேதாந்தசாஸ்திர ஸம்பந்தமாயுள்ள விஷயங்களை ஸங்கிரஹமாய்ப் பிரஸ்தாபிப்பதும், ஆன்றோர்வாக்கியங் களை யடுத்தடுத்துப் பிரமாணமாகக்காட்டுவதும், சங்கை ஸமாதான வடிவமாய் ஸர்வ ஸாதாரணமான நடையி லமைந்ததும், விற்பனைக்கிரயத்தினுல் வேறோர் தரும த்தை நிர்வஹிக்கக்கருதிப் பிரசுரிக்கப் பட்டதுமாம். ஆஸ்திகர்கள் ஆதரவுடன்வாங்கி யேற்றுக் கொள்ளத் தக்கதாயுள்ளது.

திருவல்லிக்கேணி
மார்ச்சுமீ-1914

இங்ஙனம்.
(Signd) மருவூர். கே. கணேசசாஸ்திரி.

உ

சிவமயம்.

சென்னை-பிரசிடென்சி காலேஜ் தமிழ்ப் பண்டிதரும்,
மகா மகோபாத்தியாயர் பட்டமும் பெற்றவருமாகிய
பிரம்மஸ்ரீ வே. சாமிநாதையர் அவர்கள்,

உபகாரச்சம்பளம் பெற்றுச் சுகவாசியாகச் சென்னை யில் இருக்கும், ம-ா-ா-ஸ்ரீ தி. ரெ. திருவேங்கடபிள்ளை யவர்கள், தாம் பலவருஷங்களாகப் படித்தும் கேட்டும் சேகரித்து வைத்திருந்த நூற்பொருள்களைத் தமிழ் நாட்டர் அறிந்து, தங்கள் காலத்தை ஒழுங்காகக் கழிக் கும்படி அச்சிட்டு வெளிப்படுத்திய "ஆத்மஞான தீபிகை" என்னும் இப்புத்தகக்காட்சி எனக்கு மகிழ்ச்சி யைத்தந்தது. இதன் விலையைக்கொண்டு, திருமயிலையி லுள்ள திருவள்ளுவ நாயனுருடைய ஆலயப்பணி முத லியவற்றைச் செய்விக்க இவர்கள் உத்தேசித்திருப்பது அதிலும் மெத்த ஸந்தோஷத்தை விளைவிக்கின்றது. அன்பர்கள் இதை வாங்கி உபயோகித்துக்கொண்டு ஷை பிள்ளையவர்களுக்கு ஊக்கமளிப்பார்களென்று நம்பு கிறேன்.

Tyagaraja Vilas,
Tiruvetteswaranpet.
1—3—1914.

இங்ஙனம்.
(Signd) வே சாமிநாதையன்.

மதத்ரய பகவத்கீதா உபந்யாஸ வித்வான்,
பகவத்கீதா வ்யாக்யாந கர்த்தா,
பண்டிட் டி. லக்ஷ்மணசாரியார் அவர்கள்,

திரு-குருசரணாலயன் என்னும் தீக்ஷாநாமம் பெற்ற தி. ரெ. திருவேங்கடபிள்ளை என்னும் இவ்வித்வான், ஸத்குருக்களிடம் அத்வைத சாஸ்திர விசாரம் செய்து, தேஹதத்வம், ஆத்மதத்வம், ப்ரகிருதிதத்வம், ப்ரம்ஹ தத்வம், வ்யவஹாரதசை பரமார்த்ததசை, இவைகள் முதலிய அநேக தத்வங்களின் ஸ்வரூபங்களை நன்றாய் உணர்ந்து, அவ்வாநந்தத்தை மற்றவர்களும் அனுபவிக்க வேண்டுமென்கிற நல்ல அபிப்ராயத்தினால், படிக்கும் போதே ஞானத்தையும் ஆநந்தத்தையும் உண்டாக்கும் திறமையுள்ள "ஆத்மஞானதீபிகை" என்னும் இக்கிரந்தத்தை எழுதியிருக்கிறார்கள். இதைநான் நன்றாய்ப்பார்த்துக் கவனித்ததில் கேவலம் பாண்டித்தியத்தினால் மாத்திரமேயல்ல,ஸ்வானுபவத்தினாலும் எழுதினதாய் நினைத்தேன் எளிதாய் ஸகல அத்வைத வேதாந்தார்த்தங்களை தெரிந்துகொள்ள இது நல்லஸாதனம் என்று எனது அபிப்ராயத்தை எல்லோருக்கும் தெரிவிக்கிறேன்.

திருவல்லிக்கேணி
4—3—14 } (Signd) பண்டிட் டி. லக்ஷ்மணசாரியார்



சென்னை கிருஸ்சியன் காலேஜ் தமிழ்ப்பண்டிதரும்,
தமிழ் லெக்சரருமாகிய ம-ா-ா-ஸ்ரீ,
எஸ்-அனவரதவிநாயகம் பிள்ளை அவர்கள் M. A., L. T.,

ஸ்ரீமத் திரு-குருசரணாலயன் என்பவரால் இயற்றப்பட்டு வெளிவந்திருக்கும் "ஆத்மஞானதீபிகை" என்னும் ஞானநூல், சம்சாராந்தகாரத்தில் அகப்பட்டுழலும் மாந்தரை, ஞானவொளிதந் துய்வித்தல் கருதி இயற்றப்பட்டதாகும். இந்நூல் உருவிற் சிறியதாயிருப்பினும், வேதாந்தமத ரஹஸ்யங்களைச் சாஸ்திராதாரங்கொண்டு தெளிவாக இனிது விளக்கும் பெருமையுடைத்து. அன்றியும் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் திருக்கோயிற் றிருப்பணி நிமித்தம் இந்நூற் பிரதிவிக்கிரய வருமானமெல்லாம் செலவிடப்படும் என்று முகவுரையிற் குறித்தலால், நூலை வெளியிடுவோரது புண்ணியக்கருத்தும் புலப்படுகின்றது. ஆதலால் வேதாந்த மதத்தினிடத்தும், தெய்வத்திருப்பணியிடத்தும் சிரத்தையுடைய தமிழ்மக்களனைவரும் இந்நூலினைப் பெற்று இன்பமடைக.

64, Sambhudas St,
Madras. E.
26th Feb. 1914. } (Signd) அனவரதவிநாயகம் பிள்ளை.

சென்னை ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல்

தமிழ்ப் பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ

**கோ. வடிவேலுசெட்டியா ரவர்கள் இயற்றிய**

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பத்தர்சொல் சாந்தா நந்தசுவா மிகளின்
பதமரை யுளத்தினி னிறுத்தி
நித்திய மான நிலையினை யுணர்ந்து
நிருமல நிலையுல கடைந்து
சுத்தமா வாத்ம ஞானதீ பிகையைத்
தோமிலா வாறுசெய் தளித்தான்
மத்திசேர் குருசு ரணலைய னென்பான்
மாண்பெலா நிறைந்தவன் மாதோ.

சென்னை
1—3—14 }



திருவருட்பிரகாச வள்ளலார்மரபு,

காஞ்சீபுரம் திருவருட்பிரகாச சபைத்தலைவர்

**ஸ்ரீமத் நிச்சல இராமானந்த சுவாமிகள் இயற்றிய,**

எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

சீர்பெறு வேதா கமப்பொரு ளுரையாய்த்
திகழ்திரு மந்திர மளித்த
ஏர்பெறு மூலன் மரபினிற் றோன்றி
யெழிற்பிர மைக்கிய முணர்த்தும்
பேர்பெறு சாந்த நந்தன்றன் னருளைப்
பெற்றகண் டாநந்த வாழ்வாய்க்
கார்பெறு மாயா கற்பித மகன்று
கரக்கனி யெனத்தனை யுணர்ந்தே. (1)

பெருகுசிற் சுகமிங் குயிர்களுற் றநந்த
பேதஞ்சேர் மனத்திரு ளிரிய
உருகியே யாத்ம ஞானதீ பிகையென்
றொளிர்தரு நூலுறு மமுதைப்
பருகுவோர் கருவிற் புகாவண மளித்தான்
பரிவுடன் கத்திய வடிவாய்த்

திருகுரு சரணு லயனரு டேர்ச்சி
சேடனுஞ் செப்புதற் கரிதே. (2)

திருக்குரு சரணு லயனெனு நாமந்
தீக்கையிற் பெற்றது வியப்போ
உரகன்மே லிவன்ரு ளெளிர்வது முனமே
யுணர்ந்தீதாய் தந்தையர் மகிழ்ந்தே
தரைதனிற் றிருவேங் கடனெனப் பெயர்தாந்
தரித்தன ருலகரு மெச்சப்
பெரும்புக ழிவன்றன் றந்தைதாய் ஞானம்
பேசரி தாகிய வியப்பே (3)

காஞ்சிபுரம் }
3 - 3 - 14. }

முற்றிற்று

---

ஓம்.

பரப்ரஹ்மணே நமః

# ஆத்மஞான தீபிகை.

## நூல்.

ஸ்தூல சரீரமாகிய, ஓர் அவத்தா பட்டினத்தில் சொன்மாத்திரமான ஜீவன், நான் என்னும் பெயரை வகித்து, தானல்லாத பஞ்சபூத பௌதிகத்தைத்தன தென்றும், தானல்லாத தேகத்தைத் தானென்றும் சுதந்தரம் பாராட்டி, கெட்டு, இருவகைப் பற்றுக் களையும் பொருந்தி யிருப்பன். இவனே அகங்காரி யெ ன்பர். இவ்வகங்காரியை, விவேக மென்னு மொருதலை யாரி பிடித்து, ஐயோ, வீணே கெட்டு உழல்கின்றனை யே, உன்னால் நானுங்கெடுவதாகிறதே தானல்லாத தேகத்தைத் தானென்று அகங்கரித்து, காலனுக்கா ளாகின்றனையே, உன்னை விசாரித்துத் தண்டித்து, உன்னைச் சுகப்படுத்து நிமித்தமொரு நியாயாதிபதியி னிடங் கொண்டுபோகவேண்டும், நில்லென்று அதட்டி

சற்குருவான நியாயாதிபதியினிடங் கொண்டு வந்து நிறுத்தி ஐய! இதோ தோன்றும்படியான இவ்வகங்காரி தானல்லாத தேகத்தைத் தானென்றும், தனக்குத்தோற்றுவன அனைத்தையுந் தனதென்றுஞ் சுதந்திரம்பாராட்டி காலதண்டனைக் காளாகின்றான். இது சொல்லப்புகு நேரத்திலும் ஆடானது, தந்நிலைமையைக் கருதாது,புல்மேய்வது போலிவன்,நாளைகாலன் வருவனென யோசியாதிருக்கின்றனன். இவனைத் தீர விசாரித்து இவனுண்மையில் யாரோ அதனை யிவனுக்கறிவித்துத் தண்டித்து இவன் சென்றவழி, யேனையருஞ்செல்லாவண்ணம் தீர்மானிக்க வேண்டுமென்று பிரியாது செய்தனன்.

நியாயாதிபதி.—அப்பா, நீ அகங்காரி யென்பது வாஸ்தவந்தானா? உண்மையைக்கூறு.

அகங்காரி.—ஐயா, நானெவ்விதத்தில் அகங்காரி யானேனோ, அதை யறியேன்.

நி.—அப்பா! நீ எந்தவூர்? வாசித்திருக்கிறாயா? உன்மதம்யாது? என்னகாரணத்தால் நீயல்லாத தேகத்தை நீயென்றும், உனக்குச் சுதந்திரமல்லாத, பௌதிகத்தை யுனதென்றுஞ் சொல்லி, அகங்கரித்து, உழ



லாநிற்கின்றனை, இதனை ருசுவு செய்யவல்லையா? உனக்குச்சாக்ஷிகளேதாவதுண்டா?(சாக்ஷிகளென்பதீண்டு சுருதி, யுத்தி அநுபவங்கள்.)

அ.—ஐய; நான்கருவூரிலிருந்து வந்தவன்; நான் கல்வி கற்றிருக்கின்றேன்; என்தாய் தந்தையர், என்னுடைய விளம்பிராயத்திலேயே யிறந்தார்களாதலின் எந்த மதம் சொந்தமதமென யான் அறிகிலேன்.

உலகிலிதுகாறும் மனிதர்களில் நானென்று சொல்லாதவரில்லை. ஆகையால் சகலமனிதர்களுமே சாக்ஷி. ஒருவன் தன்னை அஃதாவது, இத்தேகத்தைச் சுட்டிக்காட்டவேண்டுமாயின் நானென்று கூறாது, வேறெவ்வாறு சொல்லமுடியும்? சகலருஞ் சொல்வது போல நானுஞ் சொல்லிவருகிறேன். நான் கஷ்டப்பட்டுச் சேகரித்து வைத்த மண், பெண், பொன் இவற்றை எனதெனக் கூறாவிடின் அயலார் தமதென அபகரிப்பாரன்றோ;ஆகையாலொவ்வொருவருக்கும் பாகுபாடு தெரியும் பொருட்டு, இஃதென்னுடையது அஃதுன்னுடையதென்று சொல்வது, பாஷையின் திறமாகையாலும், வேறு சொல்லில்லாமையாலும், அவ்வாறு வழங்கிவருகின்றது. (என்று விடைகூறி, இதனாலெவ்

வாறு அகங்காரியாவேன்; நீரே பரியாலோசித்தென்னைக் காவலினின்றும் விடுவிக்க வேண்டுமென மன்றுடிக்கேட்டுக் கொண்டனன்.)

நி.—அப்பா! நீசொல்வதுசரி; உண்மை மதம்யாதென நீயேயினியுணர்வாய். ஒவ்வொருவருந் தனித்தனிதேகத்தை, நான் நானென்று சொல்லுகிறார்களல்லவா; அவ்வாறு சொல்லாத மனிதர்களில்லையல்லவா; அதுவுஞ்சரி. இத்தூலதேகம், 24-தத்துவங்களையு மொன்றாய் சேர்த்து, ஒருடம்பல்லது, கூண்டாகச் செய்யப்பட்டுள்ளது. இதிலடங்கிய 24-தத்துவங்களில், எதை நானென்று சொல்வது; கண், வாய், மூக்கு, நாக்கு, தேகம், மனம், புத்தி முதலிய தத்துவங்களில் கண்நீயா, மனம் நீயா, புத்திநீயா, தேகம் நீயாவென, ஒவ்வொன்றையுங் கேட்டால், நீகல்வி கற்றவனாகையால், உன்கல்வித் திறத்தால் என்னுடையகண், என்னுடையமனம், என்னுடைய புத்தி, என்னுடைய தேகமெனச் சொல்லுகிறாயே யொழிய, நான் கண், நான்மனம், நான்புத்தி, நான் தேகமெனக் கூறாதகாரணம் யாது?

அ.—ஐய! சொல்லத் தெரியவில்லை.



நி.—அவை, உன்னால் அறியப்படுதலினாலும், ஜடமாகையாலும் பௌதிகமான படியினாலும், அவை யுனக்கன்னியமானபடியினாலும், அவ்வாறு சொல்வதின்று. அவ்வாறு கூறுவதால் என்னுடைய, என்னுடைய, என்பவன்யாவன். அவன் தேகேந்திரிய மனோ புத்திசித்தம், அகங்கார பிராணனுகின்ற எழுபாதிகளுக்குள்ளே ஒருவனா? அல்லதிவைகளுக்கு விலக்ஷணனா?

அ.—விலக்ஷணனாகத்தானிருத்தல் வேண்டும்.

நி.—ஆம்; அவனன்றோ கூண்டிலிருக்கும் பக்ஷி போன்றவன். அயலேட்டைக்கற்பது கல்வியல்ல; தன்னேட்டைக்கற்பதே கல்வி;

திருக்குறள்.

"கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்."

சொரூபமனனம்.

"கற்றோமெ லாமவற்றைக் கற்றோனைக் கற்றோமோ
கற்றோமென் றேமாப்பக் கற்றோமே"

## சசிவர்ணபோதம்.

"மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவ தெல்லாந்
தம்மையறி யும்மறிவ தேயறிவு தானே"

அ.—தூங்கி விழித்தவன்போல் பிரமித்து, உலகிலெல்லாக் கல்வியுங்கற்றோ மென்னுங் கருவமடைந்து, நமக்கிங்கெவரும் நிகரில்லையென நினைத்திருந்தோமே; இவர் கேள்விக்குப்பதில் கூறவல்லனல்லனென வெட்கி, தறிபோல் நின்றனன்.

நி.—என் அப்பா! ஒன்றும்பதில் கூறாது நிற்கின்றாய்; நீகல்வி சற்றவனையாற் றெறியவில்லை யென்று சொல்ல வெட்கப்படுகின்றாயா? சரி அஃதிருக்கட்டும்; ஒருவனைப்பார்த்து இதுயார் செய்தது, அது யார்செயத தென்றுகேட்டால் நான்தான்செய்தேன், அவன்தான் செய்தா னென்று சொல்வதைக்கேட்டிருப்பை யல்லவா?

அ.—ஆம் சொல்வதுண்டு.

நி.—இங்கு நான், நீ, அவனென்பதோடு கூடத் தான், தானென்னும் பதத்தைச் சேர்த்துச் சொல்லுகிறார்களே; அந்தத்தானென்னும் பதமேது? ஏன் சேர்த்துச் சொல்லுகிறார்கள்? இதையாவது யோசித்து பதில் கூறவேண்டும்.



அ.—சற்றுநேரஞ் சும்மா விருந்து, தனக்குட்டானே ஆம் வாஸ்தவந்தான், நான், நீ, அவன், என்பது தன்மை, முன்னிலை, படர்க்கையிடத்தைக் காட்ட வந்த வெறும்பதமெனவும், சேர்த்துச் சொல்லும்படியான தானென்னும் பதமெல்லாருக்கும் பொதுவாயுள்ள அர்த்தபத மெனவும் யோசித்துத்தேறி, ஐய; தாங்கள் சொல்வதுண்மையே, நான், நீ, அவன், சொன்மாத்திரமென்றும் அந்த தானென்பது, அருத்தத்தைத் தரும்பதமென்றும், ஆதலினெல்லாருக்கும் பொதுவாயுள்ள தெனவுந்தோற்றுகிற தென்றனன்.

நி.—அப்பா! அந்தத்தானென்பது யாது? எதுவாயிருப்பதா லெல்லாருக்கும் பொதுவாம்.

அ.—ஐயா! என்புத்திக் கெட்டினவண்ணஞ் சொல்லுகிறேன். எல்லா உயிர்களிடத்தும், அந்தரியாமியாயிருப்பது, யாதொரு கடவுளுண்டோ, அச்சொரூபத்தைக் குறிப்பதான தற்பதமாயிருக்கலாம்.

நி.—அப்பா! நீ கூறினதுண்மையே; ஆனால் சந்தேகமாகக் கூறுகிறாயே; உலகில் "சர்வம் விஷ்ணுமயம்; சர்வம் சிவமயம்; அல்லது சர்வம் பிரஹ்மமயம் ஜகத்" என்றால் இந்த சகத்தெல்லாம் விஷ்ணுமயம் சிவமயம்

அல்லது பிரஹ்மமயம் என்று சொல்லியிருப்பதை நீ கேட்டிருப்பையல்லவா?

அ.—ஆம், கேள்வியுண்டு.

சி.—அப்பா! அந்த வாக்கியத்திலுள்ள், சர்வமென்னும் பதத்திற்கு அருத்தம் யாதோ கூறுவாயாக.

அ.—ஐய! ஜகஜீவ பரமாகின்ற திரிபுடியும் அவனேயென அருத்தமாகும்.

சி.—ஆம், நீ சொல்வதுசரி; பிரமமுதல், ஸ்தாவரம்வரையிற்றானாகவே யிருக்கிறான்; இரண்டாவதானவனொருவனுமில்லை. இதோ காணப்படுகின்ற பிரபஞ்சமெல்லாம், ப்ரஹ்ம சொரூபமே; ஆதலின் சகலரும் ப்ரஹ்ம சொரூபிகளே; இவ்வாறெவன் காண்கிறானோ, அவன் ப்ரஹ்மமேயாகிறான். அவனில் திரிபுடியும், சர்வத்திலுமவனிருப்பது, உனக்குண்மையாகப் படுகிறதா?

அ.—ஐய! தெரியவில்லை, விளக்கவேண்டும்.

சி.—இதனாலன்றோ, அவனை நிமித்தோபாதான காரணனென வேதம்முறையிடுகிறது. சர்வமென்னும்



பதத்தில், சகல மனிதர்களும், மனிதர்களால் செய்யப்படும் பூஜையும், பூஜாதிரவியமும், பூஜையை யேற்போனும், அவனொருவனாகத்தானே யிருக்கவேண்டும். ஏனெனின், சர்வமென்றால், உலகிலுள்ள வெல்லாமுமேயென, அருத்தமாகுமல்லவா? இப்படிக் கூறுவது நீயொப்புக் கொள்வையா?

அ.—ஒப்பத்தான் வேண்டும். ஆனாலும், தாங்கள் சொல்வதுபோல, கற்பூரம், பழம், தளிகை, வெற்றிலை, பாக்கு முதலானவைகளும், அவனாகவே விருப்பின், அவனுக்கவைகளை யந்நியமாக வைத்து, அங்கீகரிக்க வேண்டுமெனப் படைப்பது அயுத்தமாகத் தோன்றுகிறதே.

சி.—அப்பா! சர்வமவனை விட்டபோது, அவனுக்கன்னியமாக, வேறோரணுவு மிருக்கலாமா? இருக்கின், சர்வமவனென்பது பொய்யாகுமே;

சசிவர்ணபோதம்

"பூசனையு மதுச்சகல பொருளுமறி தமையு
மீசனையும் வேறதற வறிவதறி வெனவே"

நீபேத புத்தியினால், அவன்வேறு, நான்வேறு, பழமுதலியவை யவனுக்கன்னியமென, அஞ்ஞானத்

தால், பலவாக நினைத்து, பயத்தை யடைந்து, மிருத்தியுவையடைகிறாய். ஆன்றோர் வாக்கியம் பிசகாகுமா?

அ.—சாத்திரங்கள், உண்மைதான் கூறும்; அறியாதது என்குற்றமே.

நி.—பிரமதேவன் முதற்கொண்டு, திரணம்வரைக்குமுள்ள, சராசரப் பிரபஞ்ச மெல்லாவற்றிலும், அவன் நிறைந்திருக்கின்றவனென்றுணர். அவ்வாறுணராது, தேகமே நான், சகத் சத்தியம் என்னும் பாவமே, அஞ்ஞானமெனப்படும். இந்த அஞ்ஞானம் ஆதியாதலால், நசித்தபிறகு, மறுபடியு முண்டாகமாட்டாது. ஆதலினதனை யொழித்தல் வேண்டும்.

அ.—ஐய! அஃதெவ்வா றொழித்தல்?

நி.—விசாரத்துவர்ராவுண்டாகும், விவேகத்தினாலதையொழிக்க முயல்வாயாக. இதுதான் பூசையிற்சிறந்தது;

விவேகசூடாமணி.

"மேதைதொக் கத்தி யாதி மேவிய கூட்ட மான
வேதமாந் தேக நானென் றெண்ணுவன் மூட னானேன்"

ஞானவாசிஷ்டம்.

"வினைத்தேக வுடலைநா னென்னுமது
விடுதலே மிகுந்த பூசை"



சசிவர்ணபோதம்.

அறிகின்ற பொருளென்று மறிவானில் வேறே
யானாலிவ் வூனாக நானென்ன லாமோ
செறிகின்ற புள்ளல்ல வேகூடிவ் வகையே
செடமான வுடனின்னில் வேறென்று தெளியே"

அ.—பிரமித்தவன்போல் கிலேசமடைந்து, யாதொன்றுமிவர் முன்னிலையிற், சொல்லவேலாதவனா யுணவு வேண்டாது, எனிவரிடம் அகப்பட்டுக் கொண்டோம். இம்மாதிரி கல்வி, கற்றவரை யிதுகாறுங் கண்டதுங் சேட்டதுமில்லையே; நாமும், அகங்காரியானோமே; ஆலோசனை யின்றி, காலத்தை வீணிற்போக்கினோமே யென, துக்கித்து மனக்கிலேசம் நீங்காதவனாய் நின்றனன்.

நி.—அப்பா! இதுகாறும் தேகத்தை நானென்றும், டௌதிசபாமுலசத்தை யெனதென்றுஞ் சொல்லிவந்தது, இப்போதெங்கேபோயிற்று. எனதெனச் சுதந்திரித்து வந்ததே, குற்றமல்லவா? இக்குற்றத்தினாற்றான் நீ அகங்காரியானாய்; காவலிலும் வைக்கப்பட்டாய். மேலும், அட்டரவஸ்து, உன்னை நோக்கி, சர்வமும் நானாயிருக்க, நீ எனக்கன்னிய மில்லாதபோது,

அன்னியமாக, நான், எனதென்று எக்காரணத்தினல், சுதந்திரிக்கிருயென்று கேட்டால், நீ என்னபதில் கூறவல்லாய்;

கந்தரனுபூதி.

"யானகிய வென்னை விழுங்கி வெறுந்
தானுப நிலைநின் றதுதற் பரமே"

மேலும், உன்னுடைய சாயாதேகத்தையும், உன்பிரதி பிம்பத்தையும், கனவின்கண் தோன்றிய, தேகத்தையும், நானென்று கூருதகாரணம், யாது அவைவெறுந்தோற்ற மானதின்லன்ரே; அவ்வாறே, யிதுவும் தோற்றமே யாதலின், இதனை யெவ்வாறு நானென்னலாகும்.

அ.—தாங்கள் கூறிய, நிமித்தோபாதான காரண னென்பது யாது?

நி.—அப்பா! உலகிலுள்ள, ஒவ்வொருபௌதிகப் பொருளுண்டாவதற்கு மூன்றுகாரண மிருக்க வேண்டும்.

அ.—அஃதெப்படி? விளக்க வேண்டும்.

நி.—கடமென்னும் பொருளுக்கு மூன்று காரண மிருத்தல்போல, அதாவது, மண் முதல்காரணமும்,



தண்டை சக்கரம் துணைக்காரணமும், குலாலன் நிமித்த காரணமுமாம். இம்மூன்று மின்றி, கடம் வந்ததில்லை. இம்மூன்றில், ஒன்றிரண்டிருந்தாலும்,பொருள் வரக்காரணமில்லை. அதுபோல உலகமென்னும் பொருளுண்டானதற்கு மூன்றுகாரணங்கூற வேண்டியது. மதத்தர், துவிதவாதிகளாகையால் அவர் மாயை முதற்காரண மெனவும், கிரியாசத்தி துணைக்காரண மெனவும், ஈஸ்வரன் நிமித்தகாரணனெனவுங்கூறுவர். வேதமவ்வாறு கூருது, மதத்தர்கூறும் மூன்றுகாரண மும், அப்பிரம மொன்றே வெனக்கூறியது. எதுபோ லெனில், கயிற்றைத் தவிர அரவில்லாததுபோல, பிரமத்தைத் தவிர, அவை மூன்றமில்லை. பிரமமே, உலகமாகத் தோற்றலின், அது நிமித்தோபாதான காரணமாம். என்ருல், தானே முதல், துணை, நிமித்தமா யிருப்பதாம்.

அ.—அஃதெவ்வாறு? நன்கு விளக்க வேண்டும்.

நி.—பிரமம், சுசாதி, விசாதி, சுவகதபேதரகித மாதலினல், பிரமத்துக் கன்னியமாக, வேறே வஸ்து வில்லை. சர்வம் பிரம்மமய மென்றதினல், பிரபஞ்சமு மூமையும் அவனல் வியாபிக்கப்பட்டதாகும். ஏகமேவாத் விதீயம் பிரமமென்றதினல், உலகிலுள்ள சர்வ

மும் அவனைத்தவிர இரண்டாவதானவஸ்து ஒன்று மில்லை யெனப்படும். உலகமென்பது உண்மைப் பொருளாகாது, பிரமசந்நிதியில், ஸ்படிக வர்ணம்போல், வெறுந்தோற்ற மாத்திரமாயிருத்தலால், அத்தோற்ற மாத்திரமான ஆரோபிதத்திற்கு அதிஷ்டானமே,காரணமாகும். எதுபோலெனில், பாலை நிலத்திற்றோன்றும் சலத்திற்கு அப்பாலை நிலமே, காரணமாவது போல பிரமத்திற் றோன்றும், இந்த ஜகத்திற்கு பிரமமே காரணமாயிருப்பதால் அவனை நிமித்தோபாதானகாரணனென வேதம் முறையிடுகின்றது;

ஞானவாசிஷ்டம்.

"ஆதலினு லீதொன்றுஞ் செய்த தல்ல
வடுத்துளவிச் செகமில்லை யறிவுமட்டு
மேதகுசங் கற்பிதமே வேதா வாகு
மெய்யாக வழிவன்றி வேறொன் றில்லைச்
சேதனமாத் திரத்துதித்த சிருட்டி யந்தச்
சேதனமே வடிவென்று செப்ப லாகு
மோதியசெய் வோன்புசிப்போ னிரண்டு மல்ல
லுறுபவர்தீர் பிரமமே யுள்ள வெல்லாம்"

அ.—ஐய! இதுகாறு மித்தேகத்தை அவிவேகத்தால், நானென்றும் இதைச்சுகப்படுத்த வேண்டு மென்றும், இது வின்னும் வலுத்திருக்க இதராமாமிசாதிகளைத்தின்று, கொழுக்கவைத்திருந்தேன்; சுவரிருந்தாற், சித்திரமெழுதலா மென்றல்லவோ யோசித்து, அகங்கார மமகாரங்கொண்டிருந்தேன். அவ்வகங்காரமே, பிறப்புக்கு வித்தெனத் தெரியாதிருந்தேன். (தெரியாது செய்த குற்றத்தைத் தேவரீர்மன்னிக்க வேண்டு மென்று, வணங்கிக்கேட்டுக் கலங்கா நின்றனன்.)

நி.—அப்பா! அதுநிற்க; இப்போதாவது, நான், என தென்பதிலுண்மை தெரிந்துக் கொண்டாயா?

அ.—இன்னும், விளங்கவில்லை; நன்கு விளக்கவேண்டும்.

நி.—உன்பெயர், இராமனல்லவா? இராமனென்றால், யாவன்? இராமசப்தத்திற்கு, பொருள் சரீரமா? ஆத்மாவாவென்று விசாரிக்க நோக்கில், சரீரமெனின், அது திருசியமா யுன்னாலறியப் படுதலினாலும், அது நசிக்குஞ் சுபாவமுடையதாதலினாலு மல்ல, ஆத்மாவெனின், அதுவே, திருஷ்டாவாய் தேகத்தை நடத்துவதாலும், நாசரஹிதமாதலினாலும், அதுவே பொருள். சரீரமென வேன் கூறலாகாதெனின், அது அநித்தியமும் விகாரமுடையதும், காரடி வித்தைக்காரனு

டைய, மாயையினால் பார்ப்பதற் கிருப்பவைபோலக் காணப்பட்டு, விசாரிப்புழி, கானனீரையும், மின்னலையும், இராஜ்ஜுசர்ப்பத்தையு மொத்த தோற்றமேயாதலாலது மித்தையே. மேலுங்கூண்டையே, பக்ஷியென்று கூறுவாறு முளரோ; அவ்வாறே, நீவாழு, விடமாகின்ற வித்தேகம் நீயல்லை; அதனாற் காணப்பட்ட சகலமும் உன்னதன்று; ஆதலின் அப்பாவனையை யொழித்தல் வேண்டும். ஆனால், உணர்வாகின்றதேகி ஆன்மாவைக் காட்டிலும் பின்னமானவனல்ல, ஆதலின் உணர்வே நீ யெங்கிற சப்தத்திற்கு அருத்தமாயிருப்பது.

திருக்குறள்.

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் ப்கும்"

இவ்வுடல் நீயாகில், அது பலவணுக்கள் சேர்ந்தாயது. மீட்டுமது வுடைந்தால், அணுக்களாகின்றதல்லவா? அணுக்களை நீயெனக் கூறுவது கல்வித்திறமாமா? இவ்வுடல் மோகமெல்லாமிருப்பதற் கிடமாம். அதுயாது சேர்ந்தாயதெனின், தோலும், இரத்தமும், என்பும் மாமிசமும், சுக்கிலமும், மேதசும், மச்சையுமாகின்ற சப்த தாதுக்களாலாயது.



டட்டினத்தார்.

"ஊற்றைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை யூன்பொதிந்த
பீற்றற் றுருத்தியைச் சோறிடுந் தோற்பையை."

ஆதலினித் தேகத்தை, மறந்தும் நீ யென்னலாகாது; இப்பாவத்தை யின்று முதலாகவாவது, வொழிக்கமுயல்வாயாக.

அ—அஃதெவ்வாறு ?

நி—இச்சரீரமானது, ஸ்திரீபுருஷ சம்பந்தத்தினாலுண்டானதும் நரகத்திற்குச் சமானமான, தாயினுதிரத்தில், விருத்தியடைந்ததும், மூத்திரதுவாரத்தினால் வெளிப்பட்டதும், எலும்புகளினா லிணைக்கப்பட்டதும், மாமிசத்தினால் பூசப்பட்டதும், தோலினால் மூடப்பட்டதும், மலமூத்திர பித்த கப ஊன்கொழுப்பு இவைகளினாலும், வியாதிகளினாலும் நிறைந்திருக்கப்பட்டதுமாம்;

சொரூபசாரம்.

"சுத்த சடமான சுக்கிலங்கெர்ப் பீகரித்துச்
சித்தத் துவங்கலந்து சீவித்து"

மேலும் பாம்பினால் கழட்டிவிட்ட, உயிரற்றது
மான சட்டையில், பாம்பு அபிமானமற்று 'பாராட்
டா திருத்தல்போல, இத்தேகத்தில் அபிமானமற்று,
அது அகங்காரி யென்னும் பக்ஷி, வாழுமொருகூடு,
அல்லது சட்டைபோல் தனக்கன்னியமாம். அது
வுன்னா லறியப்படுவதினால்திருசியமாம்; திருசியமனைத்
தும், அழியுஞ் சுபாவமுடையது. அதனையறியுமறிவே,
திருக்காகின்ற, சைதன்னிய சின்மாத்திர, சொரூப
னான நீ, பிரத்தியே காத்மாவாம். சைனியத்துள் நின்ற,
அரசனைக் காண்பதுபோல், உடல்முதற் சகலதிருசிய
தத்துவங்களுள், உணர்வுமாத்திரமான வுன்னை, நீ,
திருக்குவாகவே யறிவாய். மேலுந் தபசிகள், யோகிக
ளித்தேகம் பிறக்கும் போதுறும் ஐந்துவித துன்பத்
திற்கு (அஃதாவது, கருப்பாசயப் பையுட் கட்டுண்
டல், அதில் ஜலம் பூரித்தல், உதராக்கினியால் வருந்
துதல், யோனிவாய் நெருக்குண்டல், பிரசூதவாயுவா
லுதைப்பட லென்னுமிவற்றிற்கு) பயந்தும், இறக்
கும் போதிவற்றினும் எண்மடங்கான துன்பங்களுள
வாதலினாலன்றோ, அதை யொழிக்க நாட்டைத்துற
ந்து, காட்டை யடைந்து, தவமியற்றுகின்றனர்;



## திருக்குறள்.

"செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்"

எனக்கூறியுள்ளது யாதுகாரணம் பற்றியெனின்
தேகம் நீயல்லவாதலின், அதனைப் போஷிப்பதே முக்
கியமான காரியமல்ல. சிரவணமே, முக்கியம். அஃதில்
லாத காலத்தில், பிராணவாயு, இக்கட்டையி லாடிக்
கொண்டிருக்கு நிமித்தஞ் சிறிதுண்ணென்றும்; நீ ஜீவி
த்திருப்பதற் குண்ணுவையே யொழிய, வலித்திருக்க
வல்ல வெனவுங்கூறினர். ஆதலின், திருசியமாகின்ற,
வித்தேகத்தை நீயல்லவென நேதிவாக்கியத்தால்,
விசாரித்துத்தள்ளி யசட்டைசெய். இதைவிட இழி
வான வத்து உலகிலில்லை யாதலின், இச்சரீரத்தை
யன்னியன், தொட்டால், ஸ்நானஞ் செய்யவேண்டு
மென சிலர் கூறுவதற்கு அதுதான் காரணம். இதனா
லவ்வளவு இழிவையுடையதே யெனத்தெரிந்து, செவி
இந்திரியத்தை, வேறுகானங்களில் செலுத்தாது, வே
தாந்த சிரவணத்திலேயே, செலுத்தி, யித்தேகம் நா
னல்ல; பௌதிகமாம்பொறிநானல்ல, நீங்குந்தன்மை
யுடைய உயிர்நானல்ல; நசித்தலேயே சுபாவமுடை-

யமனம் நானல்ல; அகங்காரம் நானல்ல; இருள்வடிவ மான, அஞ்ஞானம் நானல்ல; ஜீவனும் நானல்ல; இவையனைத்து மொன்றுசேர்ந்ததுவு நானல்ல; என விசாரித்துத்தள்ளி, சுயம்பிரகாசமான, ஆன்மாவால், ஜீவன்விளங்குகிறதெனத்தெரிந்து, இதன் விஷயமா யுனக்குறுஞ் சந்தேக விபரீதங்களை முற்றும், ஒழிக்க முயல்வாயாக. இன்றேல், பிறப்பிறப்பு உன்னை விட் டொழியாது;

திருக்குறள்.

"தேரான் றெளிவுந் தெளிந்தான்கணையுறவுந்
தீரா விடும்பை தரும்"

அ.—ஐய! இவ்வளவு காருண்ணியமும், அன்பு, மென்னிடத்தி லுமக்குண்டாயதற்குக் காரணம், யாதென யோசிக்கில், எனது, பூர்வஜன்ம புண்ணிய மும், தமது, திருவருள் நோக்கமுமாம். ஜநநமரண துக்க சமுத்திரத்திற் கிடக்கு மடியேனைக் கரை யேற்றி வைக்கவேண்டும். என்க்கு மிப்போது, பக் குவ முதிர்ந்துத் தானிருக்கவேண்டுமென்பது திண் ணம். தேவரீ ரெளியேனைச் சநநசாகரத்தி லழுந்தி யுழலாவண்ணம், பரிபூரண கடாட்சம்வைத்து, அடி



யேனை யாட்கொண்டருளவேண்டும். (என்று அஞ் சலியஸ்தனாய் விண்ணப்பஞ்செய்து அதிதீவிர பக் குவமடைந்தவனாய், சஞ்சலம் நீங்கி, பொருவாறு தெளிந்தினியான் குருவினாணை வழிநிற்பவ னாயினே னென, அடியற்ற பனைபோ லவர்பாதத்தில் விழுந்து துதித்து), ஐய! பாழுங் கிணற்றிலிருக்கிற, தவளை யைப்போல் நானிந்தச் சமுசார சாகரத்தி லிருக்கி றேன்; நீர் கரையேற்றுவித்தற்கு, அருகரா யிருக் கின்றீர். ஓ பகவானே! சாதுக்களெப்படி குற்ற முள்ள, சமுசார துன்பத்தை நீக்கினார்கள்; தேவரீர், உணர்ந்திராநின்ற, அந்த நிச்சயத்தை, யடியேனுக் கநுக்கிரகஞ் செய்வீராக. எனக்கு நீர்தான் கதி; இன்றுமுத லிம்மாபாவியை, அகங்காரியாகப் பாவி யாது, தங்கள் மாணவனாகப் பாவித்துத் தேவரீர் குருவாகவிருந்து, என்னை யிரக்ஷித்தல் வேண்டும். (என ஆறுமையோடு பலவாறாக ஸ்தோத்தியஞ் செய்தான்.)

குரு.—விசாரித்த சீடனது, மோக நிவர்த்தியின் பொருட்டு மிக்கவருளால் நோக்கி, விருத்தி யடங்கி னவனிவனென அறிந்தபின்னர், அபயாஸ்தங் கொடு த்தருளி, அப்பா! இனியுனக்குக் கேடேயில்லை; பவக்

கடலைக்கடக்க, ஒருபாய முண்டதனை யுனக்குக் கூறு கிறேனென, சீடனை யகமுகப் படுத்தித் தனதநுபவ மிவனு மடையக்கடவதெனக் கருதி, நோக்கி அஸ்த மஸ்தக சையோகஞ் செய்து, அருகிலுட்காரப் பணித்து அப்பா! கூறுவதைக் கவனமாய்க் கேள்; மானுட ஜன்மங் கிடைப்பதரிது.

சீடன்.—எவ்வாறரிதோ விளக்கவேண்டும்.

கு.—எங்கும் நிறைந்த பரிபூர்ணவஸ்துவை யறிதற்கிடமாயது இம்மானுடவுடல் ஒன்றேதான்;

கைவல்லிய நவநீதம்.

"அன்னைதன் சிசுவை யைய னுமைமீன் பறவை போலதை, தன்னகங் கருதி நோக்கித் தடவிச்சந் நிதிபிருத்தி,உன்னது பிறவி மாற்று முபாயமொன் றுண்டு சொல்வேன், சொன்னது கேட்பா யாகிற் றொடர்பவந் தொலையு மென்றான்."

"அடங்கிய விருத்தி யானென் றறிந்தபின் செறிந்த மண்ணின், குடம்பையுட் புழுமுன் னாதுங் குளவியின் கொள்கை போல."



தாயுமான சுவாமிகள்.

"எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதானியாதினு மரிதரிது."

"புருடர்வடி வானதே யல்லாது கனவிலும் புருடார்த்த மேது மில்லேன்."

நாராயணசதகம்.

"புருடராய் சநநம தெடுத்தபேர் மெய்ஞ்ஞான போதத்தை யறிவ தொன்று."

புருஷார்த்த மில்லாதவன் புருஷனல்ல வென்றனர்.

சீ.—புருஷார்த்தமாவது யாது?

கு.—சிற்சடமெல்லாம் பிரமமாகப் பார்ப்பதே புருஷார்த்தமாம். அஃ தில்லாதவன், புருஷனுகான். இச்சரீரத்தை நஷ்டஞ்செய்வதற்கு நான்கு காரணமுண்டு.

சீ.—அவையெவை? அருள வேண்டும்.

கு.—ஆகாரம், மைதுனம், நித்திரை, பயமுமாம். இவற்றுள், மைதுன விஷயத்தில் மகாசாக்கிரதையாயிருத்தல் வேண்டும்.

சீ—ஏன்?

கு.—இத்தேகமொரு அகலைப் போன்றதும், எண்ணெ யுதிரமும், திரி சுக்கிலமும், பிரகாசம் ஆன்மாவுமாம். ஆதலின் ஆன்மப் பிரகாசத்தைக் காணக் கோரினவன், திரிபாகின்ற சுக்கிலத்தைச் சாக்கிரதையாகச் செலவு செய்யாது வைத்தால், அகலாகின்ற தேகம் நீடித்திருக்கும். இதுவே முத்தியடைவதற்குத் தக்க கருவியாயும், வேறு தேகத்தாலடைவது, அரிதாயு மிருப்பதால் இதனைப் பாதுகாத்த லவசியமாம். அன்றியும் புருட ஞறறிவோடுங் கூடிப்பிறந்து, கூன்; குருடு, செவிடு, பேடு நீங்கிப்பிறத்தலரிது. அதனிலும் வித்துவானுப், ஆத்மாஞத்ம விவேகம்வந்து, மோக்ஷம் யாதுவென்கிற வெண்ண முண்டாவதரிது. இம் மானுடப் பிறவியாற்ருன் மோக்ஷமடைய முடியும். அம்மோக்ஷம், ஞானநிஷ்டையை யவலிம்பிப்பதாலும். ஞானம், சாது சங்கம், பிரபல சுருதி விசாரத்தினுலும், அவை யநந்தஜன்ம புண்ணியத்தாலுமுண்டாகுமே யொழிய, வேறெச் சாதனங்களினுலுமாகாது. நாசரகிதனுன பரமான்மாவைத் தெரிந்துக்கொள்ளாத மனிதன் மானிடனுய்ப் பிறந்தும், வாணுளை வீணுளாகக் கழித்து வீணேபிறந்து பூமிக்குப் பாரமாயிருந்து தற்கொலை செய்துக்கொண் டிறந்தவனுவன்;




விவேகசூடாமணி.

"உண்மையா முத்தி சேர வெத்தனஞ் செய்யா மூட
னென்றுமான் மாவைக் கொன்ருன்."

ஆதலின், நீ பிரதமத்திற், செய்யவேண்டியது யாதெனின், உனக்குச் சாங்கிய புத்தியுண்டாய் சாது சங்கமேவி சாதன சதுஷ்டயங்களைப் பெறல்வேண்டும்; அவை வந்தபிறகு, பிரமவிசாரஞ் செயல்வேண்டும். இன்றே லிந்த மேலான மோக்ஷவழிக்கு நீ யருகனுகாய்;

குமாரதேவர்.

"மேலாம் பரமன் மான்மழுவாய் விளங்கி யுரைத்தும் [விளங்காது
மேலாஞ் சாத னங்கள்வர மேவ வேண்டுஞ் சாது [சங்கம்."

ஆதலின், நீ சதா சாதுசங்கமேவி அதனுல் சாதனம் நான்கையு மடைவாயாக. வேட்கையில் லாத வுனக் கெவ்வளவு சொன்னபோதிலும் நுழையாது; நீ சிலகால மிவ்வாருன, தியானததிலிருந்து, சாதனங்களையு மப்பியசித்துவா; பரிபாகத்திற்குத் தக்கபடி சொல்லவேண்டியது சொல்லப்படும்.

சீ,—சுவாமி ! எனக்கு, ஞானமடையும் பக்குவ மின்னும் பிறக்கவில்லையா; ஆதலினு லிவ்வாறு கூறி னதா ?

கு.—இருட்டினில், கண்களுக் கறியுந்திறனில் லாததுபோல, நீ சமுசாரத்திலிருப்பவன், உனக்கு மனைவி, புத்திரர்க ளிருக்க, அவர்களுடைய பாசபந் தமும், துக்கமு மொருபக்க மிழுக்க, யான் சொல்வ தெவ்வாறு நுழையும்; அங்கு பாதிமனமும், இங்கு பாதி மனமும் வைத்தால், எல்லாம் நுழைந்தது, வால் மாத்திரம் நுழையவில்லை, யென்கிற கதையாய் முடி யும்; ஒரே காலத்தில், இரண்டிடத்தும் மனம் வேலை செய்யாது. ஆனதால் எப்போ துனக்கு, உலகந் துக்கமாகவும், பெண்டுபிள்ளைகள் விரோதிகளாகவுந் தோற்றுகிறதோ, அப்போ திங்குவந்தால், சொல்ல வேண்டிய மகாவாக்கியார்த்தத்தை யுபதேசிக்கிறேன். அதுவே பவக்கடலைக் கடக்கச்செய்து பரமானந்த நிலையை யடைவிக்கச் செய்யும்;

குமாரதேவர்.

"மனமிரு பொருளைப் பற்ற மாட்டாதட் டாவ தான
வின்மவை புறநோக் கான வேதினற் கூடும் வீடு
சுனவுண்ணேக் காகு மில்லங் கருதிய புறநோக்காகு"



சொரூபமனனம்.

"துன்பமென வுலகந் தோன்றும் விசாரதரர்க்கு
இன்பந்தர விசையு மிந்த நூல்."

பட்டினத்தார்.

"தாயும்பகை கொண்ட பெண்டீர் பெரும்பகை."

சீ—சுவாமி! மனைவியால் நான்பட்ட பாட்டை என்னுடைய, இவ்வொரு நாவினுல் சொல்ல முடி யாது. அவளின்பந்தருவதுபோ லென்னுடைய அறி வையழித்து, சமுசாரத்தையும், விருத்திசெய்து, என்னைத் துன்பக்கடலி லழுத்தவந்தவள்; மனைவி, மறலி விட்ட தூதல்லவா; இம் முப்பது வயதிலேயே, நான் சமுசாரத்தில் பட்டபாடு நாயும் படாதே; இன் னும் படவேண்டுமோ; எங்கெங்கு போனுலு மெல்லாந் துக்கமாக முடிகின்றன, அணுவத்தனை சுகத்திற்காக மலையத்தனை துக்கமநுபவிக்க வேண்டியிருக்கிறது; அக் நாளை யென்பது நமனுடைய நாளாகையாலும், அக் கினிச் சுவாலையி லகப்பட்டவன், தணிக்கத் தண்ணீர் காணுது, தவிப்பதுபோலு, மென்னுள்ளந் தீயிற்பட் டப் புழுப்போல் துடிக்கின்றது; பலங்குன்றியபிறகு;

யாதுசெய்யமுடியும். மூப்பும் மரணமு மென்தோ
ளின்மேல் காத்துக்கொண் டிருக்கின்றன. இது விஷ
யமாக அரிய துன்பத்தை யடைந்திருக்கிறேன், அடி
யேனுக்குப்பக்குவம்போதாதிருந்தால்,சற்குருவாகிய
தங்களுடைய தரிசனங் கிடைத்திருக்கமாட்டாதே;
இதனால் பக்குவமிருக்க போசிக்கப் போகாது. ஆதலி
னடியேனுக் குண்டாகிய, சந்தேக விபரீதங்களை நீக்கி
அப்பியசத்தி லிறுத்தி, மெய்யநுபவத்தை யானு
மடைய வின்றே விப்போதே அநுக்கிரகித்து,சமுசார
சாகரத்தினின்றுங்கரையேறவொரு புணைதரல் வேண்
டும். மேலும் விரும்பிய வஸ்துக்களை யடைந்தாலின்
பமும், இன்றேல் துக்கமும், நேற்றைப் போலவே
வின்றைக்குஞ் செய்ததையே செய்வதே யல்லாமல்
புதியதா யாதொன்றுங் காணப்படவில்லை; புசித்த
தே புசிப்பதும் உடுத்ததே உடுப்பதிலென்ன சுகம்.
இப்பொய்யுலகத்தி லெதுகாறு முழைத் திருந்தாலும்
பொய்யாகத் தானே, முடியப்போகிறது; இதுகாறும்
பிறவிக்கடலில் அலைப்புண்டது போதும் போதும்
சுவாமி! சிற்றின்பத்தைக் கருதி யான் மாறுவேனென
யோசிக்கவேண்டியதில்லை; அம்மகளிரது அக்கினியை
யொத்த கண்களெத்தகைய மகான்களையு மெரிக்கத்



தக்கதல்லவா. மடவாரின் சுகமெத்தன்மைத்து, எங்
குளதென விசாரியாது, அந்நியத்தி லுள்ளதென்று
நாய்போல் நம்பி, யித்தனைநாள் வீணே கழித்
தேன், சுகசமுத்திர மென்னிலேயே யிருப்பதாக விப்
போது தெரிந்ததால், அந்த முடை நாற்றமுடைய,
வெண்ணீருஞ் செந்நீரு மொழுகு மின்னாரின் கேணி
யில் மீட்டுஞ்செல்ல நினையேன்; மடவாரினின்பத்தால்
ஆ ஆ இம்மையிற் காமாக்கினியினா லெரிப்புண்டு,மறு
மையில் நரகாக்கினியை யுண்டாக்குவதாலும், பாரி
யை யுடையோனுக்கே போக விச்சையுண்டாவ
தாலும்,அவ்வுடலின் தத்துவத்தை விசாரித்துப் பார்
த்து, பாரியாள் சங்கத்தைக் கைவிட்டேன், சாது சங்
கத்தைக் கைக்கொண்டேன்; ஒன்றிலும் பற்றில்லாத
வனானேன்; தாங்களினி யாதுக்கும் யோசியாது கரை
யேற்றவேண்டும்.(என சாஷ்டாங்க தெண்டம்பண்ணி
குருவின் இரண்டு திருவடி தாமரைகளையும் ஆநந்த
பாஷ்பத்தால் அபிஷேகஞ் செய்து ஸ்தோத்திரம்
புரிந்து இரண்டு கைகளையுஞ் சிரசின்மேற் குவித்துக்
கொண்டு, அஞ்சலியஸ்தனாய் நின்றனன்.)

கு.—அப்பா! நீ நல்லகாரியஞ்செய்தாய்; பெண்டு
பிள்ளைகளை யெனதென அபிமானித்தலால், அவர்க

ளுக்குறும் துன்பத்தால், நீயுந் துயருறுகின்றனை. மேலும், புருடராகிய, மச்சங்களைப் பிடிக்க, மன்மதனாகிய வேடன், பாசமாகிய தூண்டிலில், மகளிராகிய தசையைப் பூட்டி, பிரபஞ்சமாகிய தடாகக்கரையில் நிற்கின்றான். பெண்ணை நீக்கில் உலகபந்தம் போய், பேரானந்த முண்டாகும்; விஷய போகங்களை, யிச்சிப்பவனுக்கொருகாலும், மோக்ஷம் சித்தியாகாது; வலியவந்த விஷயங்களில், ஆசத்தியில்லாமலும், உபேக்ஷையின்றியும், கிட்டாததில் விருப்பமில்லாம லிருத்தல் வேண்டும். மேலும், துன்பமுள்ள விஷம், இச்சரீரத்தைமாத்திர முபாதிக்கும்; ஆனால், விஷய விஷமானது, இத்தேகத்தையும், இனிவருந் தேகங்களையும், கெடுக்குமாதலின், விஷய தோஷ திருஷ்டியுனக்குண்டாயது அதிசயமே. காட்டில் சுயமாய் திரிந்து, யாதுக்கு மஞ்சாதிருந்த, ஆண்யானை, பெண் யானையைக் காட்டியன்றோ, பாகனால், பிடிக்கப்படுவது; அவ்வாறே, சிம்மம்போன்ற நீ, மாதர் போகவிச்சையாகிய வலையி லகப்பட்டு, சர்ப்பத்தின் வாயிலகப்பட்ட தவளைபோல், அலக்கண்ணுறுகின்றாய். ஆதலின், மகளிராகின்ற, பேய்களின் மேலுள்ள ஆசையை நீ சுயமாய் நீக்கினது மிகுந்த வுத்தமம்; இன்றேல், நீ விரும்



பிய, ஆத்மாநுபவங் கிடைப்பதரிது. சமுசார வாழ்க்கையல்லவா, துன்பங்க ளனைத்திற்கு முற்பத்திஸ்தானமா யிருப்பது;

பட்டினத்தார்.

"மாதரை முகிழ்ந்து காதல் கொண்டாடும்
மானுடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்."

"பெண்ணாகி வந்தொரு மாயப் பிசாசம் பிடித்திட் [டென்னைக்
கண்ணால் வெருட்டி முலையான்மயக்கிக் கடிதடத்து"

சந்யாஸி கீதம்.

"மாதரை மனைவியாய்க் கொள்வோ னெவனேனும்
பூரணத் திலுற காரணமே யில்லை."

திருவருட்பா.

"பேய்பிடித்தால் தீர்ந்துவிடும் பெண்பேய் விடாதே"
"இன்பமோ ரணுவளவா மிதற்கிடரோ மாமலையாம்"

உலகில், அறிவிலிக ளிவ்வாறறியாது, தங்கள் மனைவியை, சுகசொரூபமெனக்கருதி, விட்டிற்பறவை தீபத்தை, யுணவெனநம்பி வந்ததில் வீழ்ந்து, மாய்வது போல, மாய்கின்றனர். மேலு, மவள் புத்தியை

கோடிதள்ளாமல் நடத்தி, பந்துக்கள் யாவரையும் விரோதித்துக்கொண்டு, நல்லகாரியங்களி லிடுபடாது அதினின்று நீங்க, மனமெழாவண்ணம், பிணிக்கப் பட்டுக் கெடுகிறார்கள்;

திருக்குறள்.

"நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாட் பெட்டாங் கொழுகு பவர்."

இத்தேகத்திற்கோ, ஆயுள் நூறு; அதில், பாதி தூக்கத்திலும், மற்ற பாதியில், பாலபருவத்தில், அஞ் ஞானத்தா லழுந்தப்பட்டாய்; நல்ல யௌவன பருவத்தில், ஸ்திரீகளால், மிகவும் வருத்தமடைந்தாய், மூப்புப்பருவம் வந்தவுடன், சமுசாரத்தினால் தளர்ந்து, மரணமடையப்போகிறாய். இனி யெந்தகாலத்தில், முத்திக்கேது செய்வது? மேலும், நாரியர் சீலை கட்டுவது யாதுக்கெனவும், மஞ்சள் பூசுவது, யாதுக் கெனவும், புருடர் யோசித்தாரில்லை யோசித்துப் பார்ப்பாராயின், மீட்டும் நாரியரைத் திரும்பிப்பாரார்; அவள்மே லவர்களுக்கு இச்சையு மெழாது அருவருப்பர்;



பட்டினத்தார்:

"முட்டற்ற மஞ்சளை யெண்ணெயிற் கூட்டி முகமினுக்கி, மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளை யோலை விளக்கியிட்டுப், பட்டப்பகலில் வெளிமயக்கே செயும் பாவையர்மே, லிட்டத்தை நீ தவிர்ப் பாய்."

தாயுமானசுவாமிகள்.

"மெய்வீசு நாற்றமெல்லா மிக்கமஞ்ச ளான் மறைத்துப், பொய்வீசும் வாயார் புலையொழிவ தெந் நாளோ."

பத்திரகிரியார்.

"பேய்போற் றிரிந்து பிணம்போற் கிடந்து பெண்ணைத், தாய்போ னினைத்துத் தவமுடிப்ப தெக் காலம்."

பேதைக ளிதையறியாது, அப்பெண் பேய்களை நம்பி, அவளே மாதா, பிதா, குரு, தெய்வமாகப் பாவித்து, தாலிலும் விழுந்து திகைக்கிறார்கள்.

சீ.—சுவாமி! பெண்ணை யிவ்வாறு தூஷிப்பதாயின், உலகி லொருவனுக் கொருபெண்ணை, மூத்தோர்

விவாகஞ் செய்துவைப்பது யாதுகாரணம் பற்றி; சுகத்துக்கேயல்லவா?

கு.—மாந்தர், மக்கட்பேற்றிற்றானே, முற்றும் பெற்றவராகின்றாரென வேதங் கூறுவதுபோல, வமிச விருத்திக்காக, ஒரு குழவி யுண்டாகும்; அக்குழவியால், மாதா பிதாக்களுடைய, புத், என்கிற, நரகமழிந்துபோய் அதனால் மோக்ஷமடையக்கூடும். தென்புலத்தார் நீர்க்கடன் வாங்க வேதுவென்பதும், அக்கான்முளையினால், குடியின்பேர் வாழைபடி வாழைபோல் விளங்குமென்பதும், அம்மகவே, அவனது இம்மை மறுமைப் பேற்றினுக்குறியவனாவனென்பதும், மனைவி, இல்லறத்தில், கணவனுக் கூழியஞ் செய்ய, வேதுவென்பதும், சாத்திர சம்மதமும், மூத்தோர் கொள்கையுமாம். அவ்வாறே முன்னோரும் நடந்துங்காட்டியுளார். ஒரு மைந்தனிமித்தமும், ஊழியத்தினிமித்தமும், பாரியை வேண்டுமென அறியாது, சுகத்திற்கேவென பேதைகள் புலர் நினைப்பர். இந்த கஷ்டந்தான், யாதுக்கென, புத்திமான்களிதையும் வெறுத்து, சந்நியாசிகளாகிக் காட்டிற் சென்று தவமியற்றா நின்றனர். அவர்களிலு மிவன் மிகப் புத்திமான்போல வாளாயழிகின்றான். இதுவுனக்கு, யுக்த



மான வயதாகையால் உடனே விசாரிக்க முயன்று, அதனால், மனைவியாதியர்கள் மித்தையெனத் தள்ளி, மனதிலுள்ள, துன்பம், பந்தம், சந்தேகம், நீக்கி, நித்தியமான வுண்மைஞானமும், உபசாந்தமு மடைய, முயல்வாயாக.

சந்யாஸி கீதம்.

"பெற்றோர் மக்கள் உற்றோர் பெண்டீர்
இத்தகையாவு மித்தையே யென
காஞ்தார் மெய்காணா தாரே."

நல் வழி.

"முப்பதா மாண்டளவின் மூன்றற் றொருபொருளைத்
தப்பாமற் றன்னுட் பெறானாயின்."

சீ.—சுவாமி! சிற்றின்பத்திற்கும், பேரின்பத்திற்குமுள்ள பேதம்யாது?

கு.—அப்பா! சிற்றின்பமெனில், அற்பகால மின்பமாகத் தோற்றமுடைத்து; அது விடயங்களும், இந்திரியங்களும், சம்பந்தப்படுவதினால், ஆரம்பத்தில், அமிர்தம்போலவும், முடிவில் விஷம்போலவும் முடிவை யுடையது. அது, மோகத்தை யுண்டா

க்கி, நித்திரை, சோம்பல், மனக்கவலையை, யுண்டாக்குவதாம். அது, அந்நியக் கூட்டுறவி லுண்டாயதாதலின், மறையும், மீட்டும் நாளைக் கதையேதேடும்; என்றால், மாறிமாறி சுகத்தையுந் துக்கத்தையுமுண்டுபண்ணும்; விருப்பு வெறுப்புகளைத் தறத்தக்கது. ஒருவ னதனை யொருகால் விரும்புகிறான்; உடனே அதனை யவனே வெறுக்கின்றான். பேரின்பமோவெனில், அவ்வாறல்ல; ஆரம்ப காலத்து, விஷத்தைப்போல வெறுப்பாயிருந்து, முடிவில் அமிர்தம் போலவுமிருந்து, மனோவிஸ்ராந்தியைத்தருவது. ஒருவ, னதனையடைந்தால், பிறகதனை யவன் விடவும், அது இவனைவிட்டுப் பிரியவு மாகாது; ஏனெனின், அது அந்நியக் கூட்டுறவின்றி, தன்னிலேயே வுண்டவதாலும், தானே, ஆனந்த ரூபமாய் விட்டபடியாலுமாம். சிற்றின்பம், துக்கவேதுவும், பிறப்பிறப்புக் கேதுவுமாம்; பேரின்பமோ, துக்கநிவர்த்திக்கும், வீட்டைத் தருவதற்குமேதுவுமாம். சிற்றின்பம், பேரின்பத்தின் ஸ்புரிப்பு, அல்லது, பிரம்மாநந்த விலாசமெனவுந், தெரிந்து நித்திய சுகத்தை விரும்பினவன், அமிர்தபானம் பண்ணினவன், உப்புநீரை நினையாததுபோல, சிற்றின்பத்தை மீட்டும் விரும்பான்.



சீ.—விசாரமாவது யாது ?

கு.—துக்கத்தை நீக்கி, பரத்தைக் காட்டுவது விசாரமெனப்படும். அவ்விசாரம், பரம், அபர, மென விருவகையா யுள்ளது. பரமெனின், ஆரம்பவிசாரம், அபரமெனின் முடிவான விசாரம்.

சீ.—சுவாமி! இத்துக்கம் ஏன்வந்தது ?

கு.—சரீரத்தை, நானென்பதினால் வந்தது; சரீரம், கருமத்தினால் வந்தது; கருமம், இராகத்துவேஷத்தினால் வந்தது; இராகாதிகள், அபிமானத்தினால் வந்தன; அபிமானம், அவிவேகத்தினால் வந்தது; அவிவேகம், அஞ்ஞானத்தினால் வந்தது; ஆகையால், அந்த அஞ்ஞானம், ஞானத்தினால்; நிவர்த்தியாகும்; ஞானம் விசாரத்தினாலேயே யுண்டாகும். ஆதலின், சுருதி, குரு முகமாக, நானார், உலகுதிப்ப தெவ்விடம், சுகதுக்க மேன்வந்தன, மோக்ஷமாவது யாது, அதுவருவதெப்படி, ஆசையினத்துநீங்கி விஸ்ராந்தியடைவதெப்போது, என்று விசாரிப்பதே விசாரம். ஆதலால், ஆத்மசுகத்தை விரும்பினநீ ஞானசித்தியின் பொருட்டு, சித்தையுஞ், சடத்தையும், விசாரித்து, சடத்தை நீக்கி, சித்தாயிருக்க முயல்வாயாக;

## கைவல்லிய நவநீதம்.

இந்த ஞானந்தான் வருவதெப் படியெனி லிடைவிடா விசாரத்தால், வந்த டைந்திடும் விசா ரந்தா னேதெனின் மனுதியாஞ் சரீரத்தி, லிந்த நா னெவன் சித்தெது சடமெது விரண்டுமொன் றுகே கூடும், பந்த மேதுவீ டேதென வுசாவுதல் பகர் விசாரம்"

சீ.—சுவாமி! பேர்கூறியவைகள், நன்றாய் விள ங்கவில்லை; விளக்கி வைக்கவேண்டும்.

கு —அப்பா! இந்த விசாரத்தினலேயே, பவத் துன்பங்கள் நீங்கும். அது, எல்லாருக்குமே, தோன் றுது; பலஜன்மங்களில், ஈசனை யுபாசித்தவர்க்கே வுதிப்பதென, நீ யறிவாயாக;

## ஒளவைக்குறள்.

"பல்லூழி காலம் பயின்றானை யர்ச்சித்து
நல்லுணர்வு பெற்ற நலம்"

மேலுமித்தேகமானது, பஞ்சபூத பௌதிக, சையோகத்தாலாயது; அப்பஞ்சபூதமும், பௌதிக மும், மாயாகாரியம்; அம்மாயை, அவாச்சியம்,



அல்லது, மித்தையெனப்படும்; என்றுளது போற் றேன்றி, விசாரணையிலில்லாமற் போவதே, மித்தை யாதலின், தேகம் நீயல்லை; தேகத்திலுள்ளும் புறமும் நிறைந்திருப்பதுவே அறிவு; அவ்வறிவு, சுயஞ்சோ தியாதலின், அதனாற் பிரகாசிக்கப் படுந்தேகத்தை, எங்ஙனம் நீ என்னலாம். நீ தேகமல்ல வாகையா லுன க்கு பிறப்பிறப்பில்லை; நீ அகங்காரியல்ல வாதலின் உனக்குப், பசிதாகமில்லை; நீ மனதல்லவா தலினுனக்கு சுகதுக்க மோகாதிகளில்லை; நீ கருத்தாவல்லவா தலி னுனக்கு பந்தமோக்ஷமில்லை; மேலும், அனுபவிளக் கம், இவ்வுடலிலாதலின், இவ்வுடல், பாபபுண்ணிய த்தால், சம்பவித்த, போகங்களை யனுபவிக்கச், சாத னமாயிருப்பதால், இத்தேகத்தை, க்ஷேத்திரமெ ன்றும், அந்த க்ஷேத்திரத்தைத், தனதென்று கொ ள்ளப்பட்ட, அறிவை, க்ஷேத்திரக்ஞனென்னவுங்கூறு வர். மேலும், உன்னை, நீ, இன்னானென்று அறியாது நானாரெனக்கேட்பது, அதிசயமாயிருக்கின்றது;

## தாயுமான சுவாமிகள்

வான்காண வேண்டின் மலைமேற வொக்கு முன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம்.

சோருபசாரம்.

"தன்னை யறியாமற் றானே தனைத்தேட [ற்
லென்ன புதுமையிதை யென்சொல்வேன்-மன்னுலகி
றண்ணீரி னின்றுகொண்டு தாகந் தணியார்போல்"

சீ.—க்ஷேத்திரமாவதுவெது? க்ஷேத்திரக்ஞன் யார், விளக்கியருள வேண்டும்.

கு.—பூதமைந்தும், பிராணாதிகளைந்தும், சோத்திராதியைந்தும், வாக்காதியைந்தும், மனமாதி நான்கும், ஆக 24-தத்துவங்களினாலாயதும் பாபபுண்ணியத்தை, யனுபவிக்கச் சாதனமாயிருக்கு, மித்தேகமே க்ஷேத்திரமெனப்படும். இது நசிக்குந்தன்மையுடையதாகலின் இதுக்ஷரமெனவும்படும். க்ஷேத்திரக்ஞன், இந்த க்ஷேத்திரத்தைத் தனதென அறிபவனையும் நாச ரஹிதனையும், ஆன்மாவாயும், புத்தியில் பிரதிபலித்து, பிரகாசிக்கின்றவனாயு மிருக்கும் சைதன்னியமாம். இது அக்ஷரமெனப்படும்; இது, தொம்பத லக்ஷியார்த்தமான், கூடத்தனே—: ஆன்றோர்.

"அக்ஷர மென்ன வரை பொருள் யாதெனின்[படும்"
க்ஷரமெனில் நாசம் அக்ஷர நாசமில் பொருளெனப்



சீ.—சுவாமி! அவனும் நானும், அபேதமாயிருப்பதெப்படி; அவனைப்போலெனக்கு சிருட்டியாதிகிருத்தியமும், சகல சத்திகளு மில்லையே?

கு.—அப்பா! மாயை, யவித்தையெனப் படுகிற, உபாதிகளினால் சீவேஸ்வர, பேதங்காணப்படுகிறது.

சீ.—அஃதெவ்வாறு, விளக்க வேண்டும்.

கு.—மாயோபாதிகன் ஈசுவரன்; அவித்தோபாதிகன் சீவன். அல்லது, காரியோபாதிகன் சீவன், காரணோபாதிகன் ஈசன். பிரமசைதன்னியம் அவ்விரண்டுபாதிகளிலும் பிரதிபலித்து நின்றது. வெறும் பெயர் மாத்திரமாயுள்ள இச்சீவேசுவரர்கள் வாச்சியார்த்தமும், கூடத்த பிரமமே, இலக்கியார்த்தமாம். மேலும், தொம்பதலக்ஷியார்த்தமானது,நான் தூலதேகத்தோடு, அகங்காரத்தைப் பொருந்தி குடும்பவழக்கிலிருக்கிறேனென ஆரோபிதனு செய்துக்கொண்டபிமானித்து, சீவனுக்கு சாக்ஷியாயிருப்பதாம். இச்சீவனே தொம்பதவாச்சியார்த்தம். தத்பதலக்ஷியார்த்தமானது,உலகங்களை சிருட்டித்து அந்தர்யாமியாகப் பிரவேசித்து, பிரமன் முதலியவர்களின், புத்தியிந்திரியங்களுக்கு, நியாமகனையும், ஈசனுக்கு சாக்ஷியாயி

ருப்பதாம். இவ்வீசனே, தத்பதவாச்சியார்த்தமாம். பிரமத்தில், சீவத்தன்மையும், ஈஸ்வரத் தன்மையும் கற்பனை யென்றே அறி. சீவிக்குந்தன்மையாதலின், அதனை சீவனெனப்பட்டது. அப்பிரம மொன்றே, அவ்விரண்டிலுர், தோற்றுவதால். அது, தேகேந்திரிய, உபாதியைக் காட்டிலும் பின்னமென்றும் த்ரிதியனென்றுந்தெரி. மேலும் தண்டுலமானது, உமியால் மூடப்பட்டுள்ளபோது, நெல்லென்று சொல்லப்படுகிறது. அதுபோல பிரமம், கருமபந்தத்தால், மூடப்பட்டுள்ளபோது, சீவனெனச் சொல்லப்படுகிறது. உமிநீக்கத்தில், அரிசிவிளங்குவதுபோல, கருமபந்த நீக்கத்தில், பரம் விளங்குகிறது. மேலும் மகாகாசமே. கடாகாசமும், கடாகாசமே மகாகாசமாவதுபோல, சீவாத்மாவே பரமாத்மா, பரமாத்மாவே சீவாத்மாவென, நீ அபேதமாகக் காண்பதே ஞானம். மேலும் பொன்னாலாகிய வுருவங்கள் பொன்னேயாவதுபோல, பிரமத்திற்றோற்றும் சீவன், பிரமமேயாம், பேதமுரைப்பவன் மூடன். ஆனால் மகாகாசம், கடாகாசம, மடாகாசமெனப் பலவாகக் கூறவந்தது உபாதியை பற்றியே; அவ்வுபாதிகளை நீக்கிலவற்றிலிருந்த வாகாயமொன்றே. மேலுஞ், சொர்ணத்தினின்றமுண்



டானவைகளுக்கு, சொர்ணத்தன்மை சாசுவதமாம் போல, பிரமத்திலுண்டானவைகளுக்கு, பிரமத்தன்மை, சாசுவதமாகுமாதலின் சீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் சிறிதாயினும் பேதங்கற்பித்துக் கூறலாகாது. இதில் சந்தேகமில்லை; ஆதலின் நீயே, சகலமும், உனக்கன்னியமாக ஒன்றுமில்லை. அன்னியமாக, உளதுபோல் தோற்றுவதெல்லாம், திரிசியமா, யழியுமென்றறி. மேலும், ஈசனது கிருத்தியம், சிருட்டியாதி பஞ்சதொழில்கள்; அதுபொதுவாயுள்ளது. சீவனது சிருட்டி, அகந்தை, அபிமானம், கோபம், ஆசைமுதலியனவாம். மேலும் தேகம், அசத்து, சடம், துக்க, மென்னும்லக்ஷணங்களை யுடையது; அதுசடமாயும் ஆரோபிதமாயு மிருப்பதால், அதற்கதிஷ்டானமாயுள்ள வுன்னாலது, அறியப்படுதலினாலும், தேகத்தை யெவ்வாறு நீ என்னலாம். அது எவ்வாறு, தானே வரும், போகும், நினைக்கும், இதில் ஒருபுருடனிருந்து, சூத்திரதாரிபோல ஆட்டுகிறதாகத் தோற்றவில்லையா?

கைவல்லிய நவநீதம்.

“பூச்சிய வீசன் சீவன் புகல்பத மிரண்டி னுக்கும்
வாச்சியம் லட்சி யந்தான் மலமிலாப் பிரம மான்மா.

"கடமெனு முபாதிபோனற் ககனமொன் ருனற்போல
வுடலெனு முபாதி போனு னுத்தாஞ் சீவன்முத்தன்"

சசிவர்ணபோதம்.

"ஐக்கியப்பர சீவர் தங்க ளுடம்பிரண்டுமி லக்கணு
வாக்கியப்படி நீக்கி ஞலொரு வத்து வேபர 'வத்
[துவே"

"கிடக்கும் நடத்தா விடத்திவ் வுடம்புங்
கிடக்கு மொருத்தன் நடத்தா விடத்தே."

தாயுமானசுவாமிகள்.

"அப்பொருளு மான்மாவு மாரண நூல் சொன்னபடி
தப்பிலாச் சித்தொன்ருஞ் சாதியினல்"

சந்யாஸி கீதம்.

"நாமரூபமா மிவற்றிற் கப்பால்
என்றுந் தடையற நின்றுள தான்மா
அதுவே நீயென் றுணரக் கடவாய்"

ஆதலின், ஆட்டுவிப்போன், வினைப்பூட்டி வைப்போன், நடத்திவைப்போனன, ஆத்மா வொருவன், பிரதிதேகத்திலு முண்டு. திரிபதார்த்தமான, ஜகஜீவபரமும், அப்பரவத்துவே.



சீ.—அஃதெவ்வாறு?

கு.—அக்கினியினின்று, அதற்கு நிகரான, அநேகப்பொறிகளுண்டாவதுபோல, பிரமத்தினின்று, அநேகவித தேகத்தையுடைய, சீவர்களுண்டாகிருர்கள். சமுத்திரத்தினின்று, நுரை, அலை, திவலைகளுண்டாய் மீட்டும், அச்சலமேயாவதுபோல, பரமான்மாவிலிருந்து, வுண்டான நானா சிருட்டிகளும், மீட்டும், பிரமத்திலேயே, லயமடைகின்றன. அத்தேகியான ஆன்மா, சத்து, சித்து, ஆநந்தமென்னும், லக்ஷணங்களையுடையது.

சீ.—சத்து, சித்து, ஆனந்தம், என்பனயாவை? விளக்கவேண்டும்.

கு.—சத்தாவது, முக்காலத்திலு, மொன்றினும், பாதிக்கப்படாம லிருந்து கொண்டு, ஒரே, ரூபமாயிருப்பது; சித்தாவது, சூரியன் ஒன்றினெளியையபேக்ஷியாமல், கடபடாதிகளை விளக்குவதுபோல, ஆத்மா ஒன்றினெளியை யபேக்ஷியாமல், தானேவிளங்கி, சூரியசந்திரர்களையும், சகல, பிரபஞ்சத்தையும், பிரகாசிப்பிப்பது; ஆனந்தமென்பது, நித்தியமாயும், நிருபாதிகமாயும், நிரதிசயமாகவிருக்கிற சுகம்.

சீ.—சுவாமி! பரமாத்மா குணரகிதனென, சாத்திரங்களில் கூறியிருக்க, எவ்வாறு முக்குணங் கூறத்தகும்.

கு.—பிரமத்துக்கு, மூன்று லக்ஷணங்களைக் காட்டியது, அந்த குணியாகின்ற சொரூபத்தை, யுணரும் பொருட்டேயென்றறி.

சீ.—பிரமத்துக்கும், கூடத்தனுக்கும், ஒற்றுமை யெவ்வாறு கூறத்தகும்.

கு—மகாகாசமெனப் படுமொன்றில், மடாகாசம் கடாகாச, மிவைகளினொற்றுமைபோ லென்றறி. அப்பரமான்மாவில், சகல பிராணிகளும், உலகங்களும், மூர்த்திகளும், பஞ்சபூதங்களும், கட்டையிற்கள்வன்போல், தோற்றமே. அப்பரமான்மா, வொன்றுதானுள்ளதெனவு, மிரண்டாவதாவது வில்லை யெனவுமறி. அது, சுசாதி, விசாதி, சுவகதபேத, மிறந்ததாதலினாலும், வேதவாக்கியமும், "ஏகமேவாத்விதீயம் பிரமம்" எனக்கூறிற்று. அதற் கன்னியமாகக் கூறுவதெல்லாம், ஆரோபிதமே.

சீ.—அஃதெவ்வாறு.



கு.—கடகல சாதிகளான காரியங்கள், நாமரூபங்களால், வெவ்வேறா யிருந்தாலும், காரணமான மண்ணைத் தவிர இல்லை; மண்ணொன்றே வுள்ளது போல, தோற்றல் மாத்திரமாயுள்ள, அண்டங்கள் பலகோடியும், எண்பத்து நான்கு லக்ஷம் ஜீவராசிகளும், பலவாக நாமரூபங்களால், வேறுபட்டிருந்தாலும், அந்த பரமாத்ம சந்நிதியில், வெறுந்தோற்றல் மாத்திரமாய்த் தோன்றி, மீட்டுமப்பிரமமேயாம். ஆகாசமெப்படி, யுபாதியைப்பற்றி, வேறுவேறாகச் சொல்லப்படுவதோ, அப்படியே, ஆன்மாவானது, சீவேசுவரராக, பிராந்தியினால், கூறப்படும். ஆதலின், சீவனது சொரூபம், பரசொரூபமே.

சிவஞானபோதம்.

"சத்தசத் தறிவ தான்மா தான்சத்து மசத்து மல்ல"

சீ—பிரமம், சுசாதி, விசாதி, சுவகதபேதமிறந்ததெனக்கூறினீர்; அஃதெவ்வாறு விளக்க வேண்டும்.

கு.—சுசாதியென்பது, சொந்தசாதி; அஃதாவது, கல்லுக்கு, மற்றோர்கல் சொந்தசாதியெனப்படுவதுபோல, பிரமத்திற்கு, மற்றொரு பிரமமிருக்குமாயின், சுசாதியேற்படும்; அவ்வாறில்லையாதலின்,

பிரமம் சுசாதி ரகிதமாம். விசாதியென்பது, அந்நிய சாதி; அஃதாவது, கல்லுக்கு பரப், அந்நியசாதியே னப்படுவதுபோல, பிரமத்துக்கன்னியமாக வேறுசாதியான வேறுவஸ்துவு மிருக்குமாயின், விசாதியேற்படும்; பிரமத்திற்கன்னிய "மில்லையாதலின்," விசாதி ரகிதமாம். சுவகதபேதமென்பது, மரத்தினிடத்துண்டாகும், பூ, காய், கனி, இலைகள், போன்றது.

சீ.—சுவாமி! பிரமத்தினிடம், பஞ்சபூத பௌதிகமிருக்கின்றனவே, சுவகதபேதமேன் கூறலாகாது.

கு.—அவையாவும், அதிஷ்டானமான, பிரமத்தைத் தவிர, இல்லையாதலினாலும், அப்பிரம சந்நிதியிலவை, வெறுந்தோற்றல் மாத்திரமாயிருத்தலினாலும், அது சுவகதபேத ரகிதமேயாம். ஆதலின், வேதமானது, பிரமத்தை, சுசாதி, விசாதி, சுவகதபேத ரகிதமெனக் கூறிற்று.

சீ—சுவாமி! சிருட்டியாதி, கிருத்தியங்களைச் செய்வதுயார்?

கு.—அப்பா! "ஏகமே வாத்விதீயம் பிரமம்"என்றதினால், பிரமமென்ப தொன்றேவுள்ளது. அதுவே, தொம்பத வாச்சியார்த்தத்தில், ஜீவனெனவும், தத்பத வாச்சியார்த்தத்தில், ஈசனெனவும் வழங்குவது. அப்பிரமமே தொம்பத லக்ஷியார்த்தத்தில், கூடத்தனெனவும் தத்பத லக்ஷியார்த்தத்தில், பிரமமெனவுங் கற்பனையாக விளங்குகிறது. ஆதலின் சிருட்டியாதி கிருத்தியங்கள், அப்பிரம சந்நிதியில், காந்தக்கல்லின்முன், இரும்புகள் சேட்டிப்பதுபோல, ஈசனென்னும் போனே, நடத்துவதாகத்தெரி. இதுநிற்க, உனக்கு சொப்பனம் வருவதுண்டா?

சீ.—ஆம். வருவதுண்டு.

கு.—நீ, சொப்பனத்தில் சூக்ஷ்ம சரீரத்தைப் பொருந்தி, பதினேழு தத்துவங்களுடன், படுக்கையிற்றானே யிருந்தாய்.

சீ.—ஆம், அப்பதினேழு தத்துவமாவது எவை? அருளவேண்டும்.

கு.—வாயுக்களைந்தும், ஞானேந்திரியங்களைந்தும், கன்மேந்திரியங்களைந்தும், மனம், புத்தி, ஆகிய பதினேழாம். ஆங்கொரு பட்டினமும், எண்பத்துநான்குலக்ஷம் ஜீவராசிகளும், மலைகளும், சமுத்திரமும், விருக்ஷங்களு மின்னுமனேகமாக, உனக்கங்கே

தோன்றினதல்லவா. அவைகளை யுனக்கன்னியமாக, நீபார்த்து, ஆங்கு தோன்றின, ஒரு பொம்மையை, உன் மனைவியாகவும், ஒரு பொம்மையை, மைந்தனாக வும், மற்றொன்றை, பகைவனாகவும், இன்னொன்றை, மித்துருவாகவும் கண்டு, நீ, அவைகளுக் கன்னிய மாகவு மிருந்து விவகாரஞ்செய்தனையே, அவைகள் வந்தவாறெப்படி; இப்போ தவைகள், எங்கே போ யின. மேலும், ஆத்மாவிலுண்டாய, சகல வடிவங் களிலு மிருப்பது, அறிவொன்றேயாதலின், அவற்றி லொன்றை, டகையென்றும், மற்றொன்றை யுறவென் றுங் கூறுவது விவேகந்தானோ.

சீ.—இங்கு, விழிப்பில், யாது, யாதுகாண்கின் றேனோ, அவையனைத்தும் ஆங்கு, மனோசங்கல்பத் தால் தோன்றி, மறைந்தன.

கு.—அந்த சொப்பனவத்தையி லவைகளைச், சிருட்டித்து, இரக்ஷித்து, சங்கரித்ததுயார்?

சீ.—என்னைத் தவிர, ஆங்கொருவரு மில்லாத தினு லென்பனமேதான் அம் மூன்று கிருத்தியங் களையும், நடத்தியதாகக் கூறவேண்டும்.



கு.—அப்பா! ஜீவனுக்கு மூன்றவத்தைகளுண்டு. அவை சாக்கிர, சொப்பன, சுழுத்தியாம்; அவற்றின், அபிமான நாமமும் முறையே மூன்றுள; அவை, விஸ் வன், தைசதன், பிராஜ்ஞ னெனவுமாம். அவற்றி லிது, சாக்கிராவத்தை யாதலின், இதனைத் தூலதேக மெனவும் இருபத்துநான்கு தத்துவங்களையுடைய தெனவும், இதனை யபிமானிப்பவன், விஸ்வனென வும், இதனை தீர்க்க சொப்பனமெனவும், நித்திய பிர ளயமெனவுங் கூறுப. நீயாகின்ற, சிதாகாயத்தில், நானுவிசித்திரங்களை யுடைய வுலகங்களை நிர்மாணஞ் செய்யும் சாமர்த்திய முடைய மனோரூபமான பிரம சத்தியே, பிரகிருதியாகிய மாயையினுல் ஜக, ஜீவ பர மென்னுமிந்திரஜாலத்தை சிருட்டித்தது. அத னுல் பிரபஞ்சம், இரக்ஷித்து சங்கரிக்கப்பட்டதாகத் தோற்றுகிறது;

சோரூபசாரம்.

"சிற்சொருபந் தானே செகசொருப மானவெலாந்
தற்சொருப சாரமாய்ச் சாற்றவே."

"தன்னிடத்தி லேதோன்றித் தன்னிடத்தி லே யிருந்து, தன்னிடத்தே கூடுஞ் சகத்தெல்லாந்-தன் னை விட, வேறன் றெனக்காண்ப ரல்லால்,"

இச்சகம், வேறு யிருப்பதுபோற் றோற்றுவ தேயன்றி விசாரிப்புழி, பிரமத்தைத் தவிர ஜகமே இல்லை.

சீ.—பிரத்தியக்ஷமா யுள்ளதை யில்லை யென லெவ்வாறுகூடும்?

கு—கானற்சலம் போலும் கண்ணுடியிற் றெரிகின்ற நிழலைப்போலும், தோற்றமேயாம். மேலும், சிலந்திப்பூச்சு, தானே நூலிழைத்து, காத்து, கிரகித்துக்கொள்வதுபோல, சிருட்டியாதி, முத்தொழிலும், ஆத்மாவினுலேயே யுண்டாகி, அதிலேயே லயமடைகின்றன. அச்சேதனனது, பகிர்முக சங்கல்ப வுல்லாசமே, உலகோற்பத்தியும், அதன் சாந்தமே ஜக சாந்தமாம். ஆதலின், காணப்படு மிந்தப் பிரபஞ்ச முழுவதும் ஆன்ம வியாபகத்தி லுண்டான ஸ்புரண விசித்திர மென்றுணர்வாய். சிருட்டிக்குமுனெருவராக விருந்த ஆன்மாவில், அபின்னமாயுள்ள சிற்சத்தியே அபின்னமான பிரகிருதிமுதல், ஜீவேசுவர தேகங்களான சராசரப் பிரபஞ்சங்களைப் பிரமத்தில் அபின்னமாகவே தோற்றிவைத்து, அவைகளில் தான் அநுப்பிரவேசித்தா னென்றறி யொன்



னைத்தவிர, பூஷணுதிக ளின்றுதல்போல, ஆத்மாவையன்றி, மும்மூர்த்திகளு மிந்திராதி தேவதைகளும் சீவர்களும் காலன், சூரிய, சந்திரர்கள், அசுர பிசாசு, ஸ்திரீகள், பசு, பக்ஷி, ஸ்தாவரஜங்கமமில்லை. அவை, கட்டையிற் கள்வன்போல் பிரமத்தில் வெறுந்தோற்றமே யாகும். மேலும் ஈசனுக்கும், ஜீவனுக்கும் சமட்டி வியட்டியால் பேதங்கூரணப்படும்.

சீ.—அஃதெவ்வாறு? விளக்கவேண்டும்.

கு.—ஈசன், சமட்டியோபாதிகன்; சீவன், வியட்டியோபாதிகன். சகலமான தேகங்களும், ஈசனுக்கோர் தூலவுடலாதலின், சமட்டியாம். தனித்தனி தேகத்தை, நானென்பதால், ஜீவன், வியட்டியாம். எதுபோலெனில், ஒரு விருக்ஷத்தை மரமென்றும், அனேகமரங்கள் கூடியவிடத்தை, தோப்பெனல் போலுமாம். மேலும், தீவட்டியின் ஒளியால் வீதிமுழுவதும் பிரகாசிப்பதும், ஒரு, திரியின் ஒளியால், ஒரு வீடளவு, பிராகாசிப்பதும் போல, ஈசன், சர்வஜ்ஞன், ஜீவன்கிஞ்சிஜ்ஞனெனவுங் கூறத்தகும். ஆத்மா, மாயையினுல், மோகிக்கப்பட்ட, அந்தக் கரணத்தையுடையதாய், அஞ்ஞானதிசையில், சரீரத்தை யடை

ந்து தன்னைமறந்து, சகலத்தையுந் தானேசெய்து,
ஆரோபிதமான, ஜகச்சித்திரங்களை யயலாகக் கண்டி
ருப்பன். ஞானதிசையில் சாக்ஷியாயிருப்பன். மேலும்
வரிஜலம், குளத்து ஜலம் என்பவைகளுடைய வுபா
திகளை நீக்கி ஜலசாட்டமாகப் பார்க்கும்போது, ஏக
மேயாவதுபோல, சீவனுடையவும், ஈசனுடைய வுமு
பாதிகளை நீக்கி சேதன நாட்டமாகப் பார்க்கும்
போது, ஏகமே. அவ்வாத்மா, சத்விலாசமான, சாக்
கிராவத்தையில், ஸ்திரீ, அன்னபானாதி, விசித்திர
போகங்களினால் திருப்தி, திருப்தியின்மையு மடைகி
றான். சித்விலாசமான, சொப்பனத்தில், மாயையி
னால், கற்பிக்கப்பட்ட சொப்பன வுலகத்திலும், அவ்
வாறே திருப்தி, திருப்தியின்மையை யடைகிறான்.
ஆனந்த விலாசமான சுழுத்தியில் அஞ்ஞானத்தினால்
சூழப்பட்டவனாய், தன் சுகசொரூபமாய் விளங்கு
கிறான். ஆதலின் சாக்கிர, சொப்பன, சுழுத்தியாதி,
அவத்தாத் திரியங்களை தானே சங்கல்பித்துக்கொ
ண்டு, விளையாடிக்கொண்டிருக்கிற ஆத்மா வொரு
வனே.



ஞானவாசிட்டம்.

"தெரிபொருளென் றுளதல்ல பொய்யுமல
சொப்பனத்தின் றிரள்போற் றோன்றும், தெரிபவன்
கேட் போன்சொல்வோன்பரிசிப்போன் மணங்கொள்
வோன் செல்வோன் மீள்வோன் புரிவன வெல்லாந்
தானே."

ஆத்மா, பிரணவ சொரூபியாதலினாலும், அதுவே,
சகலத்துக்கு மாதாரமா யிருப்பதினாலும், அவ்வாத்ம
ஸ்புரிப்பே, மனமாதி அந்தக்கரணங்கள். அதினி
டம், ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், சகலத்தையுந்
தாங்குகின்ற, பூமி யிவைக ளுண்டாயின;

தத்துவநிஜானுபோகசாரம்.

"அவ்வுட னுவ்வு மவ்வு மனம் புத்தி அகங்
காரங்கள், செவ்விய விந்து நாதஞ் சித்தமொ டுள்ள
மாகு, மௌவ்வெனு மெழுத்தா மைந்து முணர்வுதித்
தொடுங்குமாறு, பௌவமுந் திரையும் போலும்
பார்க்கிலிப் பண்பு தோன்றும்."

சொரூபசாரம்.

"சங்கற்ப சாலச் சகத்தோற் றரவையெலா
மிங்கற்ப மென்னு திழிவரே."

ஆதலி, னிவையாவும் பரமாத்மாவின், அபின்ன சிற்சத்தி சங்கற்ப வுல்லாசமே விசித்திரமான ஜகமாக தோற்றுகிறதென் றுணர்வாயாக:—ஆன்றோர்.

"ஒன்றுஞ் சத்தின் சித்தினிடத் துண்டாஞ் சித்தம் சகமாகி, நின்றே பலவாய் விரிகின்ற நாம நாம ரூபம்."

சொரூபசாரம்.

"என்னைத் தவிரமற்றிங் கேதுமிலை யென்றணை
பொன்னைத் தவிரவிலாப் பூடணம்போல்"

குமாரதேவர்.

"நாமவாகத் தோன்றியிடு நாமரூப மிவையனைத்தும்
நாம வல்ல வொருநாமே நாடி மகிழுஞ் சித்திரங்கள்
தானுஞ் சித்தாகாசத்திற் றன்னைத் தானே தான்றானே
தானுங் கருவி யினில்வரைந்து தானே நோக்கி மகிழ்ந்
[திடுதல்."

சந்யாஸிகீதம்.

"ஆண்பெண் ணில்லா வான்மாவானது
எவர்க்கே தந்தை எவர்க்கே மைந்தன்
எவர்க்கே பகையது எவர்க்கே வுறவது."



தாயுமானசுவாமிகள்.

"அற்ப மனமே யகிலவாழ் வத்தனையுஞ்
சொற்பனங்கண் டாயுண்மை சொன்னே னுன்."

கைவல்லிய நவநீதம்.

"கற்பனை வந்த வாறு காட்டினோங் காண்ப வெல்லாஞ்
சொற்பனம் போல வெண்ணி துணிந்தவன் ஞானி
[யாவான்."

அத்துவித கீர்த்தனம்.

"கற்பிதமாம் மறுசிகையில் கானல் சலங் காணும்
அப்படிப்போ லிப்பிரபஞ்ச மறிவிடத்தே தோணும்"

ஞானவாசிட்டம்

"சராசரமா முலகனைத்து மன்று பத்தாற் றூன்
செய்யும் விளையாட்டாஞ் சகமாய் நின்றும்"

"தன்னைத்தானே வெவ்வேறுச் சமைத்துக்
கண்டு, விளையாடும்"

அப்பரமான்மாவான பிரமசாசத்தி னின்று டரப், அடரப், அல்லது பின்னை, அபின்னை யென்கிற விரண்டு அலைசளுண்டாயின. பின்னசத்தியால், திரிசடம் விளங்குகிறது; அபின்னசத்தியால், திருக்கு

விளங்குகிறது. இத்திருக்கு, ஜீவ, ஈசனென இருவகைத்தாம். சூரியன் இச்சையின்றியே வருஷகிரணத்தினால் வருஷித்தும், பனியால் பாதுகாத்தும், தனதுஷ்ண கிரணத்தால் நீரைவற்றச் செய்தும் தான் சாக்ஷியாயிருத்தல்போல, ஈசனுக்கு சிருட்டியாதி வியாபாரங்களும், ஜீவனுக்கு ஜநந மரணவியாபாரமும் கற்பிதமாகத் தோற்றுகின்றன. இவையனைத்தும் ஞானாகாரமான ஆத்மவறிவில் கற்பிதமாம். ஆதலால் ஆன்ம சத்திய சொரூபனுக்கிவை யன்னியமுமல்ல வுண்மையுமல்ல; அறிவின் திருஷ்டியிலிவை வெறுந்தோற்றமேயாம். சிருட்டிக்குமுன் சத்தாமாத்திரமாயும், சுதோதயமாகியும், பிரகாசிக்கின்ற பிரமத்தின் சந்நிதி மாத்திரத்திலேயே வுலகம் உற்பத்தி, திதி, நாசங்களடைகின்றன. இம்மூன்றிலும் அதிஷ்டான சைதன்னியம் சாக்ஷியாயுள்ளதென்றறி. மேலும், இவ்வவத்தாத்திரயம், ஆன்மவறிவில் தினமும் கறங்குபோல் சுழன்று வருவது; அல்லது, சித்திரபடத்தை விரிப்பதும் சுருட்டுவதுபோலுமாம். சைதன்னியமான ஆன்மா நிரவயவமானதால் உலகம் தானுமாகாது, தன்னையன்றி யுலகமில்லாது வுலகவுற்பத்திக்குத் தான்கர்த்தாவும்,



போக்தாவு மாகானென்றறி. மேலும், சுழுத்தியை நித்திய பிரளய மென்றதினால், தினமும் பிரகிருதியிலயமடைந்து, மீட்டும் உலகம் சங்கற்பத்தால் சிருட்டியாகிறது. ஆதலி னுன்னினைவில் தோன்றி, நினைவுமாறும் போது (சுழுத்தியில்) திரிபதார்த்தமும், லயமடைவதா லுன்னினைவளவே ஜக, ஜீவ, பரம், ஜனன, மரணமுமாம்.

தத்துவநிஜாநு போகசாரம்

"அஞ்சு தொழி லாவதுவே பஞ்சவத்தைக் கிஞ்
சகிலா, அஞ்சிடத்துங் கொள்ளிவட்ட மாகவே-பஞ்
சவர்ணம், வைத்த படிகம்போல் மாறா துனை மயக்
கல், சித்திரக் கூத்தாய் தெளி"

திருவாசகம்.

"ஒன்று நீயல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே"

குமாரதேவர்.

"தோன்றிடு முலக மெங்கே தோன்றிடு மென்ன
நோக்கித், தோன்றிடு நினைவி லென்றே தோன்றறிய
நினைவு தானுந், தோன்றிடு மிடத்தைப் பார்த்துத்
தோன்றிடுஞ் சொருபத் தென்றே, தோன்றிடும் பொ
ருள்க ளெல்லாஞ் சொருபமே யென்று கண்டான்"

"தானுண் டாகி னுலகுண்டாங்
தானுண் டாகி னுயிருண்டாம்
தானுண் டாகிற் பரமுண்டாங்
தானுண் டாகில் வீடுண்டாங்
தானுண் டாகிற் பஞ்சதொழிற் றானுண்டாகும்"

சீ.—சுவாமி! உலகினுயிர் பிரிந்தால் மீட்டும் வருவித்துத்தருஞ் சத்தி, ஜீவர்களி லெத்தகையினருக்கு மிருக்கக்காணோமே.

கு.—அப்பா! பிரிந்த வுயிரை யெழுப்பித் தந்ததாகப் புராணங்களில் நால்வர், சங்கரர், ஆள்வாராதிகள், கிறிஸ்து, மகமது, முதலிய சித்புருஷரைப் பற்றிக், கூறியுள்ளதை யறியாது வினவினாய். மேலும், அவ்வணிமாதி யதிசயம், வியக்கத்தக்கதே.

சீ.—அஷ்டமா சித்திகளெவை? விளக்க வேண்டும்.

கு.—அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவமாம்.

(1) அணிமா என்பது, பரமாணுவைப்போல தேகம் சூக்ஷ்மமாதல்; (2) மகிமா, ஆகாயத்



தைப்போலும், உயர்ந்த மேருவைப்போலும், தேகம் பெரிதாதல்; (3) கரிமா, அணுப்போலிருக்கு மவைகளை, தூக்கினால், மேருபாரமா யிருக்கச் செய்தல்; (4) லகிமா, மிகபாரமாயுள்ளதைப் பஞ்சுபோல லேசாகச் செய்தல்; (5) பிராப்தி, விரும்பியதை தன்முன்னிற்கச் செய்தல்; (6) பிராகாமியம், தன்னிஷ்டம்போல் நடத்துதல், பரகாயப்பிரவேசம் பண்ணுதல், அந்தர் சஞ்சாரஞ் செய்தல், இச்சித்த போக மனுபவித்தல், மண்ணிலும் விண்ணிலுமுள்ள பொருள்களையும் முக்காலங்களையும் தனது தேககாந்தியாலறிதல்; (7) ஈசத்துவம் சர்வேசுரனைப்போல, தன்னிச்சைவழியில், முத்தொழிலாகிய சிருட்டி, திதி, யாதிசெய்தல்; (8) வசித்துவம், தேவர் முதலிய வுயிர்களையும், எல்லா வுலகங்களையும், தன் வசமாக்கல்; என்பனவாம். சிலருக்கு ஞானமாத்திர முண்டு; மற்றுஞ் சிலருக்கோ, ஞானமின்றி சித்தி மாத்திர முண்டு; சித்தி யில்லாததினாலேயே ஞானி யல்லவெனக் கூறலாகாது. உண்மை ஞானிகள் ஆசைகெட்டவராதலின் உதாசீனமாக மாயா சகிதத்தாலடையும் அணிமாதியை யடையத் துணியார். அது அவர்களுக்கு வுரிமையுமல்ல; அவர்கள் மனோநாச

மடைந்ததினாலும், அவித்தை கெட்டதினாலும், ஞா
னத்திலமைவதேயன்றி, பிரிந்து செல்லார். ஞானி,
சர்வம் பிரமசொரூப மெனவும், உலகம் மாயா
மயக்கமானதோற்ற மெனவும் தெளிந்தவர்களாத
லின் மீட்டு மவர்களுக் கிச்சை யுண்டாகாது;
ஆனாலவர்கள் சர்வகாரணமான ஆத்மசொரூபத்
தை யறிந்திருப்பதால் சர்வத்தையு மறிந்தவரென்
றே அறி. ஞானி, நிராசையுள்ளவராதலின், சித்திகளை
யிச்சித்தாரில்லை.

சீ.—உலகில் சகலரும் ஞானத்தை யடைந்து,
கெம்பீரப்படாமல் நான் சமுசாரி நான்பாவி யெ
னத்தங்களைத்தாமே இழிவுபடுத்திக் கொள்ளுங்கா
ரணம் யாது.

கு.—மனிதர்களை கன்மம், பத்தி, ஞானமென்
கிற, மூன்று காண்டிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்ற
ன. அஃதாவது, அநாத்மாவை யானென தென்பவன்
கருமகாண்டி; சகலமும், ஈஸ்வரார்ப்பணமாகச் செய்
பவன், பத்திகாண்டி; திரிகரணங்களா லியற்றப்
படுங் கருமங்கட்குத் தன்னைச் சாக்ஷியாக அறிப
வன் ஞானகாண்டி. ஆதலின், பொதுவாய் யாவ



ராலும், அந்த ஞானத்தை யடைய முடியாது;
ஆனால், ஞானகாண்டிகளே அடைவரென்றறி. மே
லும், நான்தேகம் ஜெகத்சத்திய மென்கிற மோகக்
கடலில் மூழ்கின வற்பஅறிவுடையோரிதனை யுணர்
ந்தாரில்லை. அநேக ஜன்மங்களில் நிட்காம புண்ணிய
கருமஞ் செய்தவனே சித்த சுத்தியடைந்து அத
னால் சாங்கிய புத்தியும், அதனால் சாதன சதுஷ்டயமு
மடைவன். அவ்வித ஞானாதிகாரியே பரநிஷ்டையி
னையே தொழிலாகக் கொண்டு, எல்லாஜீவர்களிடத்
துங் கருணையுடையோனாயும், இருவகைப்பற்றற்றவ
னாயும், சர்வம் பிரம்மமய மெனவும், தானப்பிரமத்தி
ற்கன்னியமல்ல வென்கிற நின்மல ஞானமடைவன்.
அவனுக்கே விபரீத புத்தியாவும் நசித்து ஐம்புலன்
களையுள்ளவாறறுத்து சுத்தவாதனையைப் புரிந்து,
இச்சரீரம் நீங்கிலினி யெச்சனனம் வருமோ வென்
கிற பயத்தினால், சமுசாரமும் அதற்காதாரமான
அஞ்ஞானமும் போய், வீடடைய வேதுவாகும்.
அவ்வாறின்றி சூரியன் வெந்நீரில் தத்தளிக்கின்றா
னென, மூடர் கூறுவதுபோல் ஆத்மா மூன்றவத்
தைகளினும் மூன்றுடலைப் பெற்று, மூன்றவத்தா
நாமமும் பெற்று, ஜீவனாய், தேகத்தை நானென அபி

மானித்து, தன்னைக் கர்த்தாவாயும், பாவியுமாகமோ
கித்தவன் சுகதுக்க மோகாதிகளை யநுபவிக்கிறான்.
இவனை பூதாத்மா வெனவுங்கூறுப. எவன், தன்சந்நி
திமாத்திரத்தில், சகலமும், நடந்தேறுகின்றன; சூரி
யப் பிரதிபிம்ப மெவ்வாறு வெந்நீரில் தோற்றமே,
முதற் சூரியனாகின்ற பிம்பத்திற்கு அதனால் யாதொ
ரு துக்கமுமில்லை; அவ்வாறே நான் கர்த்தா போக்தா
வல்ல, நான் அந்தராத்மாவேயென தீர்மானிப்பவனு
க்கு, யாதொரு அவஸ்தையுந் துக்கமு மில்லை. அவ
னே தன்னை யெவ்விடத்தும், அனைத்தையுந் தன்
னிலுங்கண்டு, களித்திருப்பன். மேலும் இரும்பைக்
காய்த் தடித்து நீட்டினாலும் அக்கினிக்கு யாதொரு
துன்பமுமில்லாததுபோலும், மேகம் விரைவிலோட,
சந்திரனோடுவதாகக் காண்பது வெறுந்தோற்றமே
யன்றி, யுண்மையில் சந்திரனுக்கசைவு இல்லா
ததுபோலும், ஜீவாத்மாவுக் கெவ்விததுன்பமும்,
அவஸ்தையுமில்லை. இவ்வாறு ஞானி தன்னைக்கெம்பீ
ரமாய்ப் பார்ப்பன். பூதாத்மாவான சீவன் மகாவிரு
ளைப்போன்ற, ஆசையினால், மறைக்கப்பட்டுக் காம
க்குரோதாதிகளாலுண்டான சுகதுக்கத்தால் மூடப்
பட்டு, தேகாதிவிஷய ஆங்காரத்தை யடைகிறான்.



ஆதலால், தனது ஆத்மசொரூபத்தைக் காணமல்
குருடாயும், சப்த ஸ்பரிசாதி விஷயங்கள், மரண
வேது வெனவும், பிரயோசனமற்றதெனவுங் காணாத
தினால், அவைகளி லபிமான முற்றவனாயும், அதனால்
பிரியமோதி பிரமோத மடைந்து, அநாத்மாவைத்
தானெனக் கொள்ளும்பாபி, சொரூபானுபவமடை
யான். ஆனால், உலகந் துக்கமயமெனவறிந்து, அதில்
வெறுப்புற்றாருமையடைந்து, இதுகடைசிஜென்மமா
யிருந்து, விசாரணையினால் தானித்தகையனெனவறி
ந்து, சங்கற்பநாசமே ஜனனமரண நாசத்துக்குக்
காரணமெனவறிந்து, தத்துவவாராய்ச்சி மார்க்கமான,
வுண்மை நோக்குடையோரே வீடடைவரென்பது
திண்ணம். இன்றேலனேக ஜன்மங்க ளெடுத்து, பிற
விக்கடலில் மொத்துண்டு பிறகு வுணரும் பக்குவ
மடைவர்.

### ஞானவாசிட்டம்.

"மேனியிற் புறத்தி னுள்ளின் மேலொடு கீழிற்
றிக்கில், வானில்வை யகத்தி லெங்கு நானன்றி மற்
றொன் றில்லை, யானிலா விடமு மில்லை யெனதிடத்
திலாது மில்லை, தானிகழ் பொருள்வேறில்லை சச்சிதா
நந்த மென்றான்"

"இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞான மெளிதிலுண்டாம்"

மேலும், அரசனுடைய புத்திரன் அரசனேயாகுதல் போலும், பாலைநிலத்திற்றோன்றும் அலைமுழுவதும், பாலைநிலமேயாவது போலும், பிரமத்தில் விளங்கும்நீ, பிரமமாகவே யிருக்கின்றாயென்றறிக.

சீ.—சுவாமி! கோயில்குளங்கள் முதலானக்ஷேத்திரங்களுக்குப்போய், சரியை முதலிய கருமங்களியற்றும்படி, வேதத்தினுங் கூறியிருக்க வுலகோருமவ்வாறே நடக்கின்றனர்களே; இதனால் மோக்ஷமடைய முடியாதா?

கு.—அப்பா! கோயில் போவதுங் கிரமந்தான்; வேதமாதா பக்குவம் நோக்கி, விசாரணை செய்து பிரமத்தை, மனதினாலேயே தியானஞ் செய்யவல்லமையற்றவர்களுக்கு, அதையடையும் பொருட்டு, கருமம் சுகந்தருமென்றது ஓர் அவசரம்பற்றி, சற்கருமங்களைச் செய்யும்படி கூறினார். இன்றேல், பழிபாவத்திற் கஞ்சாது, கடும்வினையையே புரிவரெனப்பயந்து, முன்னே சரியையாதி கருமங்கள் செய்; இவற்



றால், மோக்ஷத்திற்குச் சிறந்தசாதனமாகின்ற, சித்தசுத்தி யுண்டாகுமெனக் கூறினர்.

சீ.—சித்த சுத்தியாவது யாது?

கு.—சொர்க்காதி போகசுகங்களில் ஆசையில்லாமற்போவதே. மேலும் இச்சரியையாதியே வீட்டைத் தருவதல்ல, சமைப்பதற்கு விறகுபோல, மோக்ஷமடைய, ஞானம் சோபான மெனவும், ஞானமொன்றுமே வீட்டைத்தரத்தக்க தெனவுங்கூறினர்.

சீ.—சுவாமி! சரியையாதி யந்நான்கின் பொருளெவை?

கு.—பகவத் கைங்கரிய ரூபமான தாசபாவனை; அல்லது, பகவான் சர்வஞ்ஞன், நான்கிஞ்சிஞ்ஞன்; அவனெசமானன், நான்தாசன்; அவனுடைய ஆக்ஞைபடி நான்நடக்கவேண்டுமென்கிற வெண்ணம், அல்லது அவனுக்கடிமையாதல் சரியையாம்; சிவ, விஷ்ணுமுதலான தேவதாபூசைசெய்தல், அல்லது, அவனுக்குப் புத்திரனாகப் பாவித்தல் கிரியையாம்; இயமநியமமாகிய அஷ்டாங்கயோகங்களில் பயிலுதல், அல்லது, அவனுக்குச் சிநேகிதனாதல் யோக

மாம்; கூடத்த பிரமன வக்கியம், அல்லது எல்லாம்
மித்தை யெனத்தள்ளி பிரமமும் நானுமொன்றே வெ
ன்றறிதல் ஞானமாம்;

வள்ளலார்.

"சரியையிலே யீசன் சடவடிவாய் நின்றான்
கிரியையிலே மந்திரததிற் கிட்டி யருகிருந்தா
னூனமிலா யோகத்தி லுள்ளொளியா யேநின்றான்
ஞானமதி னானாயி னான்"

நிஷ்டானுபூதி.

"சரியையின் றொழிலினானுஞ் சற்கிரி யையினும்
யோகம், புரிதரு முயற்சி யானும் பொருந்தொணா
தென்பர் மேலோ, ராரியதே சிகனுரைக்கு மொரு
மொழி யுண்மை யாலே, யரியமெய்ஞ்ஞான வீடிங்
கடைவது திண்ணமாமே"

கைவல்லிய நவநீதம்.

"தினமு மண்ணுகர் பிள்ளைநோய்க் கிரங்கியே
தீப்பண்ட மெதிர்காட்டிக், கனம ருந்துக ளொளித்
தூவைத் தழைக்கின்ற கருணைநற் றாய்போலே,
பனைய றங்கள்செய் மகங்கள்செய் நன்றென்று மலர்



ந்தவா சகஞ்சொல்லும், நினைவு வேறுகாண் சுவர்க்க
கா மிகளந்த நிண்ணயந் தெரியாரே"

மேலும் கடவுள் பரிபூரணனென்பதையும், சித்
சொரூப னென்பதையும், அனைத்துமா யுள்ளவ
னென்பதையுமறந்து, ஆங்குள்ள விக்கிரகாதிகளே
இறைவனெனவும், அதற்கே சத்தியுள்ளதெனவும்,
பாவிப்பவர்க்கு, ஞானத்துக் கேதுவான சித்தசுத்தி
யடையமுடியும்; ஆனால் அவ்விக்கிரகத்தை முன்
னிலையாகச்சுட்டி பலனை விரும்புவது மேலும்மேலும்
துக்கவேதுவாம்.

சீ.—சுவாமி; மோக்ஷம் வேண்டுமெனக் கோரு
வதும், பலனாகுமோ?

கு.—ஒருகாலும் விட்டு நீங்காத மோக்ஷத்
தைப்பெற வேண்டுமென்கிற ஆசையும் பலனே; வித்
திருந்தபோது முளையுண்டாவதுபோல காமியத்
தால் மீண்டுந்துக்கத்துக்கு காரணமான பிறப்பை
யடைகிறார்கள். ஆதலின் உன்னாற்செய்யப்படுஞ்சகல
கிருத்தியமும், ஈஸ்வரார்ப்பணமாக, அபிமானமற்
றுச்செய்வதே பெரியபூஜை. உண்மையாயில்லாததா
கிய, இத்துவைதப் பிரபஞ்சமுழுமையும், இருளைப்

போன்றதெனக்கண்ட வித்துவான்களுக்கு, எவ்வித கருமமும், அதனல் பலனும் பற்றுவதில்லை. அஞ்ஞானிகள் பேதபாவனையால், ஆண்டானடிமைத் திறத்தைப்பூண்டு பந்தமேபயனுக, தேவதாருபங்களைப் பூசித்துப் பலனைக்கோரி, ஜெனனமரண மென்னும் பெருந்துயரக்கடலில் விழுந்து, கரையேறவகையறியாது, அதிலழுந்தும்பேதைகளாகிருர்கள்.

சீ.—அவர்கள், எக்காலத்தில்தான் மோக்ஷமடைவது.

கு.—அன்னவரும், அநேக ஜென்மங்களுக்குப் பின், சமுசார பந்தத்தினின்று கரையேறுவார்களென்றறியக்கடவாய்;

பிரபுலிங்கலீலை.

"உரைசெயிற் பரம ஞான மொன்றுமே முத்திக் கேது, சரியைநற் கிரியை யோகந் தாமொரு மூன்று ஞான, மருவுதற் கேதுவென்று மறைபுகன் றுரைக்கு மிந்தக், கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவர்."



பட்டினத்தார்.

"எட்டுத் திசையும் பதினறு கோணமு மெங்குமொன்ருய், முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை மூடரெல்லாம், கட்டிச் சுருட்டித்தங் கக்கத்தில் வைப்பர் கருத்தில் வையார்."

பகவத்கீதை.

"க்ருபணு பல ஹேதவஹ:"
க்ருபணா:பலஹேதவ:

(இ-ள்.) பலனை விரும்பிக் கருமங்களைச் செய்பவன் மூடன்.

தாயுமானசுவாமிகள்.

"பார்ப்பன வெல்லாம் பரமா யறிதல்
சீர்படு போறி வுடையோர் திறன்."

ஆன்ருேர்

"நவிலுங்கால் மேல்கீழ் நடுபக்க மெங்கும்
சிவமொழிய வேறில்லை தேர்"

ஞானவாசிட்டம்

"தீவினையெல் லாமறுத்து மங்கலமெல் லாமுதவுந் தேவ பூசை, யாவதெனக் கேட்டனுமே யருள்

செய்வான் தெய்வந்தா னியாதென் றோதிற், கேவலமே யரியல்ல வரனல்ல பூகவுடற் கிடைத்த தல்ல, வோவுமன மன்றடியு முடிவுமிலாச் செயப்படா வுணர்வே தெய்வம்."

### விவேகசூடாமணி.

"ஒங்கிய பாசி வைக்கிய முணர்ந்திடு முணர்வாலன்றி, சாங்கிய மதத்தி னாலுஞ் சார்ந்திடு மியோகத்தாலும், வீங்கிய கன்மத் தாலும் வேறுபா சனையி னாலு, மோங்கிய முத்திப் பேற்றை யொன்றுவ தென்று மில்லை.

### தத்துவநிஜானுபோகசாரம்.

"சிற்சட மெல்லாஞ் சிவமாக நோக்கல் சிவற்கு
அற்சனையா மென்றறி"

### சடகோபர்.

"எவ்வா றுனைத் துதிப்பேன செயலும் மனமும்
வாசகமும், நானும் நீதானே"

### தாயுமானசுவாமிகள்.

"அனைத்து மாய்நின் றாயே யான்வேறோநின்னை
நினைக்கு மாறெங்கே நிகழ்த்தாய்"



"எள்ளளவு நின்னைவிட வில்லா வெனை மயக்கிற்
றள்ளுவதா லென்ன பலன் சாற்றாய்"

மேலுஞ் சித்துருவமாயும் அத்துவிதமாயும் பிரிவற்றதாயும் சரீரமற்றதாயு மிருக்கிற பரப்பிரம சொரூபத்திற்கு இரண்டுவித வடிவங்களைக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. அவற்றிலொன்று, சங்குசக்கரங்கள், அல்லது, திரிநேத்திர காளகண்டங்களைப் பொருந்தியுள்ள, அவதார ரூபமான சாமானியவடிவம்; மற்றொன்று, ஆதியந்த மில்லாத ஏகமான சிற்சொரூபம். இவ்விரண்டில், பரவடிவத்தைத் தெரிகின்ற பரியங்கம், மூடபத்தியால் சகுணமாக, கல்லினாலும் செம்பினாலும் பிரதிமைகளை யமைத்து அவற்றைக் கடவுளாக பாவனை செய்து வணங்குவதாம். இது ஆஸ்திக புத்தியை விளைவிக்கும்; வீடுகளிலிருந்து தியானித்தால், மனம் லயமாகாதாகையால், அதற்கென ஓரிடமமைத்துவைத்துக் காட்டியுள்ளது. ஆங்கு சென்று, திரிகரண சுத்தியாக, தியானஞ்செய்து, மனதை அவ்விக்கிரகத்தில் நிறுத்தி, அப்பியசிப்பது கொள்கை; வடிவங்களையே நாடுவது மனதின் தன்மையாதலின், விக்கிரங்களையே சிந்தித்து மனதை நிறுத்தி வந்தால் முதிர்ச்சியில்

அகமுகப்படும். ஸ்தூலத்தில் நிலைக்காவிடில், அதிசூக்ஷமத்தில் நிலைக்காது; ஆதலின், ஆங்குசெல்பவர் சமத்துவபுத்தியோடு, பலாபேக்ஷையை விட்டு, ஈசுவராராதனையின் பொருட்டு, பூசைமுதலியவையியற்றி யதனால் சித்த சுத்தியைப் பெற்று, பிறகு தெய்வ வடிவுக்கு லக்ஷியமாகின்ற ஆத்மதத்துவத்தையுணர்ந்து, ஞானமடைவார்களென்பதே மூத்தோரின் கொள்கை. மேலும் கோயிலுக்கு பத்தியின்றி, அசுசியாய் போவாரும், கோயிலை யிழிவாக நினைப்பவருங் கூறுபவரும், அசம்பிரதாய முடையர்ராவர்கள்;

தாயுமான சுவாமிகள்.

"மூர்த்தி தலந்தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர், வார்த்தை சொல சற்குருவும் வாய்க்கும்"

மேலும், சதுர்ப்புஜங்களையுடைய மூர்த்தியின் உருவத்தைத் தரிசித்தலே மோக்ஷமாயின், ஸ்ரீகிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்கு, தனது விஸ்வரூபத்தைக்காட்டி, இதுவே மோக்ஷமென நிறுத்தி யிருப்பர்; நிறுத்தாது சிரவண மனனாதிகளையும், பின்னும் ஞானத்தையும் பதினெண் ணத்தியாயத்திலுங்கூறிமுடித்தார். ஆதலின், சகுணமாகக்காண்டலே போ



காது; அதுமோக்ஷத்துக்கு நேர்காரணமல்ல; ஞானத்தினாலேயே மோக்ஷமுண்டாகு மென்றறி. மேலும், உத்தரகீதையில், பிராமணனுக்கு தெய்வம் அக்கினியிலும், முனிகளுக்கு மனதிலும், அஞ்ஞானிகளுக்கு விக்கிரகத்திலும், சமதிருஷ்டியுடையோருக்கு தெய்வமெங்கு முளதெனக் கூறியுள்ளதாகையால், கோயிலுக்குப் போகும்விதி, சாமானியருக்காம்.

சீ.—பந்த மோக்ஷ மென்றால் யாது? பந்தம் போவதெப்படி? பதவிகளைத்தானா மோக்ஷமெனக் கூறுவது; அல்லவெனின், மோக்ஷத்திற்கும், பதவிகளுக்குமுள்ள தாரதம்மியம் யாது?

கு.—மோக்ஷம், வீடு, முத்தி, பரமபதம், விடுதல், பிறப்பிறப்பற்ற நிலை, என்பன ஒருபொருளைக் குறித்தபலசொற்களாம். அதுவோரிடமல்ல, எவராலுஞ் சிருட்டிசெய்தது மல்ல, கட்டப்பட்டதுமல்ல; பரமாகாய மென்னுஞ் சிதாகாயமே, முத்தியெனப்படும். அது, தனக்குள்ளேயே தானாகவே இருப்பது; அது, குறைவுநிறைவில்லாதது; எப்போதுந்தனதிடமாய் தன்மயமாய் குற்றமில்லாதது; அதுவே, ஞானிகளுக்குத் தத்துவசொரூபமாயுள்ளது; அதுவே,

தன்னைவிட்டு நீங்காத பரமபதமுமாம். தன்னைச் சீவனாகத் தானே சங்கற்பித்து நான்பிறந்தேன், இறந்தேன், நான்கர்த்தா, போக்தாவென நினைப்பதும், ஆசைமுதலானவை பந்தமெனப்படும். பந்தம் உற்பத்தியில்லாதது, நாசமுடையது; உற்பத்தியில்லாத நீலநிறம், ஆகாசத்திற்றோன்றி, விசாரணையில் கெடுவதுபோல பந்தம்போம். அவரவர்களால் செய்த கன்மங்களுக்குத் தக்கபடி, பிறப்பிறப்பு, சுகதுக்க முதலியன, ஓயாது சகடக்கால் போல்மாறிமாறி வருமென்றறி. முத்தியென்னும் பதத்துக்கு அருத்தம், பந்தத்தினின்று விடுபடுவதேயாம்; முத்தியென வெண்ணினதால், பந்தமேன்வந்ததென நினைவும் வந்தது. இவ்விரண்டும் பேதபுத்தியின் கற்பிதமே;

### கைவல்லிய நவநீதம்.

"மனைக்குள் வைத்தபண்டங்களை மறந்தவன் வருடாறு றழுதாலும், நினைத்து ணர்ந்தபின் இட்டுமப் படியிருந்த நின்மல வான்மாவும்"

"அனர்த்த மானதன் மறதியைக் கெடுத்துத் தன் னறிவினாற் காணமல், கனத்த கர்மங்க ளாறு கஞ் செய்யினுங் காணுமோ காணாதே"



### சடகோபர்.

"நன்றாய் ஞானங் கடந்து போய் நல்லிந் திரிய மெல்லா நீத்து, ஒன்றாய்க் கிடந்தவரும் பெருமபா மூலப்பி லதனை யுணர்ந் துணர்ந்து, சென்றாங் கின் பதுன் பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால், அன்றே யப்போதே வீடது வேவீடு வீடாமே"

### ஞானவாசிட்டம்

"பழியான போகத்தி னிச்சை தானே பந்தமா மதுவிடலே பரமமாகும்"

### குமாரதேவர்.

"பந்தம்வீ டென்று மில்லை பரம்பொரு ளொன்றேயென் றுந், தந்தஞ்சங் கற்பத் தாலே சாலமோ கிப்பர் தீயோர்"

"உலகினை வேற தாக வுணர்ந்திடிற் பந்த மாகு; முலகினைத் தானே யாக வுணர்ந்திடின் முத்தி யாகு; மிலகிடத் தோன்ற லெல்லா மென்னினை வேயென் றெண்ணி"

சோருபசாரம்.

"ஞானநூல் கற்றாலு நற்றுறவு பூண்டாலு
மோன சமாதி முயன்றாலுந்-தானாகி
எல்லாக் கவலையுமற் றின்புற் றிருப்பதுவே
சொல்லாரு முத்தி சுகம்"

ஆன்றோர்.

"விடென் றுரைதரு சொற்குப் பொருளோ விடுதலை யாதலினால்"

ஞானவாசிட்டம்.

"அந்தமற் றொன்றாய் விகற்பமற் றறிவா யழி விலாப் பரம்பொரு ளிருக்கப், பந்தமுற் றவரார் முத்திபெற் றவரார் பாவனை விகற்பமே யனைத்தும், சிந்தனை விரிவு பந்தமா மதனைத் தீர்ந்திடன் முத் தியாம்"

மேலும், காண்பான் காக்ஷி காணப்படுபொருள் அல்லது, ஞாதுரு ஞான ஞேய மென்பவைகள் பிர மத்தினிடம், பழுதையிற்றோன்றும் பாம்புபோல் ஆரோபிதமாம். பிரமம் சர்வாத்மாவாயு மொன்றி னுஞ் சம்பந்தமற்றதாயு மிருப்பது. சிருட்டியாதியை



யோயாது செய்கிற மனதின்லயமே பரமபதமாத லின், ஆன்மாவை சந்ததம் சலியாமல் நோக்குதலா லுண்டானவாதனை யடக்கமும், மனோநாசமும், அத னால், தத்துவஞானமும், அதனால் சகலவித அத்தியா சநீக்கமும், தான்பிரமத்துக் கன்னியமல்லவெனவுண ரும் ஞானநிலையே, சகலபந்தத்தினின்று விடுபடு வது, அதுவேமோக்ஷம். மேலுந் தனது சங்கற்பத் தாலேயே பந்தமடைவதும், அதனது நீக்கமே முத் தியாதலின், முன்பு பந்தத்தினால் கட்டுப்பட்டதாக, அவித்தையால் பாவித்தவன், இப்போது ஆத்மானா த்மவிவேகத்தால், தன்னைவிசாரிப்புழி, தானதேகி யான ஆன்மாவாகவும், ஆனந்த ரூபியாகவு மிருப்ப தாகத் தெரிந்ததால், பந்தத்தினின்று விடுபட்டே னெனத் தெளிவதே மோக்ஷமாம்.

சீ.—அஃதெவ்வாறு, நன்குவிளக்க வேண்டும்.

கு.—சூரியனைக் காணவேண்டில் தன்கண்ணினா லேயேயன்றி, பிறவற்றினா லாகாவாறு போலும், தன்பிணியைப் போக்கத் தான் பத்தியமிருந்தால் போதுமேயன்றி, அந்நியராலாகாததுபோலும், உன் பந்தத்தைப் போக்க வுன்னையன்றி ஞானியேயாயி

னும் நீக்கமுடியாது. மேலும் எவன் பரமாத்மாவுக்கும் சீவாத்மாவுக்கும் பேதமில்லை யெனவறிகிறுனே, அவனுக்கே முத்தியுண்டாகும், பிறருக்கு பயமுண்டாம்; அன்றியும், தன்மனமே போகத்தினிச்சையால் கட்டுண்டு, தன்னைப் பந்தப்பட்டதாக பாவனைசெய்வதும், அம்மனமே தன்னைவிசாரிப்புழி யப்பந்தகாரணமான விச்சையைவிட்டு மோக்ஷத்திற் சேதுவாசச் செய்வது மாதலால், பந்தத்துக்குக்காரணமான மனதைக்கெடுத்தால் பந்தங்கெடும். அங்கியருடைய கருமத்தாலும், அல்லது, நூல்கற்றதினுலும், துறவடைவதினுலும், மற்றெவ்வித சாதனத்தினுலுஞ், சங்கற்பம் நாசமாகாது; ஆகாதபோது மோக்ஷமின்று; முற்றும் உலகப்பற்றற்றதே, முத்தியென்றறி. வாசனையால் விடயங்களில் பற்றுள்ளமனதையும், நீ நான் முதலிய பேதமாக வெண்ணும் எண்ணத்தையும், விசாரணையால் நீக்கி, வாசனுக்ஷயமும், மனோநாசமுமடையில் அதுவே பரமபதமாகும். மேலும் என்னுடையது வென்கிற பற்றேபந்த வேதது; என்னுடையதல்லவென விடுதலேமுத்தியேதுவாயுள்ளது. ஒன்றைப் பற்றுதல், விடுதலென்கிற விரண்டும், மனதின் வடிவமாதலின், அதுவேபந்த வேதுவாம்.



மனோநாசத்தினுல் அப்பந்தத்தை யொழித்து ஆத்மஞானத்தினுல் அநித்தியமாகிய சமுசார துக்கவிஷயங்களையும், க்ஷேத்திராபிமான முதலிய சகல மனோவியாபாரமு மில்லாமல் மனதொன்றிலும் பற்றில்லாது, தன்மயமாய் விளங்குவதே சுவாத்மாநந்தமான முத்தி. சூரியன் மேகத்தால் மறைவுபடாததுபோல ஆத்மா ஆதியந்த மில்லாத வுணர்வு சொரூபமாயிருப்பதால் பந்தப்படவே யில்லையென விசாரத்தினுல் தெளிவதே முத்தியென்றறி;



ஆன்றோர்

“வாசனை நாசமே முத்தி. அது நீங்காததே பந்தம்.”

இதுநிற்க சரியை, கிரியை, யோகம், ஞானமென நான்கு படிகளை சாத்திரங்களில் கூறியுள்ளன. பதவிகளும் முறையே சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சியமென நான்காகக் கூறியுள்ளன. அவற்றில் முதல் மூன்று பதவிகளிற் சென்றவர்கள், புண்ணியமுள்ளவரையும் ஆங்கிருந் தநுபவித்து, புண்ணியம் நசித்தவுடனே, மீண்டும் மண்ணுலகத்தை யடைவர். பிறகு விசாரணைசெய்து, சிரேஷ்டமும் துக்க நிவர்த்தியும் பரமானந்த பிராப்தியுமாகிய மேலாம் நான்காம்

பதவிபாகிய ஐக்கியமுத்தி, அல்லது நிர்வாண கைவல்லிய பதவியை யடைவர்.

சீ.—சாயுச்சிய மெத்தகைபது; நன்கு விளக்க வேண்டும்.

கு.—சக்கரையினின்று முருசியை வேறுபடுத்த முடியாதும், சக்கரையே ருசி, ருசியே சக்கரையாயிருத்தல்போலும், சக்கரை ருசி யிரண்டா யிருந்து ஐக்கிய மல்லாததுபோலும், பிரமத்தினின்று கூடத்தனை வேறுபடுத்தமுடியாது, பிரமமே கூடத்தன், கூடத்தனே பிரமமென வுணர்வதே ஐக்கியமுத்தி; இதுதானவைகளின் தாரதம்மியம். இதனை நினைப்பு மறப்புமற்ற சுகாதீத நிலையெனவும், கூடத்த பிரமைக்கிய சிவராஜயோகியா யிருப்பதே சாயுச்சிய மெனவுங் கூறுப;

ஆன்றோர்.

"மறுஜன்ம மில்லாததே மோக்ஷம், ஜனன மெடுப்ப
[தே நரகம்."

சசிவர்ணபோதம்.

"செறிந்த காரண காரி யங்கள் சிதைந்து மேலுறு சித்ததா, யறிந்த வாதனை தானு மற்றதவ் வசிபதப்பொரு ளாவதே."



சீ.—பந்தம் வந்த காரணம் யாது?

கு.—முன்முன்னே தாங்கள் தாங்கள் செய்த கன்மம், பின்பின்னேயுள்ள கன்மங்களில்கூடி வாசனையினால், பிறந்தே னிறந்தே னென்கிற வெண்ணமும், தனதல்லாத வீடு, மனைவி, முதலியவற்றை நன்னுடைய தென்னும் விஷய மனோவியாபாரமும், நானென்கிற அகங்காரமும், சங்கல்பமும், ஆசையும், பந்தவேதுவாம். தன்பசியை, தானே போக்கிக்கொள்வது போல, தன்னுடைய பந்தத்தைத் தானே, தன்னுடைய முயற்சியினாலேயே, நானாரென விசாரித்து பந்தத்தை நீக்கிக்கொள்வதே முத்தியென்றறிவாயாக.

சீ.—பிறப்பிறப்புக்கு ஆசையே காரணமாயிருப்பதா லதனையொழிக்கு முபாயமியாது?

கு.—நினைப்பு மறப்பும்போலும், உறக்கம் விழிப்பும் போலும், சனனமரணம் இவ்வுயிருக்கு மாறி மாறி வருங்காரணம் ஆசையே; அதனாலுண்டான கோபமும், பயமு மதனோடு சேர்ந்து காரணமாயிருக்கின்றன. இவற்றை, அனாதிகாரிக ளொழிப்பதரிதென அறிஞர் கூறுவர். இவ்வாசையானது, எலியானது நரம்பைக் கெடுப்பதுபோற், சற்குணத்தைக்

கெடுக்கு மியல்புடையதாதலால், ஆத்மஞானவலிமை யில்லாதவர்கள், அவாவென்கிற அக்கினியினால் மிக வருந்துகிறார்கள். ஆசையே இன்ப துன்பத்துக்குக் காரணமாயும், காலனாகவு முடிவதால், மோக்ஷமடையவேண்டுமென்கிற ஆசையுமின்றி, திருப்தியடையில் ஆசைநீங்கும். அல்லது, எந்த ஆத்மாவின்கண், எல்லா பூதபௌதிகங்களு முண்டாயினவோ, அதையுறிந்தால் சோக மோகாதிகளினின்றும் விடப்பட்டவனுவன். அவனே ஆநந்த சொரூபி, அவனே முத்தி சார்வன்.

திருக்குறள்.

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்."

"அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந்
தவா அப் பிறப்பீனும் வித்து."

சந்யாஸிகீதம்.

"புகழ்கின் றோனும் புகழுறு வோனும்
இகழ்கின் றோனு மிகழுறு வோனும்
ஏகனே வன்றி யநேக ரலரால்."



"ஆக்கையை யொருவன் தாக்கி யுதைப்பினுங்
கோபமுந் தாபமுங் கொள்ள வேண்டாம்."

"வாணு ளாசைப் பேணு தொழிக
ஆஆ வதுவே சீவான் மாவை
புனரபி சனனம் புனரபி மரணம்
என்னு மிவற்று ளீர்த்துத் தள்ளும்."

திருமந்திரம்.

"ஆசை யறுமின்க ளாசை யறுமின்க
ளீசனோ டாகினு மாசை யறுமின்க
ளாசை படப்பட வாய்வருந் துன்பங்க
ளாசை விடவிட வாநந்த மாமே."

ஞானவாசிட்டம்.

"இச்சையாம் விறகு மாண்டா லெண்ணமாம் வன்னி
[மாளும்.

ஆதலின், காமாதிகளை விட்டொழிப்பதே வுபாயமென்றறிவாயாக.

சீ—இம் முக்குற்றங்களை யொழிக்கு முபாயம் யாது?

கு.—எதுகாறுந் தேகம் நான், சகத் சத்தியம், அதுவெனக் கன்னிய மெனவும் உண்மை யெனவும் நினைத்திருக்கும் வரையிலவை நீங்கா; அனைத்துந் தன்னிலும், தன்னை யனைத்திலும், யாவுந் தனது சங்கற்பத்தால் சொப்பன வுலகம்போலத் தோற்றமெனக் கண்டாலெதன்மேல் மோகமுண்டாகும்;

கைவல்லிய நவநீதம்.

"சொப்பனம் போலவெண்ணி துணிந்தவன் ஞானி [யாவான்."

இவை, வேறெச் சாதனங்களினாலுங் கல்வித்திறத்தினாலுமொழிவதல்ல. மேலும், காமமுதலிய சத்துருக்களை வென்றவனுக்கே யொழிய, மற்றவனுக்கு பிறப்பிறப்பு நீங்குவதில்லை, ஞான நிஷ்டையிலும் தியானத்திலும் அதிகாரமில்லை. காமமே வெப்போதுஞ் சீவர்களுக்குக் காலனாய் முடிவதால், இது நானல்ல, இது நானல்லவென நேதிவாக்கியத்தால் தேகேந்திரியங்களைத் தள்ளி தன்னைப்பிரம சொரூபமாக வறிவதே, காமமாதியை யொழிக்கு முபாயம். ஆதலின், சதா தன்னை பிரமசொரூபமாகவும், பிரபஞ்சத்தை பிர



மத்தில் கற்பிதமாகவே பார்த்தல் வேண்டும்; அப்போது இக்காமமுதலிய பகை யுன்னைவிட்டு நீங்கும். பிரபஞ்சத்தைத் தனக்கன்னியமாகப் பார்ப்பதினாலேயே,பேறறி வுடையோராயினும், தீரர்களாயினும்,முக்குற்றங்களுக்கு வயப்படுகின்றனர். ஆசைக்குக் காரணம், இத்தேகத்தை நானெனக்கொள்ளும் அகம் பாவமான அவித்தையே; அவித்தை நீங்கினால் ஆசை கெடும்.

சொரூபசாரம்.

"பூதாதி யைந்து பொறிபுலன்க ளெல்லாஞ்சித்
தேதாதி யந்தமவை யெல்லாஞ்சித்-தோதரிய
கற்பனையுஞ் சித்தனைத்துங் காண்பானுங் காட்சியுஞ்சித்
தற்பமும்வே றில்லாமை யால்."

சீ.—வைராக்கிய மென்றால் யாது? அதனை யடைவதெப்படி?

கு.—வைராக்கிய மாவது விடுதல், அல்லது விடுதலிலிச்சை. அது புராண, மசான, ப்ரஸூத வைராக்கியமென பலவாகக் கூறுவர். விசாரதரர்க்கு வுபாதி, வைராக்கிய மிவை யிரண்டு மின்றியமையாத சாதனங்களாயுள்ளன. உபரதி ாவது மனமாண்டமிலே, சித்தநி

ரோதம், விவகாரக்ஷயம், செருக்கு நீக்கம், பிரவர்த்தி யின்றி சுகதுக்க சமபாவனையை யடைவதாம். வைராக் கியமாவது, ஈஷணுத்திரயத்தி லருவருப்பு, விஷய போகத்தில் தோஷதிருஷ்டி, அரோசிதம், இகலோக பரலோக போகத்தைத் துரும்பாக வெண்ணுதலாம். உலகவின்பம் அநித்தியமும், துக்கமும், மித்தையாத லின், இனிசுத்தாகின்ற பேரின்பத்தை யடைய முயல வேண்டும், உலகமெவ்வாறு கூறினுங் கேடடைந்தா லும் அவசியமில்லை, அது பேயுலகமென வெறுத்து, இறைவன் நித்தியன் சுகசொரூபியுமாதலின், அதனில் மனதை நிறுத்துதலும், கோரினதை யடையாது மறு காரியம் பார்ப்பதில்லை யெனச் சபதங்கூறி காப்புக் கட்டிக் கொள்ளுகிறதே வைராக்கியம். இவ்வைராக்கி யம் தியானத்திற்கு அசாதாரண காரணமென்பர். இவ்விரண்டு மின்றி ஞானமென்னும் வீட்டில் நுழைய முடியாது;

உபநிடதம்.

"தோற்றுமுப ரதிவைராக் கியஞான மூன்றிவைக டொழிற்பட் டாரு, ளேற்றுமுப ரதியுடையார் பிர மாதி பதமடைவ ரிகலோ கத்திற், போற்றும்வை ராக் கியர்க்கு மப்பதமுண் டாஞானம் பொருந்தி னோர்க் குச், சாற்றரிய தனிமுத்தி சீரானந்தத் தெனவுரைப் பர் தகைமை யோரே."

சீ.—பத்தியென்பது யாது?

கு.—பத்தியாவது, பகவதாகார விருத்தி பத்தி; அஃதாவது, தான் தியானிக்குங் கடவுளின் வடிவமாக பாவனை யடைவதாம். பத்தியைப்பற்றி சாத்திரங்களி லனேகமாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றைத் தொகு த்து ஈண்டு அந்நியபத்தி, அநந்யபத்தியென விரு கூறாய் கூறுவாம். கோயில் குளம் முதலான ஸ்தலங் களுக்குப்போய், ஈசனை சகுணமாக பாவித்து, தேங் காய் பழம் கற்பூர முதலியவை யியற்றி, பத்திசெய் வது சாமானிய பத்தியென்றும், அந்நியபத்தி யென வுங் கூறுப. இதனால் தமது கோரிக்கை நிறைவேறு வதும், இந்திரிய நிக்கிரகமும், விரதாதிகளினால் சித்த சுத்தியு மெய்தப்படும். இரண்டாவது வுண்மைபத்தி யென்றும், பழிபிறங்கா பத்தியென்றும், அநந்யபத்தி யென்றுங் கூறுப. அஃதாவது தன்னை பிரமமாக அனு சந்தானஞ்செய்து தியானித்தல். இதனால் பிரமம், சுசாதியாதி யிறந்ததென்கிற ஞானமும், அப்பிரமம்

தனக்கன்னிய மல்லவெனவும் அகண்டமாய், சுத்த அந்தக்கரணங்களுடன் நிட்காமனாகப்பூசித்து, சிரவண மனனாதிகளால், ஆத்மாநாத்ம விவேகமும், அதனால் அத்விதிய பிரம்மஜ்ஞான மடையப்படும். இம்மாதிரி அநந்யபத்தியே, முத்திக்கு வித்தாகும். மேலும், ஜீவாத்மாவுக்கும் பரமாத்துமாவுக்கும் தினையளவும் பேதமின்றென்று அறிபவனே ஞானி. உண்மை பத்தி யுடையோன், சிற்சடமான சகலத்தையும், பிரமமாகப் பார்ப்பன். அவனெதையும் வெறுத்துக்கூறான், சகல ரிடத்துங் கருணையும் அன்புமுள்ளவனா யிருப்பன்; ஏனெனில், பிரமத்தைத் தவிர திரணமும் அந்நியமாக கிடையாததால், சர்வம் பிரமமாகவே பார்ப்பன், அது தான் உண்மைபத்தி;

### திருவாசகம்.

"ஒருநாம மோருருவ மொன்றுமிலாற் காயிரந்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ."

"பத்தி வலையிற் படுவோன் காண்க."

### பிரத்தியட்சானுபூதிவிளக்கம்.

"பத்தி வலையிற் பரமன் படுவன் பழி பிறங்கா
பத்தி யில்லாவிடில் முத்திக்கு வித்தேது பார்த்திலம்."



### விவேகசூடாமணி.

"நித்தமுஞ் சொற்சொரூப நிகழ்த்திய வனுசந் தானம், பத்திதானாகு மென்றே பகருவர் பரமுணர்ந் தோர்."

சீ.—சுவாமி! தாங்கள்கூறிய ஆத்மாநாத்ம விவேக மாவது யாது.?

கு.—அப்பா! ஆத்மா, காலதேச வஸ்து பரிச்சேத சூனியமுடையதும், சகலவித வுபாதியற்றதும், மகா காசம்போல வெல்லாவிடங்களி லிருப்பதும், அநேக விதங்களாக விளங்குவதும், சரீரத்துக்கு விலக்ஷண மாயிருந்தும், சகல சரீரங்களினு மிருப்பதும், விபு வும், சகல பூதங்களினு மடங்கியிருப்பதுவும், சர்வ பூதங்கட் கந்தராத்மாவா யிருப்பது. தானே சந்தாசா மானியனாக விருப்பதும், தனது பிரகாசத்தால் சந்திர சூரியரை பிரகாசிப்பிக்கச் செய்வதாயும், சுயம்பிர காசவுணர்வு வடிவான ஞானமயமாயும், பிராணி களின் இருதயத்தை மூலஸ்தானமாக வடைந்து, இந் திரிய நியாமகமாயும், பஞ்சகோச விலக்ஷணனாயு மிருப் பது. அது பிரமாணங்களினா லறியப்படாததும், ஆனந் த ரூபியாகவு மிருப்பது. பலவாறாகக்கூறுவ தெற்று

க்கு, அண்டத்தினது கூட்டங்களுண்டாகி, விளங்கி நசிப்பதற் கிடமாயுள்ளது ஆத்ம சொரூபம். அவ்வாத்மா, பிரம சைதன்னியமெனச் சொல்லப்படும். அநாத்மா யாதெனின், ஆத்மாவுக் கன்னியமான தேக, அகங்கார, பொறி, புலன்கள் அநாத்மாவென்றறி. மேலும், ஆன்மாவான திருஷ்டா நித்தியம், அநாத்மாவான திருசியம் அநித்திய மென்னும் நிச்சயமே ஆத்மாநாத்ம விவேகமாம்.

சீ.—ஆத்மாவை யறிவதெப்படி?

கு.—மனமொன்றை நினைத்து முடித்து, மற்றொன்றை நினைப்பதற்கு முன்னுள்ள மத்தியகத நிலையில் நிதானமாக விளங்கி யறிவாயாக.

சீ.—பிரமம் காலதேசவஸ்து பரிச்சேத மிறந்ததென்ப தெப்படி, அருளவேண்டும்.

கு.—காலபரிச்சேதமாவது, பிரமம் சத்துப்பொருளாதலின், நேற்று, இன்று, நாளை, எப்போது மென்கிற நான்கு காலத்து முள்ளதாம். இன்ன காலத்தில் தானிருப்பது, இன்னகாலத்திலிராது, என்னும் வரையறை யில்லாததினால் அது காலபரிச்சேத மில்லாதது.



தேச பரிச்சேதமாவது, பிரமம் விபுவாய், ஆகாயம் போலெங்கு மிருப்பதால், இன்னதேயத்தி லிருப்பது, இன்ன தேயத்திலும், வீட்டிலு மிராதுவென்னும் நியமமில்லை யாகையால், தேசபரிச்சேத மில்லாதது. வஸ்துபரிச்சேத மாவது, "சர்வம் பிரம்ம மயம் ஜகத்" என்றதினால் சகல பிரபஞ்சமும் பிரமசொரூபமாம்; பிரபஞ்சமானது பிரமத்திலுண்டாய் விளங்கி, யொடுங்குதலின், பிரமத்தைத்தவிர ஒருதிரணமுமில்லையாம்; ஆதலின், "ஏகமே வாத்விதீயம் பிரம்ம" வென்று வேதங் கூறியது. மேலும், பிரமம் சுசாதி விசாதி சுவகதபேதரகிதமாதலினாலும், சகல பொருள்களும் பிரமத்தில் கற்பிதமானபடியினாலும், அது இன்ன வத்துவிலிருப்பது, இன்ன வத்துவி லிராதென்கிற, வஸ்து பரிச்சேதமில்லாத தென வுணர்வாயாக. ஆதலால், பிரமம் சர்வகாலத்திலும் சர்வ தேசத்திலும் சர்வ பொருள்களிலும், நிறைந்திருப்பதெனப் பொருள்படும்.

தாயுமானசுவாமிகள்.

"அங்கிங் கெனாதபடி யெங்கும் பிரகாசமாய்"

என்னும் விருத்தத்தில் காண்க.

சீ.—சுவாமி, பிறப்பிறப்பாகிய சமுசார துக்கத்தை நினைந்து வருந்து மடியேன், அதனைக்கடப்பதற்கு புணையாயுள்ள ஞானமாகின்ற தெப்பத்தை யடைய வென்னவுபாயம்; அருளவேண்டும்.

கு.—அப்பா சமுசாரபாவனை அஞ்ஞானத்தினுலுண்டாகிறது; அது ஞானத்தினுலேயே யன்றி கருமத்தால் நிவர்த்தியாகாது. நீ யநந்த சன்மங்களில் புண்ணியஞ் செய்தவனுகையால், இந்த சன்மத்திலும் நிட்காம புண்ணியமேசெய். அதனுல் துன்பமில்லாமல் பபம் சோம்பல், செறுக்கில்லாமல், ஆத்மஞானசாத்திரத்தைக் கைப்பற்றி, யொருவராலும் ஏவுதலில்லாமற் சஞ்சரித்து, திரவியம் பயனற்றதெனவும், ஆபத்தெனவும், போகங்கள் துன்பமெனவும், நிராசையே பேரானந்தந் தருவதெனவுந் தெரிந்து பவத்துன்பத்திற்கு நடுங்கி, முன் இராகத்துவேஷ துஷ்டசித்த விருத்திகளான பதினுன்கையும் நீக்குவாயாக.

சீ.—அவையாவை?

கு.—இராகம், துவேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம், ஈர்ஷை, அசூயை, டம்பம், தருப்பம், அகங்காரம், இச்சை யென்பன



வாம், (1) ஸ்திரீவிஷயமான சித்தவிருத்தி இராகம்; (2) அபகாரஞ் செய்தவனுக்குப் பிரதியபகாரஞ்செய்யவேண்டுமென்பது துவேஷம்; (3) தனம் வீடுமுதலியவை சம்பாதிக்க வேண்டுமென்னு மிச்சை காமம்; (4) தனதிச்சைக்கு விரோதஞ் செய்பவனிடமுண்டாகுங்கோபங் குரோதம்; (5) தன்சம்பாதனை சற்பாத்திரத்தில், செலவாகக்கூடாதென்கிறபுத்திலோபம்; (6) ஐஸ்வரிய மதத்தினு லின்னது செய்யத்தக்கது, இன்னது தகாததென விசாரியாமல் மந்தனுயிருப்பது மோகம்; (7) தனக்கு சம்பத்திருக்கிறது தன்னுலாகாத காரிய மொன்றுமில்லை யென்கிறபுத்தி மதம்; (8) தனக்குச்சமானமான சம்பத்தையுடையவனைக்கண்டு பொருமைகொள்ளுதல் மாச்சரிம்; (9) இந்த துக்கமவனை விட்டெனக்கெவ்வாறு வந்ததென்கிற சித்தவிருத்தி ஈர்ஷை; (10) இந்தச் சுகம் எனக்கேயுள்ளது அவனுக்கெப்படி வந்ததென்கிற சித்தவிருத்தி அசூயை; (11) இக்கருமத்தினு லெனக்கு மிகவும் பிரசித்தியுண்டாகவேண்டு மென்கிற சித்தவிருத்தி டம்பம்; (12) எனக்குச் சமானமானவனெருவனுமில்லை யென்கிறபுத்தி தருப்பம்; (13) சகலவிஷயத்திலுந் தனக்கு சத்தியுண்டென்கிற கருவம் அகங்காரம்; (14) உண்

பதுமுதலான விட்டுவிடக் கூடாததாகிய கருமஞ் செய்யவேண்டு மென்கிறவெண்ணம் இச்சை. இவற்றை விடுவதினால் சுத்தவாதனைவரும். அதனால் சித்தசுத்தியெய்தும், அது சாதன சதுஷ்டயங்களை யுண்டாக்கும். இவற்றை யனுஷ்டிக்க முயல்வாயாக.

சீ.—சாதன சதுஷ்டய மெவை?

கு.—நித்தியா நித்தியவஸ்து விவேகம்; இகமுத்திரார்த்தபலபோகவிராகம்; சமாதிஷட்க சம்பத்தி; முமூட்சத்துவமென நான்காம். (1) பிரமமே நித்தியமானது;தேகாதிபிரபஞ்சம் அநித்தியமானதென்றும், சுருதி ஸ்மிருதி புராணாதிகளினாலே தனக்குத்தானே வுண்டாகிறஞானம், நித்தியா நித்திய வஸ்து விவேகமாம்; (2) இவ்வுலகத்தில், புஷ்பம், சந்தனம், ஸ்திரீ முதலிய விஷயபோகங்களும், சொர்க்கமுதலிய லோகங்களில் அப்சரஸ்திரீ முதலிய விஷயபோகங்க ளிவ்விரண்டும் அநித்திய மென்றும், அந்த போகங்களை நாய் வாந்திசெய்த அசனம்போலும், மலமூத்திரம் போலும், காக்கையின் மலத்தைப்போலும், பாவித்தவைகளில் வைராக்கியம் வெறுப்புண்டாவதே இகமுத்திரார்த்த பலபோகவிராகமாம், (3) சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம் சிரத்தை என்கிற ஆறுவிதம்; இதனை



சமாதிஷட்க சம்பத்தி யெனப்படும். அவற்றுள் (a) அகக்கரணதண்டஞ் சமம்; (b) புறக்கரணதண்டம் தமம்; (c) வீட்டு விவகாரங்களை குறுக்கிவைத்தல் விடல்; (d) சுகதுக்கத்தில் சமபுத்தியுண்டாதலே சகித்தல்; (e) சிரவணப்பொருளை சித்தம் சிந்திப்பது சமாதானம்; (f) சற்குருவினிடத்தும் நூலினிடத்தும் அன்புவைத்தலே சிரத்தையாம். (4) சமுசாரபந்தநீக்கமெப்போ தெவ்வா றுண்டாகுமென்கிற திடபுத்தி அல்லது மோக்ஷதாகம்; அஃதாவது வீடெறியும்போது வதிலகப்பட்ட புருஷன், களத்திர புத்திரர்திகளை விட்டு தனதுதேகம் எரிந்துபோகாமல் காப்பாற்றிக் கொள்ளத் தான்வெளியிலோடிப்போய், தாபத்தைநிவர்த்தித்துக்கொள்ள இச்சிப்பதுபோல, சமுசாரமாகின்ற தாபத்தை பரிகரிக்க, சகலஈஷணைகளையும் விட்டவனுடைய தீவரமான விச்சைபோன்றதே, முமூக்ஷுத்துவமாம். அவ்வாறடைவதினால் தீவரதர பக்குவமுண்டாய் ஞானபூமி யேழையுமடைவாய்.

சீ.—ஞானபூமி யேழென்பன எவை?

கு.—(1) சுபம் விரும்பல்; (2) விசாரணை; (3) மனஞ்சிறுகல்; (4) உண்மையிற் பொருந்தி நிற்றல்; (5)

சங்கற்பமறல்; (6) பதார்த்தாபாவனை; (7) துரியம், என்பவையே. இவற்றில் "காலான முதல்பூமிகைவந்தால் முத்தியுங்கைவந்ததாகும்" என கைவல்லிய நவநீதங்கூறுவதால் லௌகிக விருத்தியைவிட்டு, வைதீக விருத்தியடைந்து, ஈசுவரார்ப்பணமாக புண்ணிய கருமங்களைச்செய்து, பாபகருமங்களுக்குப்பயந்து, போக மயக்கத்தை வெறுத்து, முத்திவிருப்பத்தோடு சாதுசங்கம் பழகுதலாகிய சுபேச்சையான முதல் பூமியை யாவது முன் அநுஷ்டிப்பாயாக. மேலும் தெய்வ சம்பத்தென்னும் எண்குணங்களை முன்ன ரடைய வேண்டும்.

சீ.—அவற்றை யருளவேண்டும்?

கு.—கிருபை, பொறுமை, சகித்தல், பரிசுத்தம், ஆயாசமின்மை, மாங்கலியம், உலோபகுணமின்மை, நிராசை யென்பனவாம். இக்குணமுடைய சீவன்முத்தன் சமுசாரக் கடலைத்தாண்ட அருகனுவன். பிறகு சிரவண மனனுதியியற்றல்வேண்டும்.

சீ.—சிரவண மனனுதியாவதுயாது?

கு.—தத்துவமசி மகாவாக்கியார்த்தத்தை சற்குரு வாயிலாகக்கேட்டல் சிரவணம்; ஏகாந்தத்தில் சிரவ



ணத்தினுடைய அர்த்தத்தை சாதனபாதக யுத்திகளாலே சிந்தித்தலே மனனம்; சிரவண மனனத்தால் சித்தித்த அர்த்தத்தில், மனதை அசையாமல் நிறுத்துதலே நிதித்தியாசனம்; அதனுல் பேதபுத்தியுடனிருக்கும் லோகவாசனை, தேகவாசனை, சாத்திரவாசனைகளையும் அவற்றுலுண்டாஞ் சோகமோகாதிகளை விட்டு சந்தேகம் பந்தம் துக்கத்தினின்றும் விடுபடுவாய். அவ்வறிவுதயத்தால் கூடத்த பிரமவைக்கிய நிரதிசவானந்தாநுபவ சாக்ஷாத்கார மடைவாய்; அந்த சாக்ஷாத்காரத்தாலே அமலமுத்தி யடைவாய். இதற்கு முக்கியமாய் மனைவி, மக்கள், முதலாயினேரிடத்தும் மனை, காணி முதலியவற்றில் பற்று நீங்குதலும், சுக துக்கத்தில் சமபுத்தியும், ஏகாந்தமாய் வசித்தலும், ஞானநிட்டையும் வேண்டும். அதுதான் சமுசாரத்தைத தாண்டச்செய்து மோக்ஷமடைய புணையாயுள்ளதாம்;

பகவத்கீதை.

"தரதீ சோக மாத்மவித்"
തരതി ശോകമാത്മവിത്

(இ-ள்.) (ஆத்மாவை யறிந்துக் கொண்டவன் துக்கத்தைக் கடப்பானென்றது.) அதனுல் அகம்பாவ

முதலிய பேதம்நீங்கி, சமதிருஷ்டியடைந்து எதைச் செய்தாலுஞ் செய்யாதவன் போலாவாய். அதனால் சுகமுதையடமாம்; அச்சுகம், இந்திரியங்களை விஷயங்களில் போகவிடாதிருத்தலே; இதற்கு நிராசையவசியம்வேண்டும், அதனால் சாந்தியுமெளிதில் சித்தியாய்; அதனா லாத்மதரிசனமு மடைந்து அதில் மனங்கரையில், யாவுமற்றமாய்த் தோன்றிநிர்வாண சுகமுதயமாம். இதனையடைய முக்கியமான சில சாத்துவீக குணங்கள் அத்தியாவசியம்.

சீ.—அவையாவை அருளவேண்டும்.

.... கு.—சகல சீவர்களிடத்துந் துவேஷமின்மை; சீவகாருண்ணியம்; சுகதுக்க சமபுத்தி, விஷயானந்தம் பூரணானந்தத்தின் லேசமெனும் நிச்சயம்; விஷயசுகத்தி லிச்சையில்லாமை; எவற்றிலும் பற்றற்றிருத்தல்; தனக்கென வோரிடஞ் சொந்தமாக சுதந்தரித்துக்கொள்ளாதிருத்தல்; கிடைத்ததில்திருப்தி; சற்குருசேவை; அவிபசாரபத்தி, சாதுசங்க முதலியவைகளாம். மோக்ஷவிருப்புள்ளவனுக்கு இவை யின்றியமையாதசாதனங்கள். மேலும், அஞ்ஞானமென்னும் பாம்பினால் கடியுண்டவனுக்கு ஆசையென்னும் விஷமேறினதால், ஞானமாகின்ற மருந்துகொடுத்தாலது இறங்குமேயன்றி காசி, இராமேசுரம், இமாசலம் முதலானவிடங்களுக்குப்போய் தலைகீழாய் தபசு முதலியன செய்வதினாலும், ஆங்கு தான தருமமுதலியனச் செய்வதினாலும் பல சாத்திரங்கள் கற்றுத்தலை வீங்குவதினாலும் மதுவிறங்காது; அவ்வாறு செய்தும் முத்திபெறான். ஆதலின் ஞானசாஸ்திரிய வாராய்ச்சி வாயிலாகத் தன்னைத்தா னறிவதே முத்திசாதனமாதலின், அதனையடைய பாரம்பரியமான மரபிலுள்ள சதாசாரியனையடைந்து, சாஷ்டாங்க நமஸ்காராதி வழிபாடியற்றி சிரவணஞ்செய்து, அன்புடனொழுகி மகாவாக்கியோபதேசம் பெற்றுன்னை நீ யின்னானென்று விசாரித்துத் தெளிவாயாக.



சீ.—மகாவாக்கியமென ஏன் கூறவேண்டும்?

கு.—அவாங்க மனோகோசரமான வஸ்துவை யது கரதலாமலகம்போலக் காட்டுவதால் மகாவாக்கியமெனப்படும்;

**கைவல்லிய நவநீதம்.**

சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமன்றி சுருதிநூல் படித்தாலும், அன்னதானங்க டவங்கண்மந் திரங்க ளாசாரங்கள் யாகங்கள், என்ன செய்யினுந் தன்னைத்தா னறிகின்ற திவைகளால் வாராதே.''

அதனால் நான் பரமாத்மாவைக் காட்டிலும் வேறானவ னல்லனென அனவரதமும், ஆத்மாநுசந்தானஞ் செய்வதினால் ஆநந்தாநுபவமுண்டாம். அதனால் சராசரங்களாக விளங்கும் சைதன்னியம்,நானென்றறிகிற ஞானமடைவாய். இது சுயப்பிரயாசையான வெத்தனத்தினாலும், உணர்ந்திடு முணர்வினாலல்லது வேறெச் சாதனங்களினாலும் பெறமுடியாது. ஆதலின் உலகத்தில் விரக்திமுன் வந்து,சகல சந்தேக விபரீதங்களை விட்டு, துக்கங்களையும் விட்டு, நெடுங்காலம் அன்போ டிடைவிடாமல் சற்குருவை பூசித்தல் சேவித்தலாலும், வருணாசிரம முதலிய பிணக்கில் பற்றற்றிருப்பதினாலுஞ், சாந்தியாதி சுத்தவாதனையைப்பெற்று வுன்புத்தி ஆன்மாவி லெப்போது பிரவேசிக்குமோ, அப்போது திரிசியசேடமின்றி நான் பிரமமென்கிற சொரூபாகாரமாவாய். இதையடைய பிரதமத்தில்,சிரத்தை, பத்தி, தியானம், யோசமிவைக ளின்றியமையாத சாதனங்களா யிருத்தலால், இவற்றையடைந்து பிறகு நீதன்னியனாயும், சீவன்முத்தனாயு மிருந்து நேர்ந்தபோகத்தைப்பற்றற் றனுபவிப்பாய். இது ஸ்திரமாகும்பொருட்டு முக்கியமாய் சமாதியை யவலம்பிக்கவேண்டும். இன்றேல் ஞானம் நசித்துப்போம். இதற்கு



இந்திரிய நிக்கிரகமும்,மனோநீக்கமும் அவசியம் வேண்டும். திரிபுடியெல்லாம் பரமான்மாவினின் றுண்டாயினவாதலின், இவையாவும் பிரமமே, அதுவே தன் ஆத்மசொரூபமென்று நிச்சயிக்கவேண்டும். இதனை யடைய விசாரத்தினால் தினமு முறுதியாக மனதை அகமுகத்தில் செலுத்தி, பகிர்முகத்திற் செல்லாமற்றடுத்து ஆத்மாநு சந்தானஞ் செய்துவந்தால் ஞானசொரூபமாவாய். அவ்வாறு தன்னையறிந்து, ஆத்மாநு சந்தானஞ்செய்யாததினால், சீவன் பந்தத்திலழுந்தி கெடுகிறானென்றறி;

கைவல்லியநவநீதம்

"இந்த ஞானந்தான் வருவதெப் படியெனி
லிடைவிடா விசாரத்தால வந்தடைந் திடும்"

திருமந்திரம்.

"தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறிடாமற் றானே கெடுகின்றான்
றன்னை யறியு மறிவை யறிந்தபின்
றன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே."

"சாத்திர மோதுஞ் சதிர்களை விட்டுநீர்
மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்

பார்த்தவிப் பார்வை பசுமரத் தாணிபோ
லார்த்த பிறவி யகலவிட் டோடுமே.''

தாயுமானசுவாமிகள்.

''கேட்டவுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்
வாட்டமறு வுற்பவநோய் மாறுமோ—நாட்டமுற்று

சீ.—சுவாமி! கடவுளினிருப்பைத் தெரிந்து மோக்ஷ மடையலாமென்று வழிகேட்டால், தன்னையறிவதே மோக்ஷமென வருளினீர். அது எவ்வாறுகூடும். நான் நித்தியனு? நன்குவிளக்கவேண்டும்.

கு.—அப்பா! முன்னர் கடவுளைத் தெரியவெண்ணுவது வெவ்வாறிருக்குமென்றால்,தான் யாரெனத்தெரியாது, அயல்வீட்டானைப்போய் நீ யாரெனக்கேட்பதைபொக்கும். மேலும்,ஒன்றை யளக்கவேண்டுமாயின் அளவுகோலொன்று முன்கைபற்றி, அக்கோலென்ன அளவினையுடையதெனத் தெரிந்து, அதைக்கொண்டு பிறிதோர் வஸ்துவை யளக்கமுடியுமேயல்லது, கையிலுள்ள அளவுகோலின் அளவு தெரியாது,யாவரேயாயினும் பிறிதொன்றை யளப்பதரிது. அவ்வாறே நீயாரென முன்னர் தெரிந்து, நீ எத்தகைய சொரூபனென அறிந்தால்தான், அகண்டமாயுள்ள அக்கடவுளை யறி



யமுடியும். தானுகின்ற ஆத்மா சர்வாத்மாவா யிருத்தலின், தானே பிரமமாய்த் தன்னைக்காட்டிலும் அந்நியமொன்றில்லையென அறியமுடியும். ஆதலின் உன்னையறிந்தால், நீ பிரமத்திற் கன்னியமில்லாது அதுவேநீயாக வுணர்வாய்; அதுவே பந்தநீக்கத்திற்கு நேர்சாதனமாம். மேலும் நீயே நித்தியன் எவ்வாறெனின், கடவுள் நித்தியனுதலின் அவன் ஆக்ஞையும் நித்தியமாயிருத்தல்வேண்டும்; அவ்வாக்ஞைக் குள்பட்டநீயும், நீயிருந்தநுபவிக்கின்ற பிரபஞ்சமும், நித்தியமென்றே தெளி;

தாயுமானசுவாமிகள்.

''தேடறிய சத்தாகி யென்சித்த மிசை குடிகொண்ட
[யறிவான தெய்வமே.''

கைவல்லியநவநீதம்.

''தன்னையுந் தனக்கா தாரத் தலைவனை யுங்கண்டானேல், பின்னடத் தலைவன் றானுயப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்.''

வள்ளலார்.

''நல்லகுலத் திற்பிறந்து நல்லாரைச் சேர்ந்தொழுகி
நல்லறிவு பெற்றுடைய நன்மாணு—நல்ல

சிவம்வேறே வென்றெண்ணிச் சிந்தை கலங்காதே
சிவமென்ற நீயே சிவம்."

தாயுமானசுவாமிகள்.

"தன்னை யறிந்தருளே தாரகமா நிற்பதுவே
யுன்னை யறிதற் குபாயம்."

"என்னை யறியாம லெனக்குள்ளே நீயிருக்க
உன்னை யறியாம லுடலிழந்தேன்."

சீ.—இந்த சன்மத்தில் கொடுத்துவைத்திருந்தால் ஞானங் கிடைக்காமற்போகுமா; பிராரத்த வண்ணந் தானே முடியுமென்கிறார்கள்; இஃதெப்படி தெரிய விரும்புகிறேன்.

கு.—பிராரத்தம் புருஷபிரயத்தினத்தா லுண்டானதாம். புருஷபிரயத்தினமின்றி யொன்றுஞ் சித்தியாகாது; என்றால் முடியாத தொன்றுமில்லை. புத்திபூர்வகமாக ஞானம்வேண்டுமென முயன்றால், பூர்வபுண்ணியவளவு அது லகுவாய் கிடைக்கும். அநேகர்சோம்பேரித்தனத்தால் மாயை மூடுகிறதென்றும், காலம் வந்தால் கிடைக்குமென்றும் அஞ்ஞானத்தால் பேசி காலங்கழிப்பர்; நீ அவர்கள்பேச்சை நம்பாதே.



கைவல்லியநவநீதம்.

"ஒன்று கேள்மக னேபுமான் முயற்சியா லுரைத்துமா நுடர்க்கீச, நன்று செய்யவே காட்டிய நூல்வழி யடைந்து நல்லவர் பின்னே, சென்று துட்டவாதனைவிட்டு விவேகராய்ச் செனித்தமா யையைத்தள்ளி, நின்று ஞானத்தை யடைந்தவர் பவங்கள்போ நிச்சய மிதுதானே."

திருவள்ளுவநாயனார்.

"தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வ ருந்தக் கூலி தரும்"

சீ.—சகுணோபாசனை யென்பது யாது; நிர்க்குணோபாசனை யென்பதுயாது; இவையின்றி ஞானமடையமுடியாதா?

கு.—முடியாது.

சீ.—அஃதெப்படி அதைவிளக்கவேண்டும்.

கு.—உபாசனையாவது, இடைவிடாது தெய்வத்தின் சமீபத்திலிருந்து தியானித்தலாம். இதுசெய்வதினால் இராஜசகுணம்சமான சலனத்துவம் நீங்கி, மனம் நிர்ச்சலனரூபமாய் ஏகாக்கிர தன்மையடையும்.

அஞ்ஞானத்தால் முக்குண சம்பந்தமும், தேகா பாவமுடைய சீவர்கள், குணரகிதமான சொரூபத்தை யுபாசித்து சுத்தமாதிகளை யடைவது மிகவருத்தமாம். பிரதமத்தில் ஈசனது சகுணவடிவமான அஷ்டமூர்த்தங்களி லொன்றையுபாசித்து, தேகபோக சௌக்கிய நிமித்தம் சரியை, கிரியைகளிற்பற்றி பத்தி, பரபத்தி வைராக்கியத்தை யடையவேண்டும். அதனால் சித்த சுத்தியுண்டாம்; அதனால் பதவிமுத்தியுண்டாம்; இதுவே சகுணோபாசனை. அத்தேவதானுக்கிரகத்தால் தங்கள்காமியம் நிறைவேறப்பெற்று, பின்பு அஞ்ஞானவிருளும் நீங்கி, அருளாகிய ஒளியையடைவர். ஆனால் அவன்வேறு நான்வேறென தான் உபாசிக்குங் கடவுளை தனக்கன்னியமாக அறிபவன் பசுவைப்போன்ற அறிவையுடையவனெனவே மதிக்கப்படுவன். நிற்குணோபாசனையாவது, வாசாமகோசரமான அவ்விபத்த அக்ஷரபிரபத்தை யடைய இந்திரிய சேட்டையற்று, விருப்பு வெறுப்பற்று பிரத்தியேகாத்ம சொரூபந்தானாக சிந்திப்பதே நிற்குணோபாசனை. இது மிகப் பிரயாசையோடு நிஷ்காம புண்ணிய தவத்தால், சித்த சுத்திவந்து, சுகதுக்க சனனமரண சொர்க்கநரக முதலிய துவம் துவம் பாவங்களினின்று விடுபட்டவரே



அதற்கதிகாரியாவர். தேகமே நான், சகத்சத்திய மென்கிற மோகத்தைவிட்டு, முன்னடைந்துள அருளால் சாதன சதுஷ்டயங்களைப் பெற்று, குருவையடைந்து பணிவிடைசெய்து, பிறகு சிரவணமுதலியவை செய்பவருக்கே வறுகிடைக்கும். அவரே சீவகாருண்ணியராய் அகண்டாகார போதமாக, பிரமரகீட நியாயம் போல நிற்குண பிரமதியானஞ் செய்வர். அவரே உண்மைஞான மென்னும் பிரமைக்கிய ஞானத்தைப்பெற்று அதனால் சாயுச்சியமு மடைவர்.

சீ.—இந்த ஞானம், இல்லறத்திலிருந்தால் கிடைக்குமா, துறவறத்திலிருந்தால் கிடைக்குமா?

கு.—ஞானம் இல்லறத்திலேனும், துறவறத்திலேனுமடையலாம். துறவு என்பது விடலெனப்பொருள் தரும். எதனைவிடுதலென அதன்மேல்கேள்வியுண்டாம்; யான் எனது என்னும் அகங்கார பமகாரங்களை விடுதல் அதற்கு விடையாகும். அல்லது புறப்பிலுள்ள செல்வத்தின் மீதும், அகமாகிய தேகத்தின்மீது முள்ளபற்றினை விடுவதுதுறவு. அதுவிட்டவர் சங்கற்ப விகற்பங்களையும் சுலபமாகவிடுவர். அத்துறவு இரண்டுவகை; அஃதாவது அகத்துறவு, புறத்துறவென இ

ரண்டாகக்கூறுப. அகத்துறவாவது, அந்தக்கரணத்தை
யடக்குதலே; புறத்துறவாவது, காஷாயமுதலிய வேட
ந்தரித்தலே. விரக்தனுக்கு சாந்தியாதி குணங்களவசி
யமாம். மேற்கூறிய இருவகைப் பற்றுக்களையும் இல்
லறத்திலிருந்தே விடுவது பெரும்பான்மை யோரா லா
காதகாரியமாதலின், அவ்விரக்தன் சிறைச்சாலையி லிரு
ந்து விடுபட்ட திருடனைப்போல் தூரதேசத்தில்போ
யப்பியசிப்பன். அவன் அகங்காரமாகின்ற பிள்ளைகளை
யும், திரவியமாகின்ற சகோதரர்களையும், மோகமா
கிய வீட்டையும், ஆசையாகிய மனைவியையும் விட்டி
ருப்பன். பிறகு சிரத்தையாகிய களத்திரத்தையும்,
ஞானமாகிய புத்திரர்களையுங்கைப்பற்றி, அதனால் பிர
மத்தையே சரணமடைவன். இந்தச் சகலமும் பிரமமே
வென்கிற நிச்சயத்தோடு, நிருவிகற்ப சமாதியுடன்
சுதந்திரனாய் பயமில்லாமல் வசிப்பன். ஈடணாத்திரயத்
தில் தினையளவும் பற்றில்லாமல் அப்பியசிப்பன். ஆனா
லதை விடவேண்டுமோ வதனை யுண்மையில்விட்டு
ஞானமடைந்தவனே முத்தன்; அவனே இராஜயோகி;
அவனே பரமஅம்சன்; அவனேயே அவதூதனெனவும்
பிரமஞானியெனவுங் கூறுப. எப்போதொருவனுக்கு
வைராக்கிய முண்டானதோ, வுடனே இருவகைப் பற்



றுக்களையு மொழித்து, வுபாதியடைந்து நிட்டையடை
யமுயலுவன். அபரிச்சுத்தமான அந்தக்கரணமுடை
யவன் வேதாந்தவாக்கிய சிரவணத்திற்கே அதிகாரியா
காதபோது, ஞானமடைய முடியுமா, முடியாது. மே
லும் பிரமநிட்டையென்பது சர்வகன்மங்களையும், இரு
வகைப் பற்றுக்களையும்விட்டுப் பிரமாகாரவிருத்தியோ
டிருப்பதே ஆதலின் அகமமதையற்றவர்களுக்கே அந்
நிட்டைபொருந்தி யமலஞானமான பேரானந்தமுண்
டாகும். சிலர் அப்பியாச காலத்தில் ஏகாந்தமான
விடத்திலிருந்து இந்திரிய நிக்கிரகஞ்செய்து மனதை
யொருமுகப்படுத்த முயலுவர். அதனால், இத்தேகம்
நானென்கிறவாசனை பைய பையக் குறையும்.

தாயுமானசுவாமிகள்.

"நித்திரையிற் செத்தபிண நேருமுடற் கிச்சைவையா
[ச்
சுத்தர்களே நல்ல துறவோர்."

"உடன்முத லபிமானத்தை யுடையவன் முத்தி சாரான்"

திருவள்ளுவநாயனார்.

"நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்."

தாயுமானசுவாமிகள்.

"அந்தக்கரண மடங்கத் துறப்பதுவே
யெந்தத் துறவினு நன்று."

குமாரதேவர்.

"பொருந்திவா ழிடமொன் றாகிற் பொருந்திடும் பற்றென்
றெண்ணி, யிருந்தில னோரிடத்து மெங்கெங்கு மொருவ னாகி."

மேலும் அஞ்ஞானிகளுடைய சங்கத்தை விட்டொழிக்கவும், சத்திரங்களி லனேகர்வந்து சேர்ந்து சில நாளில் பிரிந்துபோவதுபோல், தமது குடும்பத்தினரு மவ்வாறேயென பற்றொழிக்கவும் குடும்பத்தைவிட்டு சிலர் தூரதேசத்திற் சென்று அப்பியசிப்பர். இது நிற்க, ஒருவன் எவ்வளவு விரக்தனாயிருந்தாலும் அவனுக்கு பிரபஞ்சவாசனையும், சாமக்குரோதாதிகளும், நானெனதென்கிற விருவகைப்பற்று, மோரிடத்திலேயே யிருப்பதாலுண்டாவது திண்ணம். இவனுக்கு ஞானம் சீக்கிரத்தில் லபிக்காது. மேலும் சகலரும் மகானென மதித்து வணங்குதலால் பந்தமும், அகம்பாவமுந் தோன்றும்; உடனே பிரபஞ்சவாசனைமிகும், அதனால் சமுசாரியாகத் தடையிராது. அன்றியும், மாதர் கூட்ட மெவ்வகைப் பட்டவரையும் விழுங்கி



விடுமல்லது மீளவிடாது, ஆதலின் பிரபஞ்சமுந்தானும் பிரம சொரூபமென்று பார்த்து, ஓரிடத்திலேயேயில்லாமல் சந்திரனைப்போல பலவிடங்களிலும் வாசஞ்செய்து, பலரையுஞ் சந்தோஷிப்பித்திருப்பவனுக்கு முத்திவெளிதிலுண்டாகும். இல்லறத்திலிருந்தே அத்தகைய அகத்துறவடைந்தவன், கருமத்தையும் உலகத்தையும் விட்டுவிடாது பகிர்முகனாய் நீ நானென்கிற பேதமில்லாமல் நாமரூபங்களொன்றிலும் உண்மையில் பற்றில்லாதவனாய், உலகில் சாமான்னிய நோக்குடையவனாயிருப்பன். ஆதலால் நீ சர்வகாலங்களிலும் பிரமாகார புத்தியுடனிருந்து, தேகோகம் நீங்கி, வைராக்கியத்தினாற் சகல வெண்ணங்களையும் விட்டுச் சிரவணமனனாதி வர்யில,க நிட்டை பழகுவாயாக. அதனால் ஆத்மஞானத்தைப்பெற்று, ஆன்மாவிலேயே அன்புள்ளவனாகி, விடயங்களிலாசையில்லாதிருப்பாய். மேலும், நீ மோக்ஷதாகமுடையவனாதலின், உனக்கபிமானமுள்ள ஒரு குருவினிடமொரு வருஷகாலமாவது சிசுருஷை செய்து, சாதன சதுஷ்டயங்களை யுண்மையிலடைந்து, சலனமற்று, சொரூபத் தியானத்துடன் தேகாபிமானத்தைவிட்டால், ஞானத்தையடைந்து முத்தனாவாய்.

## குமாரதேவர்.

"பவகா ரியத்தை யுடையோர்க்குப்
பகுப்பே யென்றுந் தோன்றியிடும்
பவகா ரியத்தை யொழிந்தோர்க்குப்
பகுப்பொன் றின்றிச் சிவந்தோன்றும்."

மேலும், துறவிகள் அந்நியரைப்பார்த்து மரியா
தை செய்வதும், வா, போ, இரு, என்று சொல்வ
தும், ஸ்திரீகளுடன் வேறு எண்ணத்தோடு பேசு
வதும், தகுதியன்று. சர்வகர்ம சந்நியாசத்தைப்
பெற்றவன், தான் பிறந்தவூரிலேயேவிராது, எங்கும்
நான்குமுழப் பார்வையோடுதிரிந்து, விரும்பிய மோ
க்ஷத்தை யடைவன். அகத்துறவடைந்தவன், எப்போ
தும் சுகதுக்கத்தைச் சமமாகவெண்ணி, பிதுர்காரியம்,
யாத்திரை, விரதங்கள், முதலியவற்றைப் பற்றற்று
செய்தும், சதாகாலமும் உண்ணோக்குடையவனாயிருத்
தல் வேண்டும். அவன், எப்படிப்பட்ட சமயத்திலுந்
தான் பூரணனென்கிற புத்தியைமறவாது அப்பிய
சிக்கவேண்டும் காமமாதிகளை விடுவது, முற்றுந்
துறந்த முனிவர்க்கு வாய்க்குமேயன்றி, மற்றவர்க்கு
விடுவதரிது. ஆனால் அகத்துறவடைந்து, வேண்டுதல்



வேண்டாமை யென்கிற விரண்டுமின்றித் தாமரை
யிலையில் சலமொட்டாதது போலும், புளியம் பழத்
தோட்டைப் போலவும், பற்றற்றிருக்கும் இல்லறத்
தானுக்கும், முத்தியெளிதில் சித்தியாகுமென்றறி. மே
லும், இவ்வாறு ஞானமடைந்த சீவன்முத்தன், சரீ
ரத்தை விட்டவுடன், அதைப் பார்த்தவர்களச்சரீ
ரத்தை சமாதி செய்து பூசிக்கவேண்டும். இதற்கு தீட்
டென்பதில்லை; அத்தேகத்தை யக்கினியில் எரித்தல்
கூடாது; அதற்கு மாசிகம், சிரார்த்தம், முதலியவை
களுஞ் செய்ய வேண்டியதில்லை. அத்தேகமானது
ஞானக்கினியில் வெந்ததாகையால், மீண்டும்வேகவைப்
பது தகுதியன்று இச்சீவன்முத்தர்களுக்குக் கண்,
காது முதலியவையிருந்தும், இல்லாது குருடு,
செவிடு, முதலியவர்களைப்போலவே யிருப்பர்கள்.

## ஞானவாசிட்டம்.

"சொல்லா வூமை குருடுசெவி டொத்துத் தூய
வான்மாவி, னில்லா யுள்ளே முகமாகி நித்த னொய்
தாய் நிறைமதிபாய்"

உலகிலனேகரிவ்வாறு,வுள்ளத்துறவுபூண்டு,அது வாயிலாக தத்துவஞானியாக முயலாமல், கருமங்களை மாத்திர மொழித்து, தாடிவளர்த்தும் சிகையை முண் டித்தும், அல்லது வளர்த்தும், யக்கியோபவீதந்தவி ர்த்தும், வேடதாரிகளநேகரிருக்கின்றனர். இவ்வாறு செய்வது,உண்மைத்துறவிகளான ஞானிகளின் முன் னே செய்யும் பரிகாசமேயாம். இதனாலவர் முத்திய டைவதில்லை; கோரமான நரகத்தையே அடைவதிற் கிஞ்சித்துஞ் சமுசயமில்லை.

திருக்குறள்.

"மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்"

இதனால் உலகம் மித்தையென விசாரித்துத்தள் ளின்வர்க்கு, ஒருவித வேடமும் வேண்டாமென்பது பெறப்பட்டது. உண்மைத் துறவிகளுடைய பெரு மையைப்பற்றிக் கூறப்புகின், எண்ணிலுமடங்கா எட்டிலெழுதவுமடங்கா;

திருக்குறள்.

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக் கொண்டற்று."



மற்றுஞ்சிலர் சந்நியாசியென்றால், சகல கருமங் களையுஞ் செய்து கருமபலத்தியாகியாயிருத்த லென் பர்; இல்லறத்திலிருந்துதா னிதைச்செய்ய முடியும்; இல்லறத்திலும், தக்கமனைவியில்லாவிடத்து அவ்வாறு கருமங்களைச் செய்ய முடியா. தக்கமனைவியைப் பெற்று, இல்லறம் நடத்த முடியாவிடத்து துறவு கொள்ளுதல் மிகவுமுத்தமம்;

ஆன்றோர்.

"பத்தாவுக் கேற்றபதி விரதை யுண்டானால்
எத்தாலுங் கூடி வாழலாம் சற்றேனுந்
தாறுமாறு யிருப்பா ளேயா மாகில்
கூறுமற் சந்நியாசங் கொள்."

சீ.—அவ்வாறான பதிவிரதையின் இலக்ஷணம் யாது?

கு.—அந்நிய தேவதையைத் தொழாது,கணவனை யே தெய்வமாகப் பாவித்து நடப்பவளே பதிவிரதை;

திருக்குறள்.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை."

சீ.—பதிவிரதாதர்ம மில்லாதவளுடன் வாழ்த லேத்தன்மைத்து?

கு—ஒருவன் குடிசைக்குள் பாம்பை வைத்துக் கொண்டு, அதனுடன் தான் கூடிவாழ்தல் போலாம்;

திருக்குறள்.

"உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று."

ஆதலால், நீ யகத்துறவை யடைந்து, சிவபர ஐக்கியானுசந்தானஞ்செய்து, நான் சந்நியாசி, ஆத்மா ராமனென்றும், ஸ்திதப்பிரக்ஞகை விருப்பாயாக. மே லும், சிலர் பெண்டு பிள்ளைகளைக் காப்பாற்றுந்திற மில்லாமையாலேயோ, மனைவி வியபிசாரியானதினாலே யோ, மகன் கள்ளனானதினாலேயோ அவர்கள் பேல் வெறுப்படைந்து, காஷாயத்தைத் தரித்து துறவிக ளைப்போல் நடிப்பர். இவர் பசு புலித்தோலைப்போர் த்து பயிர் மேய்வதுபோலும், காசிக்குப் போயுங்கரு மந் தீரவில்லை யென்பது போலும், பெருப்பாலும் வேசப் பெண்களைத் துணையாகக்கொண்டு காலங்கழிக் கின்றனர்;



திருக்குறள்.

"வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று."

சந்நியாசத்துக்கு நிராசை காரணமே யல்லது வேஷங்காரணமல்ல; ஆதலின், உலகின் மேலுவர்ப்பு வுண்மையில் வந்து, அகப்புறப்பற்றுக்களைத் துறந்து சிவோகம் பாவனையாகிய சிவபரவைக்கியானு சந்தா னஞ் செய்திருந்தா லெடுத்தசன்மத்திலேயே இடை யூறின்றி பேரின்பப்பேற்றை யடையலாமேயன்றி வே டத்தினாலாய பயனில்லை யென்றறி.

குமாரதேவர்.

"அந்த மாதிப்புமிலா வீடடைந் துடற்பிறப் பறு க்கச், சுந்தர ஞானம்போதுந் துறவற மேதுக்கென் றே, மந்ததிகாரி போமைமதித்து நூலுரைக்குஞ் செ. ய்தி, அந்தமான பேருக்கத்தகை விளம்பாதென் றும்."

சீ.—இல்லற ஞானிகளாயிருந்தவர் யார் யார் அறிய விரும்புகிறேன்.

கு.—சனகர், அஜாதசத்துரு இவர் முதலியோர். இவர் விருப்பு வெறுப்பு, தனது அன்னிய, முதலியன வற்று, இல்லறத்தி லிருந்தே சீவனமுத்தர்களாய் வாழ்ந்து முத்தி பெற்றவர்கள். இல்லறத்திலிருக்கும் இல்லற ஞானிகள், இரும்பிற் பதிந்த இரத்தினம் போல விளங்குவர்; துறவற ஞானிகள், பொன்னிற் பதிந்த இரத்தினத்தைப்போல் விளங்குவர். மேலும், சகலகருமமுந் தேகேந்திரியங்களினால் செய்யப் படுகின்றனவாதலின், நான் கருத்தாவல்லவெனப் பாவனை செய்யவேண்டும். எந்த விஷயத்திலும் அகமமதைகளை அடியோடே யழிக்க மிகவும் பிரயத்தினஞ் செய்தல் வேண்டும். விருப்பு வெறுப்படைதல் கூடாது. நித்தியமாகத்தோற்றுமிச்சகத்தை மோகத்தினாலே மறந்தும் நித்தியமாக நினையாமல், தான் ஆனந்த சொரூபமாக விருப்பதே அநுபவம்; அதுவே நிருவாண சுகமாம்.

சீ—இல்லற ஞானிக்கும், துறவற ஞானிக்குமுள்ள தாரதம்மியத்தை நன்கு விளக்கவேண்டும்.

கு.—இல்லறஞானிகள் பிரவர்த்தியிலிருந்துகொண்டே பற்றற்றிருப்பர்; துறவற ஞானிகள் நிவர்த்தியில் பிரவர்த்தியாயிருப்பர். முற்றுந் துறந்த முனி



வர்களடைந்த ஞானமானது, படுத்துத் தூங்கின தன்மையாகும்; அது சகசம். இல்லறஞானி, உலாவு தலையும் விடாது, தூக்கமுங்கொள்வது; இவ்விரண்டில், விசேடமெதுவோ நீயே யோசித்துப்பார். இருவரடைந்தது தூக்கமேயாதலின் அநுபவத்தில் பேதமில்லை யென்றறி.

சீ.—குருவை யடைபவன் அவருக்கு வுடல்,பொருள், ஆவி, மூன்றையுந்தத்தஞ்செய்ய வேண்டுமென சாத்திரங்கள் கூறுகின்றனவே; அவற்றின் அபிப்பிராயம் யாது?

கு.—உடல், பொருள், ஆவி, மூன்றையு மிதுகாறும் நான் எனதுவென அபிமானித்து, அகங்கார மமகாரங் கொண்டிருந்தாய். இனியவற்றில் எனக்கென யாதொரு சுதந்தரமுமில்லை, நான் சுதந்தரவீனன், நான் உம்முடைய நிறைவில், அந்நியமாக வில்லையென்று அகமமதைபற்று எல்லாமுன்னுடையதேயென குரு சந்நிதியில், உள்ளன்போடுதத்தஞ் செய்யவேண்டும். அஃதாவது, குருவுஞ்சீடனும் ஏகமான விட்மே தத்தம்; அதுவே மலமொழிந்தவிடமென்பதாம். அவருக்கு உன்பொருளை யெவ்வாறு கொடுத்து விடுகிறதென யோசிக்க வேண்டாம்; அவர்

களிடம் அருட்செல்வம் நிறைந்திருப்பதனாலல்லவோ, வானமும் வையமும் வலிபேவந்து அவர்களது தாளை வணங்கும். ஆதலின், அவர்களை தன்னியர் மற்றையருக்கு அருட்செல்வமில்லாது, பொருட்செல்வமுடையகோடீஸ்வராயினும் அத்தகைபவர்கான்களை வணங்கி யேவல்புரிகிறார்கள்;

ஆன்றோர்.

"துறவிக்கு வேந்தன் துரும்பு"

திருக்குறள்.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."

"அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்
பூரியார் கண்ணு முள" [செல்வம்

'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும்."

தாயுமானசுவாமிகள்

"யானெனல் கண்ணேன் பூரண நிறைவில்
யாதினு மிருந்த பேரொளி நீ."



திருமந்திரம்.

"ஞானத்தின் மிக்க தவநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றது
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே."

சீ—தாங்கள் கூறியதுபோல அநேகர் மாமிசந் தின்பதில்லை; எவ்வுயிரையுங் கொல்லுவதில்லை யென்றிருக்கும் பிராமணர் சைவர் முதலானவர்களை யுலகிலெத்தகையினரும் வந்து தொழக்காண்கிலனே;

கு.—அது சாமானிய அருத்தம்; தான்பிரமமாக பிரிவே யிருக்க அதைமறந்து, தன்னைச் சிவனாகவும் பித்து காண்பது தற்கொலையாம். தான் தேகமெனக்கொண்டு, பிரிதோர் தேகத்தை யிச்சித்தலே, மாமிசம் புசித்தலாம். ஆதலின் புலால் மயமாகிய இத்தேகத்தை தானல்லவென விசாரித்துத் தள்ளி தான்ஞான சொரூபியெனக்கண்ட ஞானிகளை யெல்லாவுயிருந்தொழும்; இதுவே சாத்திரசம்மதமாம்;

சந்நிதிமுறை

"புலையுங்கொலையுங் களவுமில்லாப் புனிதத் தவத்தோர்
தொழுதேத்தும் புராரிகுமரா வுனமைசிறுவா
போரூர் முருகப் பெருமானே."

இங்கு, விடயடநுகர்ச்சியே புலை; தேகோகபாவமே கொலை; சங்கற்ப வெழுச்சியே களவென்றறி.

சீ.—ஞான நூலில் பழகுவதும், விசாரணை செய்வதுமே போதும்; குருவொருவர் அவசியமில்லை யெனச் சிலர் கூறுகிறார்களே; அதனுண்மையாது.

கு.—குருவென்னும் பதத்தில், இரண்டக்ஷரங்களடங்கி யிருக்கின்றன. அவற்றுள் கு, என்பதின் அர்த்தம் அஞ்ஞானம் அல்லது இருள்; ரு, என்பதின் அர்த்தம் அதைக் கெடுப்பது; அஃதாவது, இருளான அஞ்ஞானத்தை கெடுப்பவன் குருவென்றாயிற்று. மேலும், தசமன் திருஷ்டாந்தத்தில், பத்தாவானைக் காணோமென்று துக்கத்தில் மூழ்கினின்றவனுக்கு, வழிப்போக்கனொருவன் வந்ததினாலன்றோ அவனுக்கிருந்த துக்கம் நீங்கி சுகமுண்டாயிற்று

சீ.—தசமன் திருஷ்டாந்தத்தையும், அதன்தாஷ்டாந்தத்தையும், நன்கு விளக்கவேண்டும்.

கு.—பத்துபேரோராற்றை நீந்தி அக்கரையிலேறி யப்பத்துபேரிலொருவன், ஒன்பதுபேரையெண்ணி யவ்வெண்ணிக்கையுடன் தன்னையுஞ் சேர்க்காது, பத்தாவது மனிதனைக்காணோமென்று துக்கித்து



நின்றானும். இங்கு பத்தாவதுமனுஷனைக்காணோமென்பது அஞ்ஞானம்; இருந்தால்காணானே, காணப்படவில்லையென்பது ஆவரணம்; துக்கித்தழுதல் விக்ஷேபம்; அப்போது வழிப்போக்கனொருவன், பத்தாவானிருக்கின்றானே, ஏன் துக்கமுருகின்றாய் என்று சொன்ன சொல்லின்குறியால் நிதானித்துப்பார்த்தது பரோக்ஷ ஞானமாம்; அவனைக்கொண்டே மீண்டும் எண்ணச்சொல்லி, எண்ணிய நீ பத்தாவது புருடனல்லவா, உன்னை எண்ணாது விட்டுவிட்டாயென்று கூறினவுடன், பிரத்தியக்ஷமாய்த்தன்னைக்காண்டால் போல்வது அபரோக்ஷஞானமாம்; பின்பவனுக்கிருந்த துக்கநீக்கமே துக்கநிவர்த்தியாம்; தன்னைச்சந்தேகமில்லாது கண்டு, தெளிதல்போல்வது தடையற்ற ஆனந்தமாம். அதற்குத்தாஷ்டாந்தம், ஜீவன்நான்சமுசாரி துக்கத்திலழுந்தியிருப்பவனெனல் அஞ்ஞானம்; ஆன்மா ஒன்று, தேகத்துக் கன்னியமாகவுளதேல் காணானே, காணவில்லையாதலினில்லை யென்பது ஆவரணம்; சரீரத்திரயத்தையும் சிதாபாசனையும் நானென்க்காண்பது விக்ஷேபம்; ஆப்தனுபதேசத்தால் பிரமமொன்றுண்டென வறிவதே பரோக்ஷம்; வேதாந்த சிரவணத்தினால் அப்பிரமம் தானென்றறித

லே அபரோக்ஷம்; நான்கர்த்தாபோக்தாவல்ல வென்றறிதலே துக்கநிவர்த்தி; செய்யவேண்டியதைச்செய்து முடித்து, அடையவேண்டியதை யடைந்தோமென்கிற சந்தோஷமே, தடையற்ற வானந்தம். ஆதலின் நான் பாபி நான்சீவன் நான்துக்கியென வருந்திபிருப்பவனுக்குஇப்போது குருவொருவர்கிடைத்ததினாலன்றோ இலக்கணார்த்தத்தால் தன்னை தரிசிப்பித்தார்:

சீ.—இலக்கணார்த்த மென்பதிபாது; அருள வேண்டும்.

கு—அஃதாவது, பஞ்சபூத காரியமாயுள்ள இச்சரீரத்தை, நேதல்ல நேதல்ல வென்கிற நேதிவாக்கியத்தினால்நீக்கி மிஞ்சிநின்றவஸ்து வெதுவோ அது ஆத்மாவென்றறிவது அதத்துவா விருத்திலக்ஷணம்; இந்தப் பிரபஞ்சத்திற் கெதுவிருப்பிடமாயுள்ளதோ அதுவே ஆத்மா வென்பது தடத்தலக்ஷணம்; சத்துசித்து, ஆனந்தம், பூரணம், நித்தியமென்கிற இலக்கணம் ஆத்மசொரூபத்தினதென்பது சொரூபலக்ஷணமாம். அதனால் நீ சீவனல்ல நீஆன்மா, அதுவே நித்தியன், பிறப்பிறப்பில்லாதவன் எனத்தன்னை தரிசிப்பித்து தடையற்ற ஆனந்தத்தையுங்கொடுத்தது குருவருளினாலன்றோ; ஆகலின் செவ்வைபாய்படித்திருப்பினும், உயர்ந்தகுலத்திற்



பிறந்திருப்பினும், அவனுக்கு நித்தியசொரூபம், பிறவிக்குருடனுக்கு வஸ்துசொரூபந்தெரியாததுபோல, குருவுபதேசமின்றி ஆன்மசொரூபம் வெளியாகாது. அத்தகைய குருவினிடத்து எவனுக்குத்தெய்வத்தினிமிருக்கும் பத்திபோலவே, மேலான பத்தியிருக்குமோ அவனுக்கே ஈண்டுசொல்லிய அர்த்தங்கள் பிரகாசிக்குமென்றறி.

அருணகிரியந்தாதி.

“கற்றதனாற் றொல்லைவினைக் கட்டறுமோ நல்லகுலம்
பெற்றதனாற் போமோ பிறவிநோய்.”

ஆன்றோர்

“கற்பனை கள்யாவும் பாழாக்கித் தானுக்கும் பர
குருவைப் பணிவாம்.”

அமிர்தசாரம்.

“உள்ளத்தினின்று மொளித்தான் பரன் குரவன்
கள்ளந் தனைத்தவிர்த்துக் காட்டினான்.”

தாயுமானசுவாமிகள்.

“கேட்டதையே சொல்லுங் கிளிபோல நின்னருளி
னாட்ட மின்றி வாய்பேச னன்றோ.”
“குருபார்வை டல்லாமற் கூடக் கிடைத்திடுமோ”

வள்ளலார்.

"குருவிலான் பெற்றஞானங் குமரியைக் குமரிகூடி மருவிய வின்பமொக்கும் மண்ணிடை நம்போல் வந்த குருவினல் பெற்றஞானங் குமரியைக் குமரன்கூடி மருவிய வின்பமொக்கு மென்பர் நன்மதியுளோரே"

நிட்டானுபூதி.

"உரியதே சிகனுரைக்கு மொருமொழி யுண்மையாலே யரிய மெய்ஞ்ஞான வீடிங் கடைவது திண்ணம்."

"வித்தக மாகப் பலகலை பயின்று பேவுநற் பட்டகளை யறிந்தும், தத்துவ முழுதுங் கசடற வுணர்ந்துந் தன்னிலை யறிவதற் கரிதாஞ், சுத்தமெய்ஞ் ஞான தேசிகன் மகிழ்ந்தே சொல்லாமற் சொல்லுமோர் மொழியா, முத்திரை மோன நிலையினலன்றி முத்தியிங்கிலை கிடையாதே."

சிவஞானதீபம்.

சாத்திரப்புத் தகப்பூசை சமயமதந் தருக்கந் தந்திரம் மந்திரம் யோகந் தவம்விரதஞ் சீல,மேத்தரிய பாவனையெண் சித்திகளே முதலா மெப்பயனு முத்திக்கு விலக்கெனவொருசொல் லதனுற், தீர்த்தவன்மெய்த் தேசிகனு மவனருளாற் சித்தமல மொழித்து.



நிட்டாநுபூதி.

"கட்டறத்துறந்தே யுயிர்பொருட் சார்பைக் கருதிடும் வாசனையனைத்து, மொட்டற விடுத்து ஞான நூலனைத்து மோர்ந்திடி லென்பய னுதவு, மெட்டுதற் கரிய சற்குரு வருளா லியம்புமோர் மொழியினைப் பெற்றே, நிட்டைசா தித்தே சகலகேவலங்க ணீங்கிடிற் பிறப்பிறப் பறுமே."

சீ.—குருவை யடைந்தாலவர் ஞானக் கண்ணைத் தருவாராமே; அதனையடியேனுக்குத் தரல்வேண்டும்.

கு.—அந்தஞானக்கண் எல்லாருக்குமே பொதுவாயுள்ளது. அதுமனக்கண்ணென்றே அறி. அக்கண் சீவனது சங்கற்பத்தாலும், ஆசையாலும் மூடப்பட்டுள்ளது. அது, ஞானசாத்திர விசாரணையில் முயற்சியுடையசீடனுக்கு, குருவின் அருட்பிரகாச திருஷ்டியினுற் திறக்கப்படும்.

ஞானக்கும்மி.

"கண்ணு லேமனக் கண்ணு லேவதைக்
கண்டா லேவழி யுண்டாகும்."

அது திறக்கப்படின் ஜகம் நித்தியமென்பதை மறந்து மனது விஸ்ராந்தியடையும். அந்த ஞானக்கண்ணால் நிருவாண சுகமுண்டாகும். பிறகு, சொரூபத்தை நீ தரிசித்து மயக்கம் நீங்குவாயானால், நீ பதத்தைப் பற்றிருப்பாய்.

சீ.—யோகமாவதுயாது; அஃதின்றி ஞானமடையக்கூடாதா; கூடாவெனின் எவ்வாறதனைப் பழகுதல்.

கு.—யோகமென்பது பாஹிய மனோவிருத்தியைத்தடுப்பதாம். இது அகத்தொழிலினால் சொரூபத்தை நோக்கிச்செய்யும் வழிபாட்டினாலெளிதிலுண்டாகும். இது சித்த சுத்திவழியாக ஞானத்தை யுண்டாக்கி மோக்ஷத்திற்குச் சாதனமான கருமமாம். அது இரண்டுவிதமாகக்கூறுப; சித்திமாத்திரம் வேண்டிச்செய்யும் யோகம் கருமயோக மென்றும், ஞானமாத்திரம் வேண்டிச்செய்யும் யோகம், ஞானயோக மென்றுங் கூறப்படும். பலாபேக்ஷையின்றி ஈசுவரார்ப்பணமாகக் கருமஞ் செய்வோருக்கு யோக மெளிதிலுண்டாகும். இதனை யடைவாயானால் சாங்கியமென்னும் ஞானயோகத்தை யெளிதிலடைவாய்; அந்தக்கருமயோகம் எண்வகை.



சீ.—அவைபாவை?

கு.—(1) இயமம்; (2) நியமம்; (3) தியானம்; (4) ஆதனம்; (5) பிராணாபாமம்; (6) பிரத்தியாகாரம்; (7) தாரணை, (8) சமாத; என்பனவாம்.

ஞானயோகமாவது சொரூபத்தை விசாரித்தலே, இது சிறந்தது. கருமயோகத்தை யனுஷ்டிப்பதால் சித்தியைத்தரும்; அதனால் விநோதமாக விளையாடலாமேயன்றி ஐக்கியமுத்தித் தாராது. ஞானயோகத்தை யுத்தமவதிகாரியான அதிதீவிரபக்குவமுடையோரே வனுஷ்டிப்பர். நீ விசாரிக்கப்புகுந்தனையாதலால் நீ ஞானயோக வப்பியாசியாகக் கடவாய். ஆதலின், இந்திரியங்களைத்தடுத்துமனதை அகமுகப்படுத்தி அதுபூரணமாய் விடத்து நாமரூப நாட்டமில்லாமை கண்டு, நான் பிரமத்துக்கன்னியமல்லவெனத் தெரிந்து வாறிருப்பாயாக. கருமயோகத்தின் முடிவாகியப்பயன் சித்திகளன்று ஞானமாம். சித்திமாத்திரம் விரும்பினால் தடுமாற்றமுண்டாகும்;

தாயுமான சுவாமிகள்.

"கற்றாலுங் கேட்டாலுங் காயமழியா சித்திப்
பெற்றாலு மின்ப முண்டோ."

"விறசித்தி செய்தும் ஞானமதை கதிகூடுமோ."

சசிவர்ண போதம்.

"ஐயறி வறிந்தவை யடங்கினவ ரேனும்
மெய்யறி விலாதவர்கள் வீடது பெறுரே."

சீ.—சுவாமி! ஞானம் அஞ்ஞானங்களின் தாரதம்மியம்யாது?

கு.—அப்பா! ஞானமென்ருல் உண்மையறிவு; அஃதாவது, தேகேந்திரியவிலக்ஷணனுய் நின்று, தன்னைப்பரமானந்தபோத பரசொரூபமெனவறிவதே ஞானமாம். இரண்டாவதற்ற பிரமத்தில் ஜக, ஜீவ, பர பேதத்தைக் கற்பித்துத் தன்னை ஜீவனுகவும் தேகமே தானென்வும் பாவித்து சுட்டறிவோடிருப்பதே அஞ்ஞானமாம்.

ஆன்ருேர்.

"தன்னைச் சீவ னெனத்திரிவாய்த் தானின் றுணர்த லஞ்ஞானம், தன்னைப் பிரம மெனத்துணிவாய்த் தானின் றுணர்த லேஞானம்."

சீ.—ஞானத்தை நன்குவிளக்க வேண்டும்.



கு.—எதிரீடின்றி தேகம் தேகிகளைப்பற்றிச் சுருதி யுத்தி யனுபவமாக விசாரித்துத் தெரியும் ஆத்மவனுத்ம விவேகமும்; சகலத்திலு மப்பிரமம் அந்தரியாமியாக விருப்பதென்பதும்; அப்பிரமம் தனக்கன்னியமல்லவென்பதும்; சமமாயும், சாந்தமாயும், சச்சிதானந்த லக்ஷணமுடையது சைதன்னியமென்பதும், ஆத்மா சச்சிதானந்த வடிவமென்பதும், அதுவே தனது ஆத்மசொரூபமென்பதும்; அதுபிறத்தலிறத்தலற்றதென்பதும்; அது விவகாரமற்றதென்பதும்; சற்குருவினிடம் சிரவண, மனன, நிதித்தியாசனமிவைகளால், நான் பிரமமென்கிற சாக்ஷாத்கார வநுபவமுண்டாவதாமென்பதும், சதோதயமான தனதாத்ம சொரூபமே இவ்வாறு விளங்குகிறதென்னு நிச்சயமும்; திரிசிய மனைத்துந் திருக்குவடிவே என்னும் விசாரமானது ஞானமாம். இதைத் தொடர்பாக வுடையவருக்கு அந்த ஞானமெளிதிலுண்டாகும். இந்த விசாரம் சிறத்தையுள்ளவருக்கே வுண்டாகுமென்றறி. அந்த ஞானமே அபரோக்ஷமென்றும், பரஞானமென்றும், தத்துவ ஞானமென்றும், மெய்யுணர்வென்றுஞ், சொல்லப்படும். நீ, சிறத்தையோடு தத்துவத்தை விசாரிப்பையானுல், நீ நிச்சயமான ஞானவானு

வாய். இப்பரஞான சொரூபமும், அபரஞான சொரூபமும் நன்றாய் விளங்கினவருக்கே அது விளங்கும்.

சீ.—அங்ஙனமாயின், ஞான பேதத்தைத் தெரிவிக்கவேண்டும்.

கு.—ஞானம், பரோக்ஷம் அபரோக்ஷம், அல்லது, அபரம் பரஞானமென்று இருவகையாகக் கூறப்பட்டுள்ளது. சிறத்தையோடு வேதாந்த சாத்திர விசாரணை முயற்சிவாயிலாக, சத்தியஞானானந்த பிரமமொன்றுண்டெனத்தெரிவது பரோக்ஷம், அல்லது அபரஞானமாம். இதனால் அபரோக்ஷ ஞானாநுபவமான விஸ்ராந்தியுண்டாகமாட்டாது. இப்பரோக்ஷமுண்டாகாததற்கு பிரதிபந்தம், சிறத்தையில்லாமையே. பரோக்ஷ ஞானத்தின் வாயிலாக சமாதிபழகி அந்த பிரமந்தானென்றறிவது, அல்லது, தத்துவமசியாதி மகாவாக்கிய சிரவணத்தாலுண்டாகும் பிரத்தியக்கபின்ன பிரமத்தை விஷயஞ்செய்யும் வித்தை அபரோக்ஷம், அல்லது பரஞானமாம். இந்த ஞானம்வந்தவிடத்து கர்த்ருத்துவ போக்தத்துவமும் நீங்கி, பேதமற்று இந்தவுலகஞ் சொப்பனம்போற்றோன்றி, தேசவிபரீதமற்று பொய்யாய்த்தோன்றும். அப்போது பிர



மத்திற்கலந்த அந்தக்கரணமுடையவனாய், நி விசேஷஸ்திதியிலிருப்பதுதான் சுவாநுபவர். இ வே அபரோக்ஷஞானத்தின்பலன்.

சீ.—சுவாமி! சாத்திரம்படித்தும், விசாரணைசெய்தும், சாக்ஷாத்காரம் பிறக்கவில்லையே, யாதுகாரணம்?

கு.—அப்பா! விபரீதபாவனை யொழியாமையே; ஆதலின் சாக்ஷாத்காரம் வருமளவும், நிரந்தரம் சுருதி, குரு, வாக்கியத்தில் மனதைச் செலுத்தி விசாரித்து, ஒருமுகப்பட்டு நின்றால் ஆத்மதரிசன முண்டாயதனால் விஷயவிச்சைகளுங் கெடும். பிறகுசாக்ஷாத்கார முண்டாகும்.

தாயுமான சுவாமிகள்.

“கற்ற கலையால் நிலைதான் காணுமோ காண்பதெல்லாம், அற்ற விடத்தே வெளியா மன்றோ.”

சீ.—சாக்ஷாத்காரமாகியும் ஆனந்த முதயமாக வில்லையே, யாதுகாரணம்?

கு.—சந்திரப்பிரகாசம் மலினசலத்தில் சாமானியமாகத் தோற்றுவதும், நிர்மலசலத்தில் சுத்தமா

கத்தோற்றும். மேலும் எப்படி அக்கினிக்குள்ளபிரகாசம், சூடு, செம்மை யென்கிற மூன்று குணங்களுள், சலத்தில் சூடும், விரகில் சூடு செம்மை யிரண்டும், தீபத்திலம் மூன்றும் விளங்குகின்றனபோல், அப்படி, ஆத்மாவின் சச்சிதானந்தங்களுள், சத்து முதலிய மூடவிருத்தியிலும், மூடகோரவிருத்திகளில் சத்தும் சித்தும், சாந்தவிருத்தியில் சத்து சித்து ஆனந்தம் மூன்றும் விளங்குகின்றன. ஆதலினுனக்கு வைராக்கியவாயிலாக சாந்தவிருத்தி வாராமையால் ஆனந்தமுண்டாகவில்லை யென்றறி.

சீ—ஞானமடைவது விவ்வளவு லேசான காரியமாயின், அநேகர் இது பிரம்மவித்தையோவென ஏன் கூறவேண்டும். ஞானமில்லாத மனிதருமுலகிலுண்டோ?

கு.—பிரகாசமின்றி பதார்த்தம் விளங்காமைபோல, விசாரமின்றி ஆத்மஞானம் விளங்குவதில்லை. மேலும், சரீரம் நானென்னும் களங்கத்தினுல், ஞானதிருஷ்டியை யவரடைந்தாரில்லை. அவர்களுக்கது முடியாதகாரியமே. ஆதலின், தேகோகம் நீங்கினவர்களே பிரமோகம்பாவனையை யெளிதிலடைவர். மேலும், சகலமனிதருமே மோக்ஷதாகமுடையவர்களா; தாகமெடுப்பவனுக்குச் சலங்கொடுத்தால், அதனுடையவின்பம் அவனுக்குத்தான் தெரியும்; அவ்வாறே, அதிதீவிர பக்குவனுக்கு ஆசிரியருபதேசித்தால் அக்கணமே அவனதுவாவன். மந்தாதிகாரி யெத்தனை ஜன்மங்கேட்டலு முணரவே மாட்டான். அவனனேகஜன்மங்களெடுத்துழன்று துன்பத்தில் மொத்துண்டு, பிறகு வுணரும்பக்குவ மடைவனுதலின் ஞானம்வருவது பக்குவம் நோக்கியே; மேலும், உள்ளது ஒரே ஞானந்தான்; அது, ஸ்வாத்தை யறிந்தால் ஸ்வரகியானமெனவும், தாளத்தை யறிந்தால் தாளக்கியானமெனவும், பிரமத்தையறிந்தால் பிரமஞானமெனவும் கூறப்படும் இந்தப் பிரமஞானம் விசாரித்துத் தெளிந்த முமுட்சுக்களேயடைவர்.



## சொருப சாரம்

"தன்னைத்தன் றேடாச் சதிகார ரேன்பிறந்தாரன்னத்தால் வந்தவுடலார்தாமார்."

சீ.—சுவாமி! பக்குவமில்லாதவன் குருவைத்தேடியடைவானு?

கு.—அப்பா! பக்குவபேதத்தால் சிலர் அதிகாரியாயும், பலர் அநாதிகாரியாயு மிருக்கின்றனர். வாழையினிடத்து அக்கினி பத்தாததுபோல, அநாதிகாரிக்கு வுபதேசம் பயன்படாது; அவனுக்குபதேசஞ் செய்வது குருடனுக்கு ஆபரணந்தரித்தல் போலாகும்; காய்ந்தகட்டையில் அதிசீக்கிரம் அக்கினிபற்றுவதுபோல அதிகாரிக்கு அஃதாவது, சாதன சதுஷ்டய முடையவதிகாரிக்கு, குருவுபதேசஞ் சீக்கிரம் பயன் படுவதாம். மேலும், அறிவு ஆநந்த சொரூபமாகையால், நீ அறிவாக விளங்கில் நீயே ஆநந்த சொரூபமாவாய். அறிவு தன்னை வேறாகக்காணும் வரையில் துக்கமே பயனாகும். இன்னுமொரு திருஷ்டாந்தமுண்டு, அஃதாவது பசுவும் எருமையும், தாகமெடுத்துத்தான் குளத்திற்கு நீரருந்த சொல்லுகின்றன. ஆனால், பசுவானது நீரில் காலை வைத்தால் சலங் கலங்கிவிடுமெனவஞ்சி, நிலத்திலேயே காலைவைத்து நீரருந்தும். எருமையோ அந்நீரில் விழுந்து வதனைக்கலக்கி நீரருந்தும். அவ்வாறே, சற்சீடன் பக்குவமுதிர்ச்சியால் குருவினநுபவ வாக்கியமெப்போது கிடைக்குமெனக் காத்திருந்து, அவரே கண் விழித்துத் தனதநுபவப்பேற்றினையருளும்போது கேட்பன். அவனுக்கே வுண்மையைக் கூறுவர்; அவனுக்கதி லொருகலக்கமுமுறாது. அபக்குவி குருவினிடம்போய், தன்னைக் கார்க்கச்செய்தன ரவென்கிற கோபத்தால், ஆபாசக் கேள்விகளைக்கேட்டு, அவன் மேலவருக்கு வெறுப்புண்டாகும்படி செய்துக்கொண்டு, அவர் கூறும் பாரமார்த்திகத்தை விட்டு, விவகார விஷயங்களைக் கவனித்து, அவற்றில் யாதாமொன்றைப் பொருக்கிக்கொள்ளுவன். இதுதான் பக்குவாபக்குவமென்பது. இப்பக்குவம், சத் கருபபரிபாகத்தினால் அநேக ஜன்மங்களுக்குப்பிறகு வுண்டாகிறது. அந்த பக்குவமுடையவனே குருவுக்குச் சிசுரூஷையியற்றி, ஞானவானாகி மோக்ஷமடைவன். ஆதலின், சிரவணஞ்செய்கிற ஆயிரம் பேர்களில், ஒருவன்தான் பக்குவியாயிருக்கக்கூடும். சந்தேகத்துக்கிடங் கொடுத்தால் ஜன்மமுள்ள வரையில் கேழ்க்கத்தான் வரும். அச்சந்தேகங் கேட்டைத் தருமேயொழிய வேறல்ல; ஆனால், மகாவாக்கியார்த்தத்தில் சந்தேகமில்லாது தத்துவங்களைக்கேட்டுத் தெளிவது தான் புத்திமானுக்கழகு;

திருக்குறள்.

"தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும்."

திருக்குதிரிசியவிவேகம்

"குயி லெருமை யில்லிக்குட் முணி பன்னுடை யொப்
ஒசீ மாணுக் கரோ செப்பு."
[பார்

"தீகாய்பவன் மந்திரி யன்னம் பாற்பசுவை யொ
ப்பா னவனே மாணுக் கனென்பனும்"

ஞானவாசிட்டம்.

"ஓதுகின்ற பொருண்முழுது முன்பின் கூட்டி
யுணர்பவர்க்கல லதுபசுவை யொப்போர்க் கெல்லாந்
தீதகன்ற குருவுண்மை செப்பார்"

தத்துவநிசானு போகசாரம்.

"வேர்க்குங் கண்ணீர் ததும்புந் தம்பிக்கும் மெய்
நடுங்கும், வார்த்தை நழுவும் மனம்பத நும்-கார்க்கதமா
ய் காந்தும் ரோமாஞ் சலியாகுங் காதலித்தார்க்,கேய்ந்
தகுணங்கா ணிவை யெட்டு."



சீ.—தேகம் நானல்லவெனவும், ஜகத் மித்தையெ னவும் முன்னமே தீர்மானித்தும், தேகோசபாவமும் ஜகத் சத்திய மென்னும் பாவமும் எனக்கேனின்னு மொழியவில்லை?

ஆ.—ஆத்மாவின் வியாபக விளக்கதரிசனம் நன் ருக வுனக்குண்டாகாமையினுலே அவை யுன்னைவிட்டு நீங்கவில்லை. தேகமும் பிரபஞ்சமும் காரியமாயிருத்த லால் அவைதமக்கென எதார்த்தமாக சொரூபமில்லா தனவாம். அவை கானற்சலம் போலவும், கட்டையிற் கள்வன்போலவும் இடையிற்றோற்றமே. நீ, பேதபுத்தி யா லுன்னை பிரமத்திற்கு வேருக நினைந்திருப்பதாலும், சர்வம் பிரமசொரூபமென வுணராததினுலும், சத்தா மாத்திரமான சைதன்னியத்தின் ஏகதேச ஸ்புரணமே வுலகமென அறியாததினுலும், உனது எனது நீநான், இறந்தேன் பிறந்தேன் என்கிறபாவனை யுன்னைவிட்டு நீங்காதிருக்கின்றன. தனுகரண புவன போகங்களின் தோற்றம் என்னைத்தவிரவில்லை; யானே யிருப்பவன் என்னும்பாவனையால் நீ ஆநந்த சொரூபமாய்விளங் குவாயானுல், அவ்விரண்டுமுன்னை விட்டுநீங்கிப்போம். ஆதலின் தேகாதிகள் பிரகிருதி சம்பந்த மாதலின்

தோன்றிதோன்றி மறைதலே சுபாவமாகவுடையன. மேலும் பிருதிவி கடமாகவும், நூல்படமாகவுந்தோற்றுதல்போல, ஆன்மா எல்லாமாகத்தோற்றுகிறது. பஞ்சபூத பௌதிகமானவுடலை நான் எனதென்பதே பவதுன்பமென்றறிந்து, அப்பாவத்தை நீக்கி ஆன்மாவாய் விளங்குவாயாக. அவ்வாறின்றி யகங்காரத்தைப்பொருந்தி சுபா சுபங்களைச் செய்வதினாலவற்றின் பலனாக சன்மமடைந்து, அதனால் மேலும் மேலும் சுகதுக்கங்களும், சனனரூபமான சமுசாரமும் முடிவில்லாமல் விருத்தியடைகின்றன. ஆனதால் தேகோகம், சர்வகருமசந்நியாச பூர்வகமான ஆத்மஞானத்தினால் நிவர்த்தியாகுமேவன்றி வேறெவ்விதத்தும் நிவர்த்தியாகமாட்டாது. மேலுங் கயிற்றிலுண்டான சர்ப்பம் விசாரிப்புழி பொய்த்தோற்றமென அறிந்தபோதிலும் பயகம்பனாதிகள் சிலநாளிருந்து போவதுபோல, தேகத்தோற்றமும், அபிமானமும், பிராரத்த முள்ளளவுந்தோற்றி ஞானசூரினது பிரகாசத்தால் தொலைந்துபோம். மேலும், ஒருவனுக்கு நீரினால் தன்னிழல் தலைகீழாகவிருத்தல்போல, அஞ்ஞானத்தால் ஆத்மாவினிடத்து தேகமுதலிய தோற்றங் காணப்படுகிறது. நிலத்தில் தன்னை நேராகக்கண்டுழி அச்சாயை யொழிவதுபோல



உன்னைநீயறியில் தேசத்தோற்றமொழியும். பதிவிரதையானவள் கணவனொருவனையே ஆசிரயித்து ரமித்து சந்தோஷித்து அன்னியனைப்பாராதும் அவன்சொற்கேளாதும் தீண்டாதுமிருப்பதுபோல, நீ ஸ்திதப்பிரக்ஞனாய் சமாதியில் ஸ்திரமாய்நின்று தேகாபிமானம்விட்டு பரமான்மாவொன்றையே ஆசிரயித்து ரமித்து சந்தோஷித்து இதரவிஷயங்களைத் தொடாதும் பாராதும் வசனியாதும் ஆலோசிக்காதும் சதாபிரமசொரூபத்தையே நாடி நிலையிற்பிரியாதிருந்தால் ஜகத்தோற்றமுந் தேகோக்பாவமுமொழியும். மேலும் ஜகம் தோன்றாதிருக்கச் செய்வதைப்பார்க்கிலும் தோன்றும்போதுமதனில் வாட்டமகிழ்ச்சியின்றி சமனோக்குடையவனே தீரனும் மோக்ஷாதிகாரியுமாவன்.

சீ.—எவ்வாறப்படியிருக்கமுடியும்?

கு.—தங்கம் கடக மகுடாதிகளாகவும் சமுத்திரம் அலைதிவலை முதலியனவாகவும் தோற்றுவதுபோல பிரமமே ஜகசீவ பரமாகத் தோற்றுகிறதென நீயுணரில் அத்தோற்றமுன்னை பாதிக்காது;

தாயுமானசுவாமிகள்

"சித்துஞ் சடமுஞ் சிவத்தைவிட வில்லையென்ற
வித்தன் பரமகுரு நேசத்தால்."

மேலும் மரத்தையுங் கல்லையும் அறுத்தாலும் பிளந்தாலும், எப்படி கோபமடைவதில்லையோ அப்படி, சகத்தோற்றத்தையு மதனாலுறும் சுகதுக்கங்களையும் நீக்கமுயல்வதைக்காட்டிலும் அவற்றில் சமத்துவ புத்தியை யவலம்பிப்பது சிரேஷ்டமாம். மேலும் ஜகத்தோற்றம் அனித்தியுமாதலின் நித்திடமாகின்ற ஆன்மாவைய துபாதிக்கமாட்டாதென்றறி. சட்டி, குடம், முதலான ஆரோபம் நாமரூபம் வேறுவேறானாலும் பொருளாகின்ற அதிஷ்டானமான மண்ணொன்றேபோல, இத்திரிபுடியாகின்ற ஆரோபம் தோன்றுமிந்தருணத்திலும் பரமான்பாவான அதிஷ்டானத்தைத் தவிரவேறில்லை. ஆகலினல் உலகபோகத்தை நுகருங்கால் அதனை ஆத்மாவைக்காட்டிலும் அன்னியமாகப் பாராது ஆத்மஸ்புரணமென்றேவுணருவாயாக. அதிஷ்டானமானமண்ணே கடமாவதுபோல, அதிஷ்டானமான ஆன்மாவே திரிபுடியாகத் தோற்றுவதால், அத்விதிய பிரமமொன்றே வுள்ளதென்கிற புத்தியோடு நீயவலம்பிப்பாயாக;



தாயுமானசுவாமிகள்.

"மெய்யான தன்மை விளங்கினல் யார்க்கேனும்
பொய்யான தன்மை பொருந்துமோ."

"ஈனந்த ருமுடல மென்னதி யானென்பதற
வானந்தம் வேண்டி யலைந்தேன்."

"மின்னனைய பொய்யுடலை மெய்யென்று நம்பி
யையோ நின்னை மறக்கை நெறியோ."

இந்தமித்தையாகிய ஜகஜீவபாம் அந்தசத்தாகிய ஆத்மாவா லதிஷ்டித்து வியாபிக்கப் பட்டதெனவும்; அதுவே நீயாகின்ற ஆன்மசொரூபமெனவு முணர்ந்து நிரந்தரம்பிரமாநு சந்தானஞ்செய். பாலைநிலத்திற்றோன்றிய ஜலமுழுவதும் பாலைபூமியேவன்றி வேறில்லாததுபோல பிரமத்திற்றோன்றும் ஜகஜீவபாமுழுமையும் பிரமமென்றேவுணர். மேலும் கடத்தைக்காண்பவன் தான் கடமாகுவானே; அவ்வாறே வுடலைக்காணும் நீயுடலாடுவாயா; இவ்வாறு தேகோகபாவங்கூறுவது மூடர் வசனம்; அதுமிகவுமஞ்ஞானமே.

சீ.—இந்த தேகந்தரின் தோற்றல்மாத்திரம்; இது யழிந்தால் இதிலிருந்தாட்டிவைப்போனை தகி போனவழி யெங்கே?

கு.—கடத்தில் உள்ளும் புறம்பும் நிறைந்துள்ள வாகாசமானது, அக்கடநாசத்தினுல் ஆகாசமு முடைந்ததாகக் கூறப்படுமோ, இல்லை. அவ்வாறே இத்தேகத்தி னுள்ளும்புறம்பும் நிறைந்து பரிபூரணனுனதேகியென்னுமான்மா, சர்வகதனும் நிரவயவியும் நாசரகிதனும் நிர்விகாரியுமாம். இத்தேகமுடையினது நாலாட்சுமையாகி, ஆன்மா ஆகாசம்போல திரிகாலமுமிருந்து எவற்ருலுமறைவுபடாதிருந்து அப்பரமான்மாவோடு ஏகமாயிற்று. இங்கு தேகமென்பது காரணசரீரத்தையே; கேவலம் ஸ்தூலசரீரம் நசிக்கும் போதெல்லாம், குடியிருந்தவன் தனது சாமான்களைத் தூக்கிக்கொண்டு வேறொரு வீட்டுக்குக் குடிபோவதுபோல இந்திரியம் மனசு பிராணனென்னுஞ் சாமான்களை ஹிருதயத்திலிழுத்துக்கொண்டு காரணசரீரம்நசிக்கும் வரையில்,வேறுஸ்தூலசரீரத்தை யோயாது வண்டிசக்காம்போல் சீவன் அடைந்துக்கொண்டே யிருக்கிறுன். மேலும், கடங்கொண்டுபோகப்படினும், அதனிலிருந்த ஆகாசங்கொண்டு போகபபட்டதாக கூறுவதின்று, அதுபோல, இந்தத்தேகமழிந்தாலும், ஆத்மா எங்கும் நிறைந்திருத்தலின் போக்குவரத்துக் கிடமில்லையென் றறிவாயாக.



சீ.—அஃதெவ்வாறு,நன்கு விளக்கவேண்டும்.

கு.—கடாகாயம், மகாகாயத்தை விட்டு ஒருகாலும் பிரிவுபடாததுபோல, இத்தேகியான ஆன்மா, கால தேசவஸ்து பரிச்சேத சூனியமாதலின் ஒருகாலத்தும் பிறந்ததுமில்லை இறந்ததுமில்லை; இல்லாமலிருந்து மறுபடியு முண்டாவதுமன்று; இறந்து மறுபடியுமில்லாமற்போகிறதுமன்று; தேகம் விதம்விதமான வடிவங்களை யேற்கினுந், தேகியோ விகாரத்தை யடைவதில்லை. மேலுங் கடத்தைப் பிர்காசிப்பிக்கிற சூரியன், கடத்தினுடைய நாசத்தினுல் தான் நாசமடையாமைம்பால, தேகத்தைப்பிரகாசிப்பிக்கிற சாக்ஷியும், தேகநாசத்தால் தான் நாசமடைவதில்லை. பிறப்பிறப்பெல்லாம் பிரகிருதிசம்பந்தமே; இதுதானுண்மை, உபநிடதங்களின் கொள்கையுமிதுவே;

விவேகசூடாமணி.

"சாதுவேயிந்த வான்மா சனனமா கான்ம ரிக்கா, னேதுமே வளர்வு ருன்மற் றிளைத்திடான் விகாரியாகா,னேதமா மிந்தத்தேக மிறக்கினு மிறவா னித்தன், பேதமாங் கடமி றக்கிற் பெருகுவா னிறப்ப துண்டோ."

ஞானவாசிட்டம்.

"கடம துடைந்தால் விண்பிரியா
காய மதழிந்தா லுயிரழியா."

ஆன்றோர்.

"தோற்பாவை நாலாட் சுமையாகும் சிவனென்
றிங்,கார்பா லெடுத்த தெவராலோ."

சீ.—ஆனலித் தேகத்திற்கு மிதிலிருந்தாட்டிவை த்த தேகிக்கும் யாதொருசம்பந்தமில்லையா; இன்றெ னின், எனிதைச் சுகப்படுத்தி வலுக்கவைக்கவேண்டும் இறந்தானென்பது தேகியையா அல்லது தேகத்தி னையா?

கு.—முட்டைக்குள் குஞ்சிருந்து பொறித்தவுடன் குஞ்சு அந்தவோட்டைத்தனியே விட்டு விட்டு வெளியேவந்து விடுகிறது. பிறகந்த வோட்டையெறிந்து விடுகிறார்களல்லவா. இதனல் குஞ்சுக்கும் ஒட்டிற்கு மென்னசப்பந்தங்கூறலாம்;

திருக்குறள்.

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்பொ டுயிரிடை நட்பு."



தேகத்திற் பிரீதிவைக்கிறவன் மூடன்; அவன் நரகத்திலும் பிரீதி யுடையவனுயிருப்பன். மேலும் பிரமாவின் தேகமுதல் மற்றெவ்விதவுடலும் நீர்க்குமிழி போல நிலையில்லாதனவாயிருக்கின்றன.

சீ.—ஆனல் பிரம்மனதுவுடலும் அழியுமோ?

கு.—அழியும்; சிவனுக்கு ஆயுள்நூறுவதுபோல, பிரமனுக்கும் ஆயுள், 64-லக்ஷத்து எண்பதினுயிரம் வருடங்கொண்டது ஒருசதுர்யுகம்; அந்தசதுர்யுகம் பிரம்மாவுக்கு ஒருநாளாம்; இப்படி நாள் முப்பது கொண்டது ஒருமாதம்; இப்படிமாதம் பன்னிரண்டு கொண்டது ஒருவருஷம்; இப்படிவருஷம் நூறுகொண்டது பிரமாவின் ஆயுள்முடிவாம். ஆதலின் தேகத்தைப் பொருந்தினவர்கள் யாரானுலும் அத்தேகம் நிலையில்லாததென அறிவாயாக.

ஆனல், ஆத்மா இறக்குமென்பதுஞ் சொர்க்காதியடையுமென்பதும் புனர்சனனங்கூறுவதுங் கட்டுக்கதையேயாம். புத்தகத்திலுள்ள வேடிகள்திருப்பப்படுகிறதேவொழிய மனிதன திரும்புவ தில்லாததுபோல, தேகம்மாறிமாறிவருவதேவொழிய தேகியான ஆத்மா வருவதில்லை. மேலும் ஆத்மா பஞ்சகோச விலட்சண

ணுயும் அவத்தாத்திரிய சாக்ஷியாயுமிருப்பதால், ஆயுதங்களால் வெட்டப்படாதவனும், பஞ்சபூதங்களால் நாசமடையாதவனென்றறி. ஆத்மா நித்தியனும் நிர்விகாரியாதலின்விகாரமடைவதின்று. இத்தேகத்தைப்பெற்று விதனைபத்திரமாக ஈ, எறும்பு கடியாவண்ணம் அல்லும்பகலும் ஆகாரம் நித்திரை சுகமிவைகளை நீத்துமிகஅன்போடு காப்பாற்றி வளர்த்ததாயும்; அவனுக்குட் பின்னோ முன்னோ இச்சரீரத்தைக் கண்ணுங்கருத்துமாகக்காப்பாற்றிவந்த மனைவியும்; அன்புள்ள பிள்ளைகளும், குதூகலத்துடன்சாப்பிட்டுவந்தவொக்கலும் மித்திரர்களிவர்களெல்லாருமொன்றாய் சேர்ந்து பிராணன்நீங்கியவுடனே, ஓவென்றழுகிறார்கள். பிறகு விக்கட்டையை பிள்ளை முதலானவர்கள் சுமந்துபோய், சும்பாவும் போட்டுவராமல் கட்டை வரட்டியடுக்கி மனப்பதைபதைக்க நெருப்பிட்டு செய்யவேண்டிய ஈவக்கடன்முதலியவற்றைச் செய்துமுடிக்கிறார்கள். ஆதலின் இக்கட்டைக்குந் தேகிக்கு பென்னசப்பந்தங்கூறலாம். இதைச் சுகப்படுத்துவதும் வலுக்கவைப்பதுங் கட்டைவரட்டிக்குச்செலவென்றறி. மேற்கூறியமுட்டைகுஞ்சு வுதாரணத்தை நீயே யோசித்துப்பார். மேலும் வீடுபற்றிக்கொண்டதென்பதினால் அதிலகப்பட்டது



போற்றோற்றிய கிருக ஆகாசமென்னுஞ் சத்தமிறந்ததேவன்றி யதனருத்தமான ஆகாசமிறக்குமா. ஒருவனிறந்தானெனின் அதிலகப்பட்டதுபோற்றோன்றிய சத்தரூபமாகிய சிதாபாசனான அகங்காரி நீங்கினானென்பது அர்த்தமாம். சாக்ஷியாகின்றதேகி யொருகாலும் றக்கானென்றறியக்கடவாய்.

இன்னு மிவ்வுடலின்மீதும் உலகின்மீது மிதைச்சுற்றிக்கொண்டிருக்கு முறவினர்மீதும் உனக்குவுபாதி வரவில்லையே. நேற்றிருந்தான் இன்றிறந்தானென்னும் பெருமையுடைய வுலகத்தினாலும், இக்காயத்தினாலும் பந்துக்களினாலு முனக்குதுக்கமேயொழிய சுகமொன்றுமில்லை, மகாகனசாலிகளாயிருந்தவர்களும் இறந்து கனங்குலைந்ததை நீயறிந்த தில்லையா. இராசத தாமத குணமுடையோரே சனனமரணமென்கிற மாயாமயக்கத்தையடைவர்: சாத்துவித குணத்தைப் பொருந்தினோர், எல்லாம் பிரமமெனவும் அப்பிரமம் அசங்கனென்னவுந்தெரிந்தவர்களாதலின் சத்தாமாத்திரமாயிருந்து, மலத்தோடுகூடிய வித்தேகத்தை அந்நியபாகவைத்து கவனியாது பிறவிடச்சந் தீர்ந்தவராவர்

பட்டினத்தார்.

"கட்டி யணைத்திடும் பெண்டிரு மக்களுங் காலத்தச்சன், வெட்டி முறிக்கு மரம்போல் சரீரத்தை வீழ்த்திவிட்டால், கொட்டி முழக்கி யழுவார் மயானங் குறுகியப்பால், எட்டி யடிவைப்பரோ."

"முடிசாய்ந்த மன்னரு மற்றுமுள்ளோருமுடிவிலொரு, பிடிசாம்பராய் வெந்துமண்ணாவதுங் கண்டு."

"விட்டுவிடப்போகுதுயிர் விட்டவுடனேவுடலைச், சுட்டுவிடப் போகிறார் சுற்றத்தார்."

"இல்லாளும் சுற்றமும் மைந்தரும்வாழ்வு மெழிலுடம்பு, மெல்லாம் வெளிமயக்கே."

"கான்ற சோறென்ன விந்தக்காசினி வாழ்த்தனையுந் தோன்ற."

தாயுமான சுவாமிகள்.

"தந்தைதாய் தமர் தாரம் மகவென்னு மிவையெலாஞ், சந்தையிற் கூட்ட மிதிலோர் சந்தேகமில்லை."



"இன்றைக்கிருந்தாரை நாளைக் கிருப்பரென்றெண்ணவோ திடமில்லை."

"ஜகமனைத்தும் பொய்யெனவே தானுணர்ந்தாற்றுக்க, சுகமனைத்தும் பொய்யன்றோ."

திருக்குறள்.

"நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு."

வாக்குண்டாம்.

"உடன்பிறந்தார் சுற்றத்தாரென்றிருக்க வேண்டா, முடன்பிறந்தே கொல்லும் வியாதி."

சீ.—அந்த பரமான்மா வொருவனேயெல்லாதேகங்களிலுமிருந்து ஆட்டுகிறானென்பதெப்படி?

கு.—ஒரே நூலில் பலவர்ணங்களுடைய வநேகமணிகள் கோர்க்கப்பட்டுள்ளதுபோலவும்; ஒன்றாகியசூரியன் பலவான விந்த வுலகத்திலுள்ள அண்டங்கள் சகலத்தையும்விளக்கிவைத்தல்போலவும்; ஒன்றாகியவாயு அண்டங்கள் சகலத்தையும் வியாபித்திருத்தல்போலவும்; கடங்கள் பலவற்றினுள்ளும் ஆகாசமொன்றே

நிறைந்துள்ளது போலவும்; ஒரு தீபமே யனேகதிரிகளில் பற்றியபோது அனைத்திலும் வியாபித்து, பல தீபங்களாகத்தோற்றுவது போலவும்; அகரம் நாதமாத்திரையில் மற்றெழுத்துக்கள் இயங்குதற்குக்காரணமாயிருத்தல்போலவும், எல்லாத்தேகங்களிலினும் ஒரே ஆன்மாவுள்ளதென்றறி.

ஆனால், அதுபாலில் நெய்மறைந்திருப்பதுபோல மறைந்திருப்பது; இவ்வாறுஞானிகாண்பன்; அதுவே நானென்பதற்கு அருத்தமாயும் சாக்ஷியாயும் பஞ்சகோசவிலக்ஷணமாயும் ஒவ்வொருபூதத்தினும் விஞ்ஞானமாயுமிருப்பது. சித்துவடிவமானவது தன்சந்நிதானவிசேஷத்தால் எல்லாதேகங்களையும் ஆட்டுவிக்கிறது;

ஆன்றோர்.

"சகல வுயிரினிடத்திருந்துதானே சரிக்குமியன் மறந்து."

திருக்குறள்.

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு."



சந்யாஸிகீதம்.

"யாவற் றுள்ளும் யாவுமா யவ்வொன்றே வுளது அஃதன்றி மற்றிலையா லதுவேநீ யென் றுணரக்கடவாய்."

தாயுமானசுவாமிகள்.

"எங்செங்கே பார்த்தாலு மெவ்வுயிர்க்கு மவ்வுயிரா, டங்கு நிருப்பது நீயன்றோ"

சீ.—அவனே நானுயிருப்பதால், நானேன் சிரமப்பட்டுவிசாரணை சிரவணமுதலியவை செய்யவேண்டும்

கு.—எதுகாறும் நானெனதென்னும் அகங்கார மமகாரமுண்டோ அதுகாறுஞ் சகல சாதனமும் கருமானுஷ்டானமும் வேண்டும். நீ, அவனாகவேவிருப்பதாகவெப்போதுனக்குத் தெரியவந்தது;விசாரித்தப்பிறகல்லவா, அது பரோக்ஷஞானமாம்.அவ்வாறே மனன நிதித்தியாசனமுமியற்றி ஞானநிஷ்டா பரனுயிருந்து, அபரோக்ஷமாக ஆத்மாவை யறிவாயானல் நீசெய்யவேண்டியதொன்றுமில்லை.நானதுவாயிருக்கிறேனென வுணர்வதற் கேதுவாகிய கருமானுஷ்டானமுமில்லாமலும்,ஞானநிட்டையு மில்லாமலிருப்பது அஞ்ஞானி

களுக்குக் கூடாது. வாய்ஞானம் பேசுபவன் உபயப்பிரஷ்டனாவான்; ஆதலின், விஷயசுகவாசையைத் துறந்து விரக்தனாய்,சம தமாதிகளையடைந்து திரிசியகாட்டமின்றி கண்மூடி தனித்திருந்து,அதிதீவிர பக்குவனாய் ஞானநிட்டையை யவலம்பிப்பாயாக. மேலும், எக்காரியமும் சாதனமில்லாது முடிவு பெறாதாகையால் முயற்சித்தலவசியமே. ஆதலின் அபரோக்ஷஞானமுண்டாகும்வரையில் நீபிரமாகிட நிபாயம்போவ அப்பியசித்தே தீரவேண்டும். சனகாதியர் நால்வரும் தக்ஷிணாமூர்த்திமுகத்தை நோக்கி மூன்றரைக்கோடி கற்பம் சமாதியோகஞ்செய்தாரென்பதைக் கவனிப்பார்.

ஙகைவல்லிய நவநீதம்.

"சாதன மின்றி பொன்றைச் சாதிப்பா ருலகிலில்லை, ஆதலா லிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண்டாகும்"

ஆன்றோர்.

"முயற்சி யுடையோ ரிகழ்ச்சி யடையார்"



தாயுமானசுவாமிகள்.

"கண்மூடி மௌனியாகி தனியே யிருப்பதற் கெண்ணினேன், எண்ணமிது சாமி நீயறியாததோ"

சொரூபானு சந்தானம்.

"விடய நோக்கா லெனதுண்மை வெளியாகாது நெடுங்காலம், மடமை யாலே பிறந்திறந்து மகிமாயையிலே சுழன்றிளைத்துத்,திடமார் ஞானக் குருவருளாற் சித்தந் தெளிந்து மேனோக்கி"

வள்ளலார்.

"ஆன்றநற் சனசனதி நால்வரு மரன்முகத்தை மூன்றரைக் கோடி கற்பம் பார்த்தபின் முத்தரானர்."

அவ்வாறின்றி கேட்டவளவினாலும், வாசித்தவளவினாலுந் தானதுவாதல் முடியாது. உலகில் பகடிகளைப்போல் நடித்திருந்தாலும் மனமிடித்துக் கொல்லும்; அன்றியும் கடைசிநாளில் ஜீவபோதம் வந்தெதிர்நிற்குமேயன்றி வேறாகமுடியுமா, முடியாது. எவ்வாறெனின், ஒருவன் தான்அரசனாகிவிட்டேனென்றால் உலகமோப்பி யவனுக்குக் கீழ்ப்படிந்து நடப்பார்களா; இராஜபிரக்ஞைதானவனுக்குண்டாகுமா, உண்டாகா

து. அதுபோல நீயுங்கேட்டவண்ணம் மனனஞ்செய்து நிதித்தியாசன சமாதி சாக்ஷாத்கார மடைந்தாலன்றோ பந்தமோக்ஷத்தை மறந்து, சித்துசடமெல்லாம் பிரமமாகநோக்கி அன்னியமில்லாதிருப்பாய். பிறகு நான் பிறந்ததுமில்லை இறந்ததுமில்லையெனத் துணிவாயுணர்வாய்;

தாயுமானசுவாமிகள்.

"கற்றவறி வாலுனைநான் கண்டவன்போற்கூத் தாடிற், குற்றமென்றென் னெஞ்சே கொதிக்கும்"

பிரத்தியட்சானு பூதிவிளக்கம்.

" பிறந்ததுமில்லை யிறந்ததுமில்லை பெரியகண்ணில், பிறந்தது யாது விறந்தது யாது பிரமைபறில் "

கைவல்லிய நவநீதம்.

" பிறந்ததுண் டாகு லன்றோ பிறகுசா வதுதானுண்டாம், பிறந்ததே யில்லை யென்னும் பிரமமாவதுவு நானே "

சீ.—சமுசாரசாகரத்தைப் போக்குவது ஞானமாயிருக்க வதுவுணர்ந்திடு முணர்வினலடையவேண்



டியதாதலின், கருமத்தாலாய பயன்யாது; ஏன் சிரமத்துடன் கருமஞ்செய்ய வேண்டும்.

கு.—விஷயவிச்சையுடையோர் கருமத்தைச்செய்தால்தான் தாம்விரும்பிய காமியத்தையடைவர்; இன்றேலில்லை. அன்னவர்பிறவிசாகரத்தில் மூழ்குவதேபயனுகவடைவர். மேலும் கருமம் மூவகைப்படும்; அவை கருமம், அகருமம், விகருமமெனவுமாம். அவற்றுள் கருமமென்றால் அகமமதையோடு செய்யுங்கருமமே; பலத்தைவிரும்பிசெய்தாலது சரீரபோகத்துக் கேதுவாம் பலத்தையும் அணிமாதிசித்திகளையுந் தரும். விகருமமாவது நிஷேதகருமமாம். அகருமமாவது, நான் தேகமல்ல தேகத்தாலியற்றும் சகலகருமமும் என்சந்நிதி விசேஷத்தால் நடந்தேறுகின்றன; ஆதலின் நான் அகர்த்தாவெனத்தெரிந்துச் செய்தலே. இதனல் பந்தப்படுவதில்லையாதலின் இக்கருமஞ் செய்யலாமென்றறி.

சீ.—விடயபோகங்களையனுபவிக்கச்செய்வது இந்திரியங்களாதலால் அதனை ஜயிக்குமுபாயம் யாது?

கு.—தத்துவவுணர்ச்சியின்றி ஐயறிவுடையோராயிருப்பவர்க்கே யுலகவிருப்பும், அதனது அழுத்தமான நுகர்ச்சியுமாம்.

திருக்குறள்

"ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயனின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு"

இந்நுகர்ச்சி விடயங்களைக் கேட்பதினாலும் பார்ப்பதினாலும் அல்லது தியானிப்பதினாலு முண்டாகின்றது. அதனால் காமம்முதலிய அனர்த்தங்களுண்டாகின்றன. ஆதலின் சுத்த ஆகாராதிகளினால் சித்தசுத்தியடைந்து, அதனால் வேதாந்தசிரவணமியற்றி, அதனால் ஐயறிவையு மெய்யறிவில் நோக்கும்படி யப்பியசித்தால், விடயவிச்சையும் அழுத்தமான நுகர்ச்சியுமுண்டாகாது. சித்தசுத்தியோடு வேதாந்த வாக்கியார்த்தங்களை யிடைவிடாமல் சற்குருவினிடம் விசாரிப்பதால் பிரமஞானமுதயமாகும். உலகமென்பது தோற்றல்மாத்திரமாயுள்ளது; அது மூன்று பகுப்பா யிருக்கும்; அவை, காண்பான் காக்ஷி காணப்படுவனவாம். இவையே திரிபுடியென்பனவாம். இத்திரிபுடியுள்ளே ஜகஜீவபரமென்றும், சித் அசித் ஈசுவரனென்றும், பசுபதிபாசமென்றும் மதவாதிகள் கூறுவனவெல்லா மடங்கும். இவற்றை திருக்கு திரிசியம், அல்லது, அறிவு அறிபடுபொருளென விரண்டாகவகுத்து, திருக்கு சத்து



சித்து ஆனந்தம் நித்தியம் ஏகம் என்னும் லக்ஷணங்களையும்; திரிசியம், அசத்து சடம் துக்கம் கண்டம் அனேகமென்னும் லக்ஷணங்களையுடையதென்றறி. திரிசியமான வுலகம் மாயாகாரியமெனவும், மித்தையெனவும், நசிப்பதெனவும் விசாரணையால் தெளிந்து, அல்லது திரிசியமனைத்துந் தனக் கன்னியமுமல்ல, வுண்மையுமல்ல வென தீர்மானித்து, விருப்புவெறுப்புகளை நீக்கில் விடடட்பற்று நீங்கும். அதுவே சங்கத்தியாகமாம். அதனால் ஆத்மானாத்ம விவேகத்தா லுண்டான ஞானம் ஸ்திரப்படும். இந்திரிய வியாபாரங்குறையாவிடில் சமாதி சித்திக்காது; சித்தியாதபோது ஞானமுண்டாகாது; உண்டாகாதபோது நான் பிரமமென்கிற நிலைவாராது; வாராதபோது முத்தியில்லை; இல்லாததினால் சுகமில்லை. ஆதலின் சின்மாத்திரமான ஆன்மாவாகின்ற தான், ஆனந்த சொரூபனென்றறிந்து சீறிச்சீறி யெழும்புகின்ற விந்திரியமாகின்ற ஐந்தலைப் பாம்புகளை வெளியே செல்லாதபடி விசாரணையென்னுந் தடியாலடித்து அக்கணமே மறித்தல் வேண்டும்.

## ஞானவாசிட்டம்.

" எழுந்தெழுந்து சீறுகின்ற விந்திரியப் பாம்புகளை யிதபந்தன்னி, லழுந்துவிவே கத்தடியால் வச்சிரங்கொண்டு "

ஐயறிவுகளையும் மெய்யறிவில் நோக்கும்படிச் செய்வதால் சகலத்தினுந்தாக்கற்று அகம்புறமின்றி, எவ்வித விவகாரமுமின்றி யிந்திரியங்களை விடயாதிகளிற் செல்லாதிருக்கும்படிச் செய்வதே, ஆத்ம ஞானம் ஸ்திரமாயிருப்பதற்குபாயம்;

## திருக்குறள்.

" உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான், வரனென்னும் வைப்புக்கோர் வித்து"

ஆமை தன்ஐந்துறுப்புகளை பயத்தினுள்ளிழுத்துக்கொள்வதுபோல, முமுக்ஷுவானவன் இந்திரியங்களுக்குப் பயந்து விடயாதிகளின்மேல் இந்திரியங்கள் செல்லாதிருக்கும்படி யப்பியசித்து அவற்றைத் தன்வசமாக்கிக்கொள்ளல் வேண்டும். அதுவனுகூலமாகும் வரையில், ஏகாந்தமாக வசித்து அல்



லும்பகலும் திரிசியநாட்டமில்லாமல், தன்னைப் பிரமாகாரமாகப்பாவித்து அதுவாகவே அநுசந்தானஞ் செய்துவந்தா லப்போது இந்திரிய அழுத்தமான வியாபாரம் நாசமாகும். வெறும் இந்திரிய நாசத்தினாலேயே பிரக்ஞை ஸ்திரப்பட மாட்டாது, அவ்வாறப்பியசிக்கும் யோகமானது பயனற்றதே; ஆனால், விஷயங்களை யநுபவிக்க வேண்டுமென்கிற வெண்ணமானமனது நசித்தல்வேண்டும். அது ஆத்ம சாக்ஷாத்காரந் திடப்பட வுண்டாகும். மனோநாசமுண்டாகாவிடில் இந்திரியங்களடங்கி நில்லா; அதனால் தியானமுநிலைக்காது; நிலைக்காதபோது நிட்டை சித்திக்காது, சித்தியாதபோது மோக்ஷமில்லை யெனவுங் கூறவேண்டுமோ. ஆதலின் முமுக்ஷு விடயதோஷ திருஷ்டியையடைந்து சகல திரிசியமுஞ் சங்கற்பரூபமேயெனவும், பிரம்மானந்தவிலாசமே விடயானந்தமென்றுணர்ந்து மோகத்தைவென்று இந்திரியங்களின் அழுத்தமான வியாபாரத்தை நீக்கினவிவேகிமெய் முத்தியடைவன்.

## ஔவைக்குறள்.

"அஞ்சு மடக்கி யறிவோ டிருந்தபின்
துஞ்சுவ தில்லை யுடம்பு"

ஒவ்வொரு இந்திரியத்தால் பலஜீவர் மடிவதானால் அவ்வைந்தும் ஓரிடத்திற் சேர்ந்திருக்கு மித்தனு வால் வருந் துன்பம் எண்ணத்தக்கதோ. அஃதாவது கலைக்கோட்டுமாமுனியுங் கலைமானுங் கானவிச்சையா லும், ஆண்யானை பெண்யானையின் பரிசவிச்சையா லும், விட்டிற்பறவை தீபத்தைக் கனியென விரும்பிய ரூபவிச்சையாலும், மீன் மாமிசத்தை யுணவென விரு ம்பிய ரசவிச்சையாலும், வண்டானது மலரின் மணத் தை விரும்பிய கந்தவிச்சையாலும் துயருற்றன. ஆத லின் முத்தி விருப்பமுள்ளவன் பொறி ஐந்தின் வியா பாரத்தையும்நீக்கி புலன்ஐந்தையும் விஷத்தைப்போல் பயந்து நீக்கவேண்டும். இன்றேல் புலன்களுடன் சேர்ந்தசித்தம் பலவித சங்கற்பத்தை யெழுப்பி அதனால் காமமுண்டாய்ப் பிரவிர்த்தியி லிழுத்தலைக்கு மென்றறி.

சீ.—ஆனால், இந்திரியங்களுக்கும் மனசுக்கும் என்ன சப்பந்தமோ விளக்கவேண்டும்?

கு.—யாதாமொரு விஷயத்தைக் காணுமிடத்து கண்ணொன்றே போதாது. கண் கேவலம் கருவியேயா ம். அக்கருவியின் மூலமாய் இந்திரியமறிந்து மனசுக் குக்கொடுக்க மனமறிவதாலும், அம்மனம் வேறோர் விஷயத்தை நாடியிருக்கும்போது இந்திரியக் கருவிக ளிருந்து மவற்றையறிவதில்லை; ஆகலின் பார்ப்பதும் கேட்பதும் மனமே. இந்திரியமுற்றும் பலநணிபோல் வனவாம்; ஆகலின் மனோநாசமாயின் இந்திரியச்சே ட்டையறும்.



சீ.—அஃதெவ்வாறு?

கு.—செத்தபிணத்துக்கு அவ்வைந்து இந்திரிய ங்களிருந்தும் மனதொன்றில்லாததினால் அவைபயன ற்றவையேபோலென்றறி.

சீ.—அவ்வாறப்பிபசித் திருந்தபோதிலும் மன மானது நினைக்கிறதே, அம்மனத்தின்சொரூபமியாது; அதனைக்கெடுக்கு முபாயம்யாது?

கு.—சங்கற்ப வடிவாயுள்ளது மனமாம். அதை சுத்தமனம் அசுத்தமனமென விரண்டாகக்கூறுவர். காமசங்கற்பம் அல்லது சங்கற்பவிகற்பங்களுடையது அசுத்தமனம்; காமசங்கற்ப மற்றிருப்பது அல்லது அ நிவாகாரமாயிருப்பது சுத்தமனம். அவ்வசுத்தமனது க்குவிதை வாசனையும் அகம்பாவமுமே; எங்கெங்கே

சங்கற்பமுண்டோ அங்கங்கே மனமுண்டாகும், அதனால் ஜகத்தோற்றமும் அதனால் பவபந்த அத்தியாசமுந் தோற்றுகிறது. அவ்வசுத்தமனம் மூன்றுகுணங்களுடையது; அஃதாவது சத்துவ, ரஜஸ் தமோகுணங்களாம்.

சீ.—அவ்வசுத்த மனதைக்கெடுக்கு முபாயம் யாது?

கு.—திடவைராக்கியத்தினாலும் விடா முயற்சியாலும் பிரமசங்கற்பமாயுதித்த மனதைச் சொரூபத்தில் கரைத்துத் தானு மப்பிரமாகாரமாய் விளங்கில் அம்மனங் கெட்டதாகும். பிராணபந்தனத்தினாலும் நிராசையாலும் நானாரென்னும் விசாரத்திலுதித்த பிரம்மதிருஷ்டியினாலும் மனங்கெடும். மேலும் மனதைக்கெடுக்க மகாவாக்கிய சிந்தனையாகிய சங்கிலியால் மதயானையாகிய மனதைத் தரிடாகிய சொரூபத்தில்கட்டி யாதொன்றையுங்கூர்ந்து திரிசியமாக அறியாதிருப்பதோ ருபாயமாகும். இம்மனோநாசம் சொரூபநாசம் அரூபநாசமென விருவகையாம். அனைத்தும் சின்மாத்திரமாகக் கரைத்து இராசத தாமதகுணத்தைக் கெடுத்தல் சொரூபநாசம்; இது சீவன்முத்தர்



பாலிருப்பது. சத்துவகுணம் முற்றும்நசித்து விதேகமுத்தி திசையே அரூபநாசமாம். சொரூபநாசம்வரின் மனம் நாமரூபத்தை மறந்து தொம்பத லக்ஷியத்தில் நிலைபெறும்; அதனால் நிருவாண சுகமுண்டாம். அம்மனம் நினைப்பு மறப்புக்குக் காரணமாய இந்திரியமாயும், அன்னிபதத்துவங்களை யியக்குவதற்குக் காரணமாயுள்ளது. முமூக்ஷுவுக்கு திரிசியதிருஷ்டி நீங்கி விடயதோஷ திருஷ்டியுண்டாகி, அதனால் இந்திரிய நிக்கிரகமும், அதனால் மனோநாசமும், அதனால் வாசனாக்ஷயமும், அதனால் சமதிருஷ்டியும் வந்தாலுடனே ஞானமுதயமாகும். இந்த சமுசாரவிருக்ஷத்திற்கு மனமே மூலவேராயிருப்பது. இதனை நாசஞ்செய்ய வேண்டுமாயின் மனதுண்டாகிற விடத்திலேயே, அதனை அப்போதைக் கப்போதே நாசஞ்செய்யவேண்டும். அம்மனம் பாதரசம்போல் சஞ்சலசுபாவமுடையது. ஒன்றைவிட்டொன்றை தாவுவதே பழக்கமாகவுடையதாதலின், சங்கற்பமுண்டான வப்போதே நானாரென்னும் விசாரணையாலதனை யழித்தல்வேண்டும். பிரமதேவன்முதல் ஸ்தாவரசங்க மீறாயுள்ள வனைத்தும் மனதின் கற்பனையே, வாஸ்தவத்திலில்லையென நிச்சயித்து, இம்மித்தையாமனம் எங்குசெல்லுகிறதென்று

தான்வேருக சாக்ஷியாகநின்று யூகிக்கில் பகிர்முகமாக இச்சாவசத்திற்;சென்றமனம் அந்தர்முகப்படும்; அப்போதொன்றுந் தோன்ருது பிரமித்துநிற்கும்.

சீ.—சுவாமி! அந்தர்முகம் பகிர்முகமாவது யாவை, விளக்கவேண்டும்?

கு.—அப்பா! பகிர்முகமாவது, மண்ணைக்கடமாகவும், கயிற்றைப் பாம்பாகவும் பார்த்தல்; அந்தர் முகமாவது, மண்ணை மண்ணுவும், கயிற்றைக் கயிருகவும் பார்த்தலாம். அஃதாவது தன்னைத் தேகமாகப்பார்ப்பது பகிர்முகமும், தன்னைத் தேகியாகப்பார்ப்பது அந்தர்முகமுமாம். (பகிர்=வெளி; அந்தர்=உள்;) மேலுஞ் சித்தம் ஒன்றையும் பற்ருமலிருப்பதே மனோநாசமாதலின் அம்மனோநாச மின்றிபக்கால் கற்றவித்தைகளெல்லாம் வாய்ஞானமாகவே முடியும்;

தாயுமானசுவாமிகள்.

“சினமிறக்கக் கற்ருலுஞ் சித்தியெல்லாம் பெற்ருலு
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன்.”



மனது சத்துவசொருபமாதலின் அதனுடைய
மற்றிரண்டு குணங்களுங் கெடுவதே மனம் நிருவிகற்
ப சமாதியையடைந்து அசைவின்றி சொருபாகாரத்
தையடைய காரணமாம். மனத்தினசைவே ஜகத்தோ
ற்றமாதலின் ஜகத்தை சின்மாத்திரமாகக் கரைத்து சல
னம் நீங்கில் சிதாகாயமாக விளங்கும். ஒழிந்தபற்றுக்
களை மறுபடிநினையாமல் சரீராபிமானத்தை நீக்கி, அந்
தக்கரண வாதனைகளையு மொடுக்கவேண்டும். மனம்
அகமுகப்படில் சித்தாகும்; பகிர்முகப்படில் ஜகத்தா
கும்; அல்லது அறிவின்முயற்சியால் ஞானமாகும்;
அறியாமையின் முயற்சியால் அனாத்மாவாகும். மன
தை நிறுத்துவது வாயுவை நிறுத்துவதைப்போலாகும்.
மேலுமெப்படி காற்ருனது மேகத்தைச் சேர்த்து மீட்
டுமெதுவே யதனை பழிக்கக்காரணமாயுள்ளதோ; அப்படி
மனமே இராசத தாமத குணத்தால் பந்தத்தையுண்
டாக்கவும், சாத்வீக குணத்தால் மோட்சத்துக்குங்
காரணமா யுள்ளது. அவ்வசுத்தமனம் பூதாம்சமா
னதால் பிரபஞ்சத்தையே நாடுவது சுபாவம்; அவ்
வாறு நோக்குங்கால் அது நானுபேத ரூபமாகத்தோற்
றும். “ஏகம், பிரம்மம், சிதாகாசம், சர்வாத்மகம்,
அகண்டிதம், நிரந்தரம் நிராகார” மெனப் பழகினுலது

அப்பிரமமேயாகும். இம்மாதிரி யெல்லாக் காலங்களிலும் ஆன்மநிட்டையை யநுஷ்டித்துக்கொண்டிருப்பவனுக்கே மனமிறந்து வாசனை கெட்டு அத்தியாசமனைத்து மொழிந்து பரமசாந்தி யுண்டாகும். இவனுடையபுத்தி விரைவாக பிரமாகாரத்தை யடையும். இம்மாதிரி ஆத்மானாத்ம விவேகமுள்ளவன் சகலமனோவிருத்தி விசேஷங்களையும்விட்டு அந்தக்கரணத்திலெவ்விதமான விருத்தியும் எண்ணமு மில்லாதவனாயிருந்தால் விஸ்ராந்தியடைவன். அமுர்தபானம் பண்ணுகிறவன் உப்புநீரை விரும்பாததுபோல, விஷயசுகம் துக்கம் துச்சமென்றறிந்து மனமிறந்து ஆத்மானந்தானுபவத்தால் மீட்டும் விஷயத்தை விரும்பான். இச்சை வித்வான்களுக்கு முண்டாவதால், எண்ணமுண்டாவது விஷயசுபாவமா அல்லது புருஷசுபாவமாவென நோக்கில், திரணபதார்த்தத்தை நோக்குங்காலதனை யநுபவிக்கவேண்டுமென்கிற வெண்ண முண்டாகிறதில்லை; ஆதலின் எண்ணம் ஜனிப்பது விஷயசுபாவமல்ல; ஸ்திரீயினிடத்து பாலகனுக்கு விருப்பமுண்டாகிறதில்லை; ஆதலின், எண்ணமுண்டாவது புருஷசுபாவமுமல்ல. ஆனாலொருவன் பிறப்பதற்குக் காரணஞ் சங்கற்பமேயாதலின், இச்சையுண்டாவதுஞ் சங்



கற்பவாசனையே. ஆதலின் சங்கற்பத்தை யொழிப்பதே மனோநாசம்; அல்லது சித்தத்தியாகமாம். ஆகையால் கோற்புழுவைப்போல் மனதைப் புலன்வழிசெலுத்தித் தானே சிறைப்படுத்திக்கொள்ளலாகாது. மனதை யிலக்ஷியத்தில்நிறுத்தி சமாதியென்னுங் கயிற்றால் பிணித்து மெல்ல மெல்ல சங்கற்பம் வரும்போதெல்லாமதனைக் கெடுத்தல்வேண்டும்; மனம் நாசமாகாவிடில் வாசனைநசியாது, வாசனைநசியாதபோது ஞானம் நன்றாகப் பிரகாசிக்காது, ஆதலினது கருமவாசனையிலிழுக்கப்பட்டு விஷயாதிகளிலுங் கன்மத்திலும் யோகத்திலும் உபாசனையிலும் வியவகாரத்திலும் மாறிமாறி மனிதனைப்பந்திக்கச்செய்கிறது. மேலும் மனமே தேசகால முதலியவற்றை யுண்டாக்கிக் கணநேரத்தைக் கற்பகாலமாகத் தோற்றச்செய்தும், கற்பகாலத்தை கணநேரமாகக் காட்டி பிரமாதத்தை விளைவிக்கும்; ஆதலின் அதுநசித்தாலுலகில் செய்யக்கூடாதகாரிய மொன்றுமில்லை, முத்திசித்திகளு மடைந்ததாகும்;

## தாயுமான சுவாமிகள்.

“தன்னிகரில் சித்திபெறலாம் சிந்தையை யடக்கியே
சும்மா விருக்கின்ற திறமரிது”

மேலும் மனதுக்கு தஸ்மரணை, விஸ்மரணை யெனவிரண்டுவித ஸ்மரணைகளுண்டு, தன்னையுடலாகக்காண்பது விஸ்மரணை, தன்னைச் சொரூபத்துக் கன்னியமல்ல வெனக்காண்பது தஸ்மரணை. அம்மனம் விஸ்மரணையினாற்றன்னையுடலளவாகக்கண்டதால் ஜீவபோதம் பெருகி அறியாமை மிகுகின்றது. கானற்சலம்போல ஜகத்து பிரமத்தில் மித்தையாயிருக்கின்றன; மித்தையாயுள்ளதை சத்திடமாயறிவதே அறியாமை. இவ்வறியாமையைக் கெடுத்து ஜீவேசுவரஜகத்தை பிரமசொரூபமாகக்கண்டு போகங்களைநினையாது திடவைராக்கியத்தோடிருப்பவனுக்கு மோக்ஷமெளிதி லுண்டாம். அலையுமனத்தை யகத்தடக்கினவன்தான் சரியையாதிமுடிந்த ஞானி, அவனே யதிசூரன். மனோநாச மடைய முயலாதவர் ஒருகாலும் மோக்ஷமடைவதில்லை; நீ விவேகியாயின் விடயமென்னும் காட்டில், மனமென்னும்புலி யுலாவியிருப்பதாலதற்கு பயந்து அக்காட்டில் நுழையாது வாழ்வாயாக. மேலும் சகல



அனர்த்தங்களுக்குக் காரணமாயிருக்கும் சங்கற்பரூபமான மனதை மாறாது விசாரஞ்செய்தா லதுபிரமமேயாகும். அப்போது நீ மனதை ஜயித்ததாகும்; அதனால்விகற்பிக்கப்பட்ட ஜக ஜீவ பரமெல்லாம் பிரமமேயெனவுணருவாய்; அதுவே சாட்சாத்காரமான பரமபதமுமாம்.

## ஞானவாசிட்டம்.

“சங்கற்ப நாசத்தா லெளிதாக மனநாசந் தானேயெய்து, மங்குற்ற மனமிறக்கிற் சநநமர ணங்களெனுமரமு மாயும்.”

சீ.—வாசனையென்பது யாது, அது க்ஷயமாவதெப்படி?

கு.—வாசனையே சமுசாரத்துக்கேது, வாசனைநிசித்தாலதுவே முத்திக்கேதுவாம். முன்ஜன்மங்களில் செய்த நன்மைதீமைபான விஷயபோக கன்மங்களின் விசேஷப்பற்று மனதிலூன்றியிருந்து பழக்கத்தால் மறுஜன்மத்தில் எண்ணமுண்டாவதற்குக் காரணமாயிருப்பது வாசனையாம். அதனால் நாமரூபத்தை மெய்யெனக்கொள்வது; அதனை சுத்தம் அல்லதுசுகவாச

னையெனவும், அசுத்தமல்லது துக்கவாசனையெனவிரு வகையாகக்கூறுவர். வறுத்தவிதைபோ லினிஜநநத்திற்கு முளையாயில்லாதது சுத்தவாசனையாம்; இது சமாதியின்கண்ணுள்ளது. அல்லது சுகத்தைநாடுவது சுகவாசனையாம். அஞ்ஞானத்தினால் அகம்பாவமிறைந்து பலஜநநத்தைத்தருவது அசுத்தவாசனையாம், அல்லது துக்கத்தைநாடுவது துக்கவாசனையாம்; இது பகிர்முகத்திலுள்ளது. அசுத்தவாசனையால் சங்கற்ப அனர்த்தங்களுண்டாகிறது; ஆதலின் இவ்வசுத்தவாசனையொழிந்தால் கூடத்தபிரமைக்கியமான அத்துவிதாநந்தமுண்டாகும். அதுவேஜீவன்முத்திநிலை; இதுவுண்டானவர் தேகவியோகமடையின், மீட்டுந் தேகமடைவதில்லை. வாசனையைக்கெடுக்க திருசியநாட்டம் நீங்கி யிச்சைகெட்டு இருவகைப்பற்றின்றி விவகார அழுத்தமில்லாமல், சர்வம்மித்தையென்றும், மித்தையாயது பிரமமென்றும், பிரமமாயது நானென்னும்பாவனையால் சுத்தவாசனைமிகும். அதனாலுலகம் சத்தியமென்னும் பாவனையின்றி யிருக்கக்கடவாய். அதனால் போகங்களை தூரத்தள்ளி நினைவுவாராதபடிச்செய்யும் புருடப் பிரயத்தனத்தாலந்தவாசனை க்ஷயமாகும். அதனால் வேறுசிந்தனையின்றி சுகக்கடலாகவிளங்குதல்



தெரியும். வாசனையானது மனதில் துன்பத்தைப் பெருக்கச்செய்ய காரணமாதலின், தேற்றாங்கொட்டையால் கலங்கியஜலந் தெளிவதுபோல, மேற்கூறிய பாவனையால் மனந் தெளிவடைந்து வாசனையுங் கெடுமென்றறி.

ஞானவாசிட்டம்.

"உலகமெலாம் பிரமமெனும் பாவனையா லஞ்ஞா
னமொழிந்து போனான், மலமுறுவா தனைதோன்றா
கானலினீ ருண்டென்று மதிப்பா ருண்டோ."

சீ.—மாயையாவதுயாது; அது யாரையுடையது அதுவந்ததெப்படி போவதெப்படி?

ஆ.—மாயையென்பதோர் பதார்த்தமல்ல; மற்று யாதுதானெனின், அறியாமை அல்லது புத்திவிகற்பமே மாயையெனப்படும். (யா = எது, மா = இல்லையோ) எதுவில்லையோ அதுமாயையெனப்படும். அது இன்னதெனயாவராலு மறியப்படாதது. அது அநாதிமுடிவையுடையது; அதனை அநிர்வாச்சிய மெனப்படும். அதுவுண்மையில் சொல்மாத்திரமாயுள்ளது. அம்மா

யை சுத்தம் அசுத்தமென விருவகை; பிரமத்தில் ஜக ஜீவபாத்தைத் தோற்றுவிப்பது அசுத்தமாயை;

### சோருபசாரம்.

"சித்த, மடங்காமை யேமாயை யம்மாயை மாய்ப்பார் திடந்தானே சாயுச்சியம்."

### ஞானவாசிட்டம்.

"ஒழியாது துயர்மாயை யெனுபாபத்தை
யொழிக்கமன நாசமோ ருபாய மாகும்."

"பேதமுறு புந்தியே மாயை யாகும் பெரிதுவருந் தியுமிதனைப் போக்கல் வேண்டும்"

அவ்வசுத்தமாயை மகத்தை யணுவாகவும், அணுவை மகத்தாகவும், கூடாததைக் கூட்டிவைப்பதாகவும், இல்லாததை யிருப்பதாவும், இருப்பதை யில்லாததாகவுந், தோன்றிவைப்பது யதனது சுபாவம். தேகமே நான், ஜகத்சத்தியமென பாவிப்பவரை யதுவருத்தும். அப்பாவனையை யொழித்தவர்களிடம் மாயைசெய்யுங் காரியமில்லை.



### குமாரதேவர்.

"மாயை மெய்யென் றுரைத்திடுவர் மயக்கப் பட்டுத் தனைமறந்தோர், மாயை பொய்யென் றுரைத் திடுவர் மயக்க நீங்கித் தனையறிந்தோர்."

"மாயை வேறென் றெனவுன்னி மதிக்க வேண்டாம் பேதமதி, மாயை யாகு மற்றதனை வருந்தி முயன்று பேர்த்திடுக."

மாயையில்லை, மாயை செய்யுஞ் செயலுமுல்லை. வாஸ்தவத்திலொருசிறிது மில்லாத மாயையை வாஸ்தவத்தில் நீக்கமுயல்வது, தன்னிழலோடு தானே வெதிர்த்து போர்செய்து நீக்கமுயல்வதுபோலாகும். மாயை போவதெப்படி வந்ததெப்படியென்று கேட்பதற்கு விடை, அது வந்ததென்பதும், போனதென்பதுந் தெரிந்தால் காரணந் தெரியும்;

### தாயுமானசுவாமிகள்.

"வல்லமையே காட்டுகின்ற மாமாயை நானொருவ, னில்லையெனி னெங்கே யிருக்கும்."

அம்மாயையின் நாசமே மோக்ஷமாதலின் பெரிது வருந்தியுமதனை நீக்கவேண்டும். ஆகாயத்திற் கருமைநிறங் கற்பிதமாயிருப்பதுபோல், பிரமத்தினிடத்தில் மாயைகற்பிதம். ஜகமாதியை நோக்குங்காலதுவுளதாகியும், யாதுசொரூபமென நோக்குங்காலில தாகியுங் காணப்படுவதால், அதுவிருப்பதுமல்ல இல்லாததுமல்ல, அவ்விரண்டுங்கலந்ததுவுமல்ல; பின்னமல்ல அபின்னமல்ல, அவ்விரண்டுங்கலந்ததுவுமல்ல; சாவயவமல்ல நிரவயவமல்ல, அவ்விரண்டுங்கலந்ததுவுமல்ல; அம்மாயையை மூலப்பிரகிருதி, அவித்தை, பொய்யுருவி யெனபலவாகக் கூறுவர்;

ஆன்றோர்.

"இல்லை யெனு மாயையி விட்டெனை நீ."

தாயுமான சுவாமிகள்.

அண்டபகி ரண்டமு மாயா விகாரமே அம்மாயை யில்லா மையே."

திருமந்திரம்.

"மனமாயை மாயை யிம்மாயை மயக்க, மனமாயை தான்மாயு மற்றொன்று மில்லை, பினையாய்வ தில்லை



பெதற்றவும் வேண்டாம், தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே."

சுகர்கைவல்லியம்.

"பற்றுடைய மனமசைவால் மாயை தோன்றும்
பரிவான மாயையினாற் சகமுண்டாகும்
உலைவறவே மனமடங்கி விண்போ லானு
லுற்றெழுந்த மாமாயை யொழிந்து மாயும்"

மாயையின் சொரூபத்தை யறியாதவர்கள் ஜகத்தை மெய்யெனநம்பி மயங்குவர். ஒருவன் பிராந்தியிற் கயிற்றை யரவெனக்கண்டு பயந்து விழுந்து நடுக்கமுற்றானென்பதினாலேயே கயிற்றரவு சத்தியமாகுமா. மாயை மித்தியாவஸ்து; ஆதலின் மாயை பிரமத்துக்கன்னியமாக வாஸ்தவத்திலில்லை; அதுபிரமத்திற் கற்பிதசத்தியாக விருக்கிறது. இந்திரஜால வித்தைக்காரனைவிட்டு ஜாலவித்தை வேறாகாததுபோல, சத்தனைவிட்டு சத்தி வேறாகாது.

## கைவல்லிய நவநீதம்.

"சத்தி சத்தனைத் தவிரவே றன்றுகாண் சத்தனு மாயாவி, வித்தை காட்டிய விந்திர சாலம்பொய் வித்துவான் மெய்போல."

ஆதலின், மாயைக்கு எந்தகாலத்துந் தனக்கென வுருவமில்லை. இம்மாயையால் திரிகுணங்களும், பஞ்சபூதங்களும் அவற்றின் காரியங்களும், சேதனமான ஜீவேசுரபேதங்களுங் கற்பிக்கப்பட்டன. பிரகிருதியானமாயையும் புருடனும் அநாதி; ஆனாலவற்றுள் புருடன் யதார்த்தம்; மாயை கற்பிதம். ஆத்ம சந்நிதிமாத்திரமாயுண்டான பஞ்சபூதபௌதிகமான விஷயங்களில் அகம்பாவத்தைப் பொருந்தி, ஜீவன் தானல்லாத தேகத்தை யானெனவும், தனதல்லாதனவற்றை யெனதெனவுங்கொள்ளுதலா லவனுக்கு, நால்வகையோனிகளில் (சராயுஜம், அண்டசம், உத்பிசம், சுவேதசம்) எழுவகைத்தோற்றமான (மக்கள், தேவர், விலங்கு, புள், தாவரம், நிலத்திலூர்வன, சலத்திலூர்வன) எண்பத்துநான்கு லக்ஷம் பிராணிகளாகப் பிறப்பிறப்பு மாறிமாறியுண்டாகிறது. மேலும் சுத்திகையில் கற்பிதமாயுள்ள வெள்ளியை சோதிக்கில், அது அதி



ஷ்டானமான சுத்திகையாய் விடுதல்போல, மாயைக்கு அதிஷ்டானம் யாதென விசாரித்தால், அது அதிஷ்டானமான பிரமமேயாம். ஞானிகள் பிரமத்தைத்தவிர மாயைக்கு வேறுசத்தில்லையெனத் தெரிந்தவர்களாதலின், அவர்களுக்கு பயகம்பனாதிகளுண்டாகிறதில்லை. ஜீவர்களிச்சிக்கு மெந்தவஸ்துக்களையு மவர்கள் விரும்புகிறதில்லை; ஆதலினவர்களே மாயையை வென்றவர்களாவர். அவர்களுக்குச் சூரியனைக்கண்ட விருள்போல மோகமில்லாமற்போம். இம்மாயை வேறெச்சாதனங்களினாலும் நீங்கா. சர்ப்பப்பிராந்தி ரஜ்ஜுஞானத்தால் நீங்குதல்போல, ஆத்மஞானத்தால் மாயாபிராந்தி நீங்கும். இன்னது தேகம் தேகி யிவனென வுணர்வதே ஆத்மஞானமாம். சாக்ஷிமாத்திரமாயுந் தன்மயமாயும் அத்துவிதமாயுந் தம்மைக்கண்ட ஞானிகள், தமக்கன்னியமாக மாயையொன்று யதார்த்தமாயிருப்பதாகக்கூறார்; கூறின் துவைதப்பிராந்தி நீங்காதவரே. மாயை பிரமத்திற்கு அபின்னமாயிருப்பதெனின், பிரமமுமித்தையாகு மாதலின், மாயைபிரமத்தில் ரஜ்ஜுசர்ப்பம்போல கற்பிதமென்றறி. ஆதலின்,

விசாரஞானத்தால் மாயைகெடும்; அதுகெட்டால் அதன்காரியமெல்லாங்கெடும்.

சீ.—அவித்தையாவதுயாது, மாயைக்கு அவித்தையென ஏன் பேர்வந்தது?

கு.—அவித்தை, வித்தையால் அல்லது தத்துவஞானத்தினால் கெடுவது பற்றியதற்கு அவித்தையெனப்பேர். அவித்தையென்பது வொன்றை யொன்றாயறியும் மூல அஞ்ஞானமாம். அது இச்சா ஞானக்கிரியையை யவயவமாகவுடையது; இதனது விகாரமே மூன்றவத்தைகள். இதனால் ஜீவர்கள் ஜனனமரண மடைகிறார்கள். ஆதலின் வெகுகாலமாயுள்ள பொல்லாதவிவ்வவித்தையெனும் வயிரியினை நாசஞ்செய்யவேண்டும். அதனது நாசமே காரணசரீரநாசமாம். மேற்கூறியமாயை ஆவரணம் விக்ஷேபமென்னு மிரண்டு சத்திகளையுடையது. ஆவரணம் திரிபுடியின் நிச்சயந்தெரியவொட்டாது ஜீவர்களை மறைப்பது; விக்ஷேபம் முன் விடையஞானத்தைக்காட்டி பின் சொரூபஞானத்தை விளக்கிவைப்பது. மனதையன்றி அவித்தையில்லையாதலின் மனோநாசமாயின் அவித்தையும் அதனுறம்பந்தமும் நாசமாம்,



## பிரத்தியட்சானுபூதி விளக்கம்.

"அவித்தை யெனற்கிச்சை ஞானங் கிரியை யவயவமாம், அவித்தை விகாரம் நனவாதி மூன்று மழிவிலதாம், அவித்தை கெடிலிவை யெல்லாங் கெடுமெனு மாகமமே."

சீ.—அகங்காரமென்பதியாது; அதனைக்கெடுக்கு முபாயம் யாது?

கு.—அகங்காரமாவது சரீரத்தை நானென்னு மபிமானத்தைச்செய்வதாம். அதுவுள்ளபரியந்தந் தற்போதமொழிவதில்லை. ஆத்மசாக்ஷாத்காரத்தால் அவித்தையை நன்றாகக் கெடுக்கின், அப்போது கூடவே அகங்காரமுங்கெடும் அகங்காரமுள்ளவரையும் புத்தியாதிகளின்செயல் கடலலைபோ லொழியாதிருக்கும் தேகவபிமானமுள்ளளவும்முத்தியடைவதின்று. மேலுந்திரிபுடி ஆன்மசந்நிதியில் விளங்குவதால், அவற்றில்பற்றற்று சாக்ஷியாய்நின்று, உடல்நானென்னுந்தற்போதத்தைவிட்டு, அனைத்தும் மாயாவிலாசமெனக் கண்டிருப்பாயாக. அப்படியிருக்க விருக்க அகங்காரம் பையப்பைய வொழியும். அவ்வகங்காரஞ் சகலஜீவர்களுக்குந் துக்கரூபமாகிய சமுசாரத்தை யுண்டாக்குவதாம்;

சோகமோகாதி தோஷங்களுக்கது காரணமாம்; தேகான்ம புத்தியே ஜனனத்துக்கு வித்தாதலின் சரீரத்தை நானென்று சொல்லுவதொழிவாயாக. ஆன்மாவில் கற்பிதமாகத்தோற்று மவ்வகங்காரமே விரோதம், பொறுமை, துக்கம், சண்டைமுதலிய டலதீங்குகளுக்கு மூலமாம்; பாவத்திற்கு சிறந்தகாரணமாம், அஞ்ஞானத்திற்கும் பிறவிக்கும் பீஜமாயுள்ள அகங்காரத்தைக்கெடுத்தால் நிருவாணசுகமுண்டாகும்.

### தாயுமானசுவாமிகள்.

"ஆங்கார மற்றன் னறிவான வன்பருக்கே
தூங்காத தூக்கமது தூக்கும்."

சீ.—விசாரித்துத் தெளிந்தவர்களுந் தேகத்தைச் சுகப்படுத்தி வைப்பதும், விடய சுகமநுபவிப்பதுங் கூடுமோ?

கு.—இப்பௌதிகம்யாவுங் காலதேசவத்துவைத்தள்ளினுல் பொருளாயில்லாமற்போவதினாலும், அவ்விருப்பைக் கருதும் மனமின்றியக்காலவை யில்லாமற்போவதினாலும், மனமிருக்கும்போதவை யுள்ளவாகத் தோற்றுதலாலும், மனதின் கற்பனையே பௌதிகவிஷயமாம். வாஸ்தவமாக பேதநோக்குடையோருக்கே வுலகமும், தேகமும், தனக்கன்னியமாகத்தோற்றும். ஆத்மானத்ம விசாரணைசெய்துதெளிந்து சொரூபமே தானாகக்கண்ட அபேதஞானிகளுக்கது பிரமமாகவே தோற்றும். அவர்கள்தம்மை வியாபக சொரூபமெனக் கண்டவர்களாதலின், நான்வேறு உலகம்வேறு, வெ ன்கிற பேதபுத்தி வாஸ்தவத்திலொழிந்திருப்பர். அவர்கள் தம்மை பிரமமாகக்கண்டவர்களாதலின், அவர்கள் போகங்களை யநுபவித்தாலும், அமுர்தபானம் பண்ணினவனுக்கு வுப்புநீர் சந்தோஷிக்கப் பண்ணமாட்டாததுபோல, விஷயசுகமவர்களை சந்தோஷிப்பிக்க மாட்டாது. அவற்றில் சத்தியபுத்தி யின்றியிருப்பர். ஆதலினவர்களுண்மையில் விடயபோகந்தவிர்ந்தவர்களே. அவர்கள் தேகாதி பிரபஞ்சத்தில் விருப்பு வெறுப்பு, மேல்கீழ், தனது அன்னிய மென்பவைகளைவையார்கள்; அத்தகைப மகான்களைக் காண்பதரிது. அவர்களிப் பொய்யுலகத்திலிருந்துகொண்டு பேதநோக்குடைய பசுக்களையொத்த விம்மானிட கூட்டத்திலிருக்கக்காரணமேயில்லை. அவர்கள் நூறு அஸ்வமேதயாகஞ்செய்தாலும், அளவற்ற பிரமஹத்தி தோஷஞ்செய்தாலும் துராசாரமான நடவடிக்கை யுடையவர்களானாலும், ஞானவொளியாலவ் வினை சம்பந்தமுண்டாகாது. மே

னும் சொப்பனதேகம்போல வித்தேகமும் அத்தியஸ்
தமெனவும், தம்மைபஞ்சகோச விலட்சனமாயும்,
அவத்தாத்திரிய சாட்சியாயும், நிருவிகார நிரு
மல, போதானந்த வான்மாவாகவுங் கண்ட வரா
தலின் தேகந்தாமல்ல; அதனல் தமதென்னுஞ்
செருக்கில்லையாகையால், தேகத்தை சுகவடிவமாக
மற்றையர்போல் காணர். மேலும் உலகச்சுகமெல்
லாம் போலிச்சுகமெனக் கண்டவர்களாதலால், மற்
றையர்போல் விருப்போடு சுகிக்கமாட்டார். அதற்
காக முயற்சியுஞ்செய்யார்; தானகக்கிடைத்த போ
கங்களை யநுபவித்துத் தொலைப்பர். எத்தொழிலை
யவர்கள் செய்தாலும் அவர்கள் அகம்பாவமற்றவர்க
ளாதலின் அச்செய்கை யவர்களைத் துன்பப்படுத்தாது.
அவர்கள் சதாசாரமுடைய சாதுக்களென்றே அறி
வாயாக. இத்தேகம் தாய்தந்தையரின் சுக்கிலசோணி
தத்தாலாயதாம்; ஷட்வித தாதுக்களையுடையதாம்;
மலமூத்திரம் நிறைந்திருப்பதாம், வியாதிகளுக்கும்
சுகதுக்கத்துக்கிருப்பிடமான இவ்வசுத்தமான பாண்
டத்தை, நீர்க்குமிழிபோன்றதென அறிந்தவர்களாத
லின், எவ்வாறு சுகப்படுத்த விச்சிப்பர்; நீர்க்குமிழிக்
குப்பூண்கட்டுவாருமுண்டோ. மேலும் சுத்தவானந்த



மே தம்சொரூபமாகக்கண்டவர்களுடைய சித்தம், விட
யத்தில் செல்லுமா, செல்லாது. ஆனல், அன்னியரு
டைய விருப்பத்தை தள்ளமுடியாது, தாம் விருப்பு
டையவர்போல் நடிப்பர். அன்னியருடைய விருப்புக்
கிணங்க பரவிச்சாபிராரத்தமாக சுகப்படுத்தியும், சுகி
த்துமிருக்கலாம்; ஆனலது மற்றையர்போலன்று. மே
லும், மனமானது ஒருவிஷயத்தி லழுந்தியிருந்தால்,
மற்றொன்றில் அழுந்தாது; அதுபோ லவர்மனமும்
எப்போதும் பிரமத்தில் தோய்ந்திருக்குமென்றறி.

பகவத்கீதை.

"நைவகிஞ்சித் கரோமீதி யுக்தோமன்யேத
தத்வவித்."

𑍈𑌨𑌵𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑍋𑌮𑍀𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌮𑌨𑍍𑌯𑍇𑌤 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌤𑍍।

(இ=ள்) இல்லற மெய்ஞ்ஞானி சர்வகர்மத்தை
யுஞ்செய்தும், தான் செய்யாதவனகத் தெரிகிறன்;

விஞயகரநபூதி.

"தமதென் றிறை ரூபமி லிச்சகம் யா
மெமதென் றுகுறித் திடவென்றறு மோ' ~

தாயுமான சுவாமிகள்.

"புன்புலா னரம்பென் புடைப் பொய்யுட
லன்பர் யார்க்கு மருவறுப் பல்லவோ."

சீ.—உலகில் வேதாந்திகளென வழைக்கப்படுமனேகர், விசாரணைசெய்து தாம்அறிவுசொரூபனென
மனதில் திடபாவங்கொள்வதுதான் அநுபவம்; வேறு
வுழைப்பாவது யாதுக்கென சாத்திரங்களையே ஆயுள்
வரையும் வாசிப்பதையே தொழிலாகக்கொண்டுழல்கி
ரூர்கள்; அவ்வாறிருந்தால் சமாதி நிட்டை முதலிய
வை வேறுஞ்சொல்லளவாக முடியாதா?

கு.—ஆசிரியரிடங்கேட்டுபாவித்தல் தியானயோ
கமாம்;பாவித்ததை பிரத்தியக்ஷமாய்க்கண்டது ஞான
யோகமாம். சூரியனென்று கூறுவதாலும் நினைப்பதா
லும் இருள்நீங்கிவிடுமா, நீங்காது. அவ்வாறே நான்
பிரமமெனக் கூறுவதாலும் நினைப்பதாலும் பிரமாநு
பவம் வந்துவிடுமா; தன்னைத்தான் காணுவரையும்
ஜகஜீவ பரமுண்மையாகவே தோற்றும்; தன்னைக்க
ண்டுழி, அத்திரிபுடி மித்தையாகத்தோற்றும்; மித்தை
யானதை டரமாகக்கரைத்து, பரமாக்கியதைத்தானு
க்கரைத்துணரக்கூடும், இதுவே ஞானசுத பிரத்திய



க்ஷமெனப்படும். இதையடைய நிருவிகற்பசமாதிஅத்
தியாவசியம்; இதைப்பியசிக்க அனவரதமும் ஆசன
த்திலிருந்து திரிசியநாட்டத்தை யொழித்து பிரமா
காரமாயிருத்தல்வேண்டும். மேலும், ஜனகாதிநால்வ
ரும் மூன்றரைகோடி கற்பமும், சுகர் ஆயிரம் வருஷ
மும் சமாதிசெய்தார்களெனின், கேவலம் மாயையிலு
ழலும் ஜீவர்கள் சமாதியாதி யுழைப்பின்றி யெவ்வாறு
பிரமாநுபவ மடைவரோ அறிகிலம். நிருவிகற்ப
சமாதிவாயிலாக தத்துவஞானஞ் சித்திக்கும்,அதனால்
காரணசரீரமான அவித்தை நாசமாகும்; அதனால்
ஜீவன் முத்திதிசை யுண்டாகும்; அதனால் விதேசமுத்
தியுண்டாம். கற்றவளவினாலுங், கேட்டவளவினாலும்
விதேகமுத்தியடைய முடியாது. மேல்குறிப்பிட்டவர்
கள் தங்களுக்குப் பசியில்லையென நினைத்துக்கொண்டு
பசியால் வருந்துபவரேயொழியவுண்மையில் பசிதீர்ந்
தவராகார். மேலும் விரகு பொருக்கநேரமுண்டு,குளி
ர்காய நேரமில்லையென்பது போலிருக்கின்றனர். சதா
வாசிப்பதையே தொழிலாகக் கொண்டால் வாசித்தவ
ளவு அநுபவிப்பதெப்போ. மேலும் தானியத்தை விரு
ம்பினவன் வைக்கோலை நீக்குவதுபோல, அநுபவம்
வேண்டினவன் சாத்திரங்களை விடவேண்டுமல்லவா.

ஜீவதிசையோ நிலையற்றதாதலான் உள்ளபொழுதே அநுபவமடைவதுதான் மோக்ஷவேதுவாகும்.

### விவேக சூடாமணி.

"சொரூபநிட் டையையோர் காலுஞ் சொற்ப மூன் தவிர வொண்ணு,தரணியி லந்த நிட்டை தவிர்த லே கால னென்று, பிரியனே பகவா னுன பிரமபுத் திரவ சிட்டன், பரமவா சிட்ட நூலிற் பலவிதம் பகர் ந்தா னன்றே."

"பரமமே நானென் றேதும் பகரன்மாத் திரமே யான, வுரையினுற் பிரம மாகவொன்றிடு முத்தி யுண்டோ."

### தாயுமான சுவாமிகள்.

"கற்றகலை யானிலைதான் காணுமோ காண்பதெ ல்லா, மற்றவிடத் தேவெளியா மன்றே."

"கற்றதுங் கேட்டதுந் தானே யேதுக்காகக்
கடபட மென்றுருட்டு தற்கோ கல்லா லெம்மான்
குற்ற மறக்கை காட்டுங் கருத்தைக் கண்டு
குணங் குறியற் றின்பநிட்டை கூட வன்றே."



"என்னதியா னென்பதற வெவ்விடமு மென்னு சான், சன்னிதியாக் கண்டுநிட்டை சாதிப்ப தெங் காளோ."

"வாக்கு மனமு மவுன முற வெந்தை நின்னை
நோக்கு மவுன மிந்த நூலறிவி லுண்டாமோ,"
"சட்டை யொத்த விவ்வுடலைத் தள்ளு முன்னே நான்சகச, நிட்டை யைப்பெற் றையா நிருவிகற்பங் காண்பேனே."

### திருக்குறள்.

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ
னற்ருள் டொழாஅ ரெனின்."

### பாலையானந்த சுவாமிகள்.

'தத்துவக் குப்பையைத் தள்ளுங்கடி வேத
சாத்திர பொத்தலை மூடுங்கடி."

### சசிவர்ண போதம்.

"பிராணமிதி காசமெவை யும்பொரு ளனைத்தின்
பிராணனறி யாதுள விடத்திவை பிதற்றே."

திருமந்திரம்.

"வேதாந்தங் கேட்க விரும்பிய வேதியர்
வேதாந்தங் கேட்டுந்தம் வேட்கை யொழிந்திலர்
வேதாந்த மாவது வேட்கை யொழிந்திடம்
வேதாந்தங் கேட்டவர் வேட்கைவிட் டாரே."

பத்திர கிரியார்.

"வேதாந்த வேதமெல்லாம் விட்டொழிந்தே நிட்டையிலே, ஏகாந்த மாக விருப்பதினி யெக்காலம்."

சீ.—சுவாமி, சீவன்முத்தரெனக் கூறுகிறீர்களே அவர் யாவர்; ஜீவதிசையிலேயே வெவ்வாறு முத்தியடையக்கூடும். தேகவியோகமானபிறகு வைகுண்டம், அல்லது கைலாயமடைவது முத்தியென மதத்தர் கூறுகின்றனரே, அது சரியா?

கு.—அப்பா, துவைதத்தோற்றமாகிய அஞ்ஞானம் நிவர்த்தியானபிறகு இச்சரீரத்துடன் கொஞ்சகாலம் வசிக்கவேண்டிய நிலைமையே சீவன்முத்தியென்பது. சீவன்முத்தர்கள் உலகில் கூடிவாழ்ந்தாலும் நாம்செய்கிறோம் நாம் அநுபவிக்கிறோமென்கிற அபிமானமின்றி சுகதுக்கங்களை சமமாகநோக்கி கருத்ருத்துவ



போக்த்ருத்துவமின்றியிருப்பர். அனுத்ம விஷயங்களில் சங்கற்ப விகற்பங்களற்றிருப்பர்; உலகினிடம் முற்றும் உதாசீனராக விருப்பர்; சராசரங்களில் தம்மையும், தம்மை சராசரங்களிலுங்கண்டு அனைத்தையுந் தாமாகக்கரைத்து விஷயபோகங்களை சுவாத்மாநந்தமாகக்கண்டு சின்மாத்திரமாயிருப்பர். மேலுமவர்கள் அகம் பிரமமென துணிவுற்றிருப்பதால் பரமானந்த பரவசராயுமிருப்பர். முத்தாப வெப்பமற்று, விதிநிடேதம், தூஷணை பூஷணை, மானுபிமானமின்றி முக்குற்றங்களும் ஒழிந்தவராயிருப்பர். ஈதனைத்துஞ் சொரூபமே, எதனை யிச்சிப்பேன், எதனையிகழ்வேனென பற்றின்றி தம்மிற்றுமே ரமித்து வுலகிலுண்டுடுத்திப் பூண்டு விவகரித்துத், தம்மை பிரத்தியேகாத்ம அபின்னபிரமமாகக் கண்டிருப்பர் ஒருவன் கானல்நீரை யுண்மையாகவோர்கால்பார்த்து மயங்குகிறான்; ஒருகாலத்தி வது பொய் தோற்றமென்றுகண்டு தெளிந்தவன், பிறகு அத்தோற்றமுண்டானாலும் அவனுண்மையென வதனைக்கொள்ளான்; அதுபோல சீவன்முத்தர் உலகத்தின் தன்மை பொய்தோற்றமென வுண்மையில் கண்டவராதலின மயங்கார். சீவன்முத்தர்களுக்கு மும்மூர்த்தி

களும்வந்து ஏவல் செய்விதென சாத்திரங்கள் கூறு கின்றன.

### சசிவர்ணபோதம்.

"தேவரு மனிதரு மிவன்றெழில் வியந்துரை செயப்படுவதோ, மூவரும் வணங்கிமுடி யாலவன தேவல் செய முந்துறுவரே"

இவர்கள் சிவகாருண்ணியம், பாசவைராக்கியம், ஈசுவரபக்தி பிரமஞானமென்னுங் குணங்களை நிரம்பப் பெற்றவர்கள்; ஆதலின் பிறருக்குத்தீங்கு செய்தால், தனக்கேதான் தீங்குண்டாக்கிக் கொண்டதாகு மென்று தெறிந்தவர்களாதலின், பிறர் தீங்குசெய்தாலும் நினைத் தாலும் தாங்கள் கோபிக்காமல், அல்லது கோபித்தவ ரைப்போல காட்டி யுடனே சாந்தியடைந்து, பதில் நன்மையே அவர்களுக்குச்செய்யு மியல்பை யுடையோ ராவர். கோபங் காருண்ணியத்தால் வந்திருக்கலாம்; அஃ தாவது, இத்தனைகாலமொருவன் சிரவணஞ்செய்து மவ னுக்கு அநுபவம் பிறக்கவில்லையே யென்கிற காருண் ணியத்தால் கோபம் வந்திருக்கலாம்;



### திருக்குறள்.

"இன்னா செய்தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்"

"அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை"

மேலும் ஓடு கல் பொன் பெண் இவைகளிடத்து அவர்கள் பிரியாபிரியமின்றி அவற்றில் சமநோக்குடை யவராயும், நாளைக்கு வேண்டு மென்கிற விருப்பமில்லா தும், அகங்காராதி யணுவுமின்றி, மாயைமுதலிய கற்பி தத்தைமதியாது, மகாவாநந்தம்பெற்று, திரிபுடியை மற ந்து மவுனமாயுமிருப்பர்.

### தாயுமானசுவாமிகள்.

"ஓடுமிருநிதியு மொன்றாகக் கண்ட வர்க
ணுடும் பொருளான நட்பே"

### கைவல்லியநவநீதம்.

"சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன், நின்றது புசிப்பார் வெய்யி னிலவாய்விண் விழுந்துவிழ்ந்து, பொன்றின சவம்வாழ்ந் தாலும் புது

மையா வொன்றும் பாரார், நன்றுதீ தென்னுர் சாட்சி கடுவான சீவன் முத்தர்''

## வாக்குண்டாம்.

"நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம்.''

## சோருபசாரம்.

"மெத்தென்ற சொல்லும் விருப்பமற்ற நோக்குமெலாஞ்
சத்தென்ற நெஞ்சுந் தளர்நடையுஞ்-சித்தத்
தடங்கா மகிழ்வு மனவரதம் பெற்ற
திடந்தானே ஞானி செயல்''

ஆதலி னிவர்களிருக்கும்போதே முத்தியடைந்தவரெனவும், வித்துவான்க ளெனவுங் கூறுப. இவ்வித சீவன்முத்தர், எவ்விடத்தி லெவ்விதமாய் தேகவியோக மடைந்தாலும், எங்கும்பரவிய ஆகாசம்போல அவ்விடத்திலேயே லயமடைகிருர்கள். மற்றையரோவெனின், அரிதாகக்கிடைத்த மனிதப்பிறப்பைப்பெற்றதின் பயனென்ற மோக்ஷமடைவதென்பதை மறந்து, தேகமேநான் ஜகத்சத்தியம், போகமேமுக்தி, எனவெண்ணி விடயங்களி லிச்சைகொண்டு மண், பெண், பொன்னேயே தினே தினே தேடி, நாடி, வாடி வாழ்நாளைக்கழித்து பாசத்தி லழுந்துவர். இவர்கள் முக்குற்றங்களும் நிறைந்தவராயும் இருவகைப்பற்றுக்களையு முடையோராயிருப்பதா லிவர்கள் இச்சகம் சொப்பனம்போல்வதென காணுது மனே வியாதியரே துணையென நம்பியிருந்து இறந்தபிறகு மோக்ஷமடைவதென நினைப்பர்.



## தாயுமானசுவாமிகள்.

"தினமே செலச்செல வாழ்நாளு நீங்கச் செகத்திருள்சொப், பனமே யெனவெளி கண்டேயிருக்கவும் பாசபந்த, வினமே துணையென் றிருந்தோ நமன்வரி னென்செய்குவோ, மனமே நம்போலவுண் டோசுத்த மூடரிவ் வையகத்தே.''

இதுநிற்க, இவர்களுக்கு முன்செய்துவந்த புண்ணியத்தால் அஷ்ட ஐஸ்வரியமும் நிறைந்திருப்பதால், கடவுளொருவனுளனுமே, அவன் யாவன், எவ்விடத்தி லிருப்பவன், எவ்வாறவனை யுண்மையி லடைவதென யோசித்தாரில்லை. வீணே க்ஷணத்திரயத்தை நம்பி, மதாவேசங்கொண்டு கருவித்து, விஷ்ணுவோ, அல்லது

சிவனே, பெரியவனென வீண்வாதமிட்டிருந்து, இறுதி நாள்நெருங்கி பலங்குன்றி யிந்திரியங்களடங்கியகால த்தில் நாராயணா சிவசிவா வென்றால், வைகுண்டம் அல்லது கைலாயம் வந்துவிடுமா, ஒருகாலும் வாராது. அத்தகைய பேதநோக்குடைய அவர்களடையுங்கதி யீதியே; நாமரூபத்தோற்ற முள்ளவிடமெல்லாம் நரக மென்றே யறிவாயாக.

## பட்டினத்தார்.

"காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே-மேல்விழுந்தே
யுற்றா ரழுமுன்னே யூரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு."

முடிவுகாலத்தில் மைந்தன் தன்செவியில் நாராய ணா சிவசிவா வென்று கூறின் நுழையுமா நுழையாது. ஏனெனின் தத்துவங்களெல்லாமடங்கி, யெப்படி தேனீ யானது தேனைச்சேர்த்துத் தானுமுண்ணமல் நாளைக் கெனவைத்து வயிறெறிந்ததோ, அதுபோல தான்சேகரி த்த நிலையற்றபொருளைத் தான் வயிற்றுக்கு முண்ணம லும், சாதுக்களுக்கும் வினியோகிக்காமலும் பந்துக்களு



க்குங் கொடாமலும், நாளைக்கென பூமியில் புதைத்து வைத்து அன்னியர் கொள்ளைகொள்ளும்படி வைத்திரு க்குஞ் செல்வத்தை நினைத்தும், இளமைப்பருவமுள்ள மனைவியை எவ்வாறு விட்டுப்போவதென நினைத்து வருந்து மச்சமயத்தில் மைந்தன் சொல்வது நுழை யாது.

## திருக்குறள்.

"அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்."
"ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை."

## ஆன்றோர்.

"வேண்டாம் விருப்பும் வெறுப்பு மிந்த
வில்லங் கத்தாலே விளையும் ஜனனம்."

## தாயுமானசுவாமிகள்.

"இடம்பெறு வீடுமின் னார்சேய் ஜகமு மிருசிதியு முடம்பைவிட் டாருயிர் போம்போது கூடியுடன் வரு மோ".

### விவேகசூடாமணி.

"ஏதெனி விந்தத் தேக மிறந்திடன் மோக்ஷ மன்றே
யோதிய கடதண் டாதி யொழித்தலு மோக்ஷ மன்றே
யேதமா மவித்தை யாலே யெய்திய மனமு டிச்சு
யாதுமே யொழிவ தன்றோ வெதிகளுக் கிசைந்த மோ
[க்ஷம்."

ஆதலின் சுகமாயிருக்கும்போதே எவன்குருவைய டைந்து நானாரெனவிசாரித்து நிட்டைபழகி தத்துவ ஞானமடைவனோ அவன் உடம்போடிருக்கும்போதே மோக்ஷம்பெற்றவன், உடம்பை விட்டபோதும் மோக்ஷ மடைந்தவனாவன். ஆதலின் நீ தனியேயிருந்து நிட்டை சாதித்து சீவன்முத்திபதத்தைக்கொள்; இதுவே பரம பதமாம். தனக்கன்னியமாக வைகுண்டமோ அல்லது கைலாயமோ வுளதெனவும், பிறகடைவதெனக்கருதி முயலுவது மோக்ஷசாதனமாகாது.

சீ.—சீவன்முத்தர்கள் மற்றையர்போலவே இல் லறத்தி லிருந்துகொண்டு, போனேன் வந்தேன் உண் டே னென்கிறார்களே; இவர் முத்தர், அவர் பெத்த



ரென நடை, யுடை, பாவனைகளினாலன்றோ அறிய வேண்டும்; வித்தியாச மறிவதெப்படி, அருளவேண்டும்?

கு.—சீவன்முத்தர்கள் இல்லறத்தில் அரசராகவும், வர்த்தகராகவும், இன்னும் மற்றவராகவு மிருப்பர். அவர்களுடைய ஒழுக்கம் பாலர், பேயர், பித்தர்போலிருக்கும்.

### தாயுமானசுவாமிகள்.

"பாலரொடு பேயர்பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை."

### பட்டினத்தார்.

"பேய்போற் றிரிந்து பிணம்போற் கிடந்திட்ட
பிச்சையெல்லா, நாய்போ லருந்தி நரிபோ லுழன்று நன்
மங்கையரைத், தாய்போற் கருதித் தமர்போ லனைவர்க்
குந் தாழ்மை சொல்லிச், சேய்போ லிருப்பர்கண் டீரு
ண்மை ஞானந் தெளிந்தவரே"

பேயர் பித்தரெனக் கூறினதால் மாறுவேடங் கொண்டு அசுசியான காரியங்களைச்செய்து வுலகோரை பயப்படுத்தி காண்பிப்பதல்ல. மற்றுயாதுதானென்னின்,

இனி யுண்பதுபற்றி ஆலோசனை செய்யாமையின் பாலரைப்போன்றும், எவரிடத்தும் விருப்பு வெறுப்பின்றி யிருத்தலின் பித்தரைப்போன்றும்; தன்னுடைய சொரூபத்தைப் பிறருக்கு வெளிப்படையாகக் காட்டாமையின் பேயர்போன்றவரெனவுங் கொள்ளல்வேண்டும்.

## குமந்திரட்டு

"பிள்ளை யாமுணச் சிந்தைசெ யாமையின் பித்தன்
கொள்ளு மார்வமும் கோபமு மறுதலிற் கூளி
யுற்ற தன்னுரு வொளித்தலி னுள துணர் முனிக்குப்
பிள்ளை பித்தனவன் பேய்நிக ருரைத்தனர் பெரியோர்"

சொற்பனங்கண்ட வொருவன் அது பொய் தோற்றமெனத் தெரிந்தும், தான்கண்ட காக்ஷியை மற்றொருவனிடம் இவ்வாறு கண்டேனெனச் சொல்வதுபோல வித்துவான்களுங் கூறுவார்கள்.

## கைவல்லியநவநீதம்.

"ஒய்ந்த கனவிற் கண்ட பழங்கதை யோதுவன் வாதனையா, லாய்ந்தறிவுற்றவ னப்படி செப்புவ னுபாசனுமாரன்"



## அத்துவிதானுபவம்.

"சகலமறிந் தாசையிலா மெய்ஞ்ஞானி யெத்தொழில்கள் தான்செய்தாலும், மிகசாம்பி ராச்சியமுதற் பரமபதத் துள்ளசுக மெல்லாஞ் சேர்வன், அகல்கருமமொன்றுண்டோ பிறவியுண்டோ விரண்டுண்டோ வவித்தை யுண்டோ, சுகமயமோ, மெய்யறிவோ சற்குருவோ வகோமகிமை சொல்லொணாதே"

மேலும், எவ்வாறு காற்றானது நற்கந்தந்துர்க்கந்தங்களிற் சென்றாலுந் தானொன்றிலும் பற்றுவதில்லையோவதுபோலவும், நின்மலாகாசத்தைப் புகைதொடாததுபோலவும், இவ்வித்துவான்கள் உலகை ஆத்மாவுக்கபின்னமான பிரமமாகக் கண்டவர்களாதலின் உலகிலெவ்வித விவகாரம்பாபபுண்ணியஞ் செய்தாலும் பந்தப்படுவதில்லை. மேலும் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள ஆகாயம் அதிசூக்குமமாயிருப்பதால் தன்னிலுண்டானமற்று நான்கு பூதங்களினு மொட்டாதிருப்பதுபோல, சீவன்முத்தர்களொன்றிலும் பற்றுதலின்றி வியாபக சின்மாத்திரமாயிருப்பர். கேட்டல் முதலிய வெல்லாவிவகாரங்களும், செவிமுதலிய இந்திரிய விவகாரமென்று தெரிந்து

வர்களாதலின், அவர்கள் சகலவிவகாரங்களைச்செய்தும் அகர்த்தாவே. மேலும் தீர்த்தத்தில் மூழ்கினவனுடைய பாபத்தை யத்தீர்த்தம் போக்கியும், அப்பாபத்தைத் தானடையா திருப்பதைப்போல, சீவன்முத்தர்களைச் சேவித்தவர்களுடைய பாபத்தையும் அஞ்ஞானத்தை யும் போக்கித்தாமதையடையாதும் தன்னிலே குன்றாது மிருப்பர். இவர்கள், சதாசின்முத்திரையோடு நிட்டை யிலேயே யிருக்கவேண்டுமென்னும் நியமமில்லை, ஏனெனின் அவர்கள் எவ்வித பிரதிபந்தங்களுமின்றிய விருத்தியோடிருப்பவராதலின் அவர்களுக்கு தேகம், காலம், திருஷ்டி ஆசனமுதலியவை வேண்டியதில்லை; மற்றை யர்போலவே இல்லறம் நடாத்தி நேற்றின்று நாளை யென்பதை நினையாது பற்றற்று மிருப்பர். மேலும் ஜகத்தினால் தாம்பயப்படாமதும் ஜகத்தை பயமுறச்செய்யாமலும், பந்தமுத்தி விவகாரத்தை மறந்து மிருப்பர். உலகிலனேகர் ஞானிகளைப்போலவே, நடையுடை யுடையோரா யபினயித்திருப்பதாலவர்களைப் போலி யென்றேயறி. உண்மை ஞானிகளின் முகவிலாசத்தினலும்அன்பினலும் அருளினலும் ஐம்புலன்களையடக்கி



னதாலுஞ் சுகதுக்கமியல்பென்று கண்டதினலும் வித்தியாச மறியலாமென்றறி.

## பட்டினத்தார்.

"மாத்தான வத்தையு மாயாபுரியின் மயக்கத் தையும் நீத்தார் தமக்கொரு நிட்டை யுண்டோ"

"தெருளுடை யோரை முகத்திலுந்தேர்ந்து தெளி வதுபோ, லருளுடை யோரைத் தவத்திற். குணத்தி லருளிலன்பி, லிருளறு சொல்லினுங் காணத்தகும்."

## கைவல்லியநவநீதம்.

"காமமா திகள்வந் தாலுங் கணத்திற்போ மனத் திற் பற்றூர், தாமரை யிலைத்தண் ணீர்போற் ஜகத்தொடுங் கூடி வாழ்வார்"

"சித்துநா னிறைந்தோ னென்ற திடமற வாதிருந்தால் எத்தனை எண்ணினலு மேதுசெய் தாலுமென்ன நித்திரை யுணர்ந்த பின்பு நிற்கின்ற கனவே போல் அத்தனை யும்பொய் தானே யாகந்த வடிவு நானே"

இந்த பிராரத்ததேக முள்ளளவுஞ், சீவன்முத்தன் தேவனே யானுலும், உலகிலிவனே மனிதனெனவே கூறுவர். பிராரத்தம் தேகபாவனையிலேயேயன்றி ஆத்மபாவனையிலில்லை. ஆனுலிவர்களுக்கு பிராரத்தங் கூறத்தகாதோவெனின், விழித்தபின் சொப்பனம் அசத்தாவதுபோல, தத்துவஞான முதயமானபினித்தேகாதி பிரபஞ்சம் அசத்தே யாதலின் பிராரத்தஞ் சிறிதுமில்லை. இவர் பலவிதவிவகாரம் யாதுகாரணம்பற்றி யியற்றுகிறுர்களெனின், உலகோருய்யும் பொருட்டுச் செய்துக்காட்டுவதுண்டு. இவர்கள் உலகில் நடத்திக்காட்டுவதே விதியும், இவர்கள் விட்டதே விலக்காம். ஆத்மாநுபவத்தில் வேறுபாடில்லை யென்றறி.

### கைவல்லியநவநீதம்.

"நல்லவ னேகே ளுலகுப காரம் ஞானிகள் விவகாரம்,அல்லது வேறெரு பெறுபே றும்மிலை யதனுற் பிணியுமிலே"

### ஆன்ருேர்.

"ஞானி விடுத்ததொழி லெல்லாம் விலக்காகு மன்னுேன் அடுத்ததொழி லாசார மாம்"



### விவேகசூடாமணி.

"பூதகா லத்தி றந்த பொருளினைச் சிந்தி யாமை
யோதிய வருகா லத்தி லுறுபொரு ளோர்ந்தி டாமை
யேதுமே நிகழ் காலத்தி லெய்தினு மதிலு பேக்ஷை
யீதெலாஞ் சீவன் முத்த னிலக்கண மாகுமைந்தா."

மேலும், அஞ்ஞாநுபவமான அசுத்தவாதனையுடையவன் பெத்தனெனவும், ஞாநுபவமான சுத்தவாதனை யுடையவன் முத்தன்.இவ்வுண்மையை நீ யவ்வாறிருந்து பார்த்தால்தான் நன்கு விளங்கும்.

### வள்ளலார்சாத்திரம்.

"அறியணையி லிருந்துலக வரசாக்ஷி புரிந்தாலு மங்கை யேற்றுத், தெருவுதொறுந் திரிந்திரந்து தின்றாலு மிள்ம்பருவத் தெரிவை மாரைப், பிரியாம லிருந்தாலும் பேசிற்றெல்லாம், விரிசீவன் பிரிந்து தவம் புரிந்தாலும் முத்தனுக்கிங் குடம்பாடே யன்றி யொன்றும் விரோதமின்றே?"

**சசிவர்ணபோதம்.**

"ஞானியை நரன்சுர னெனுதொழிக ஞாலமுய நாத னருளான், மேனியது கொண்டுதனை நல்கவரு மென்றறையும் வேத முடிவே"

சீ—இப்போதெனக்கொரு சந்தேகமுண்டாகின்றது; அஃதாவது, சீவன் முத்தர்கள் கோயில் குளம் முதலான விடங்களுக்குப்போவதும், ஆசிரமங்களைவகிப்பதும், மந்திர தந்திரயந்திரஞ் செய்வதும், திதி வாரம் நக்ஷத்திரம் பார்த்தலும், கீர்த்தியை விரும்புவதும், சீடர் தம்மை தோத்திரஞ்செய்ய வெண்ணுவதும், நித்தியகருமஞ் சிரார்த்த முதலியனவை செய்வதும், முறைதானோ?

கு.—அவையாவும் உலகபிரமையேயன்றி வேறன்று. உண்மைஞானிகள் தம்மைப்பரமாத்மாவாகக்கண்டவர்களாதலின் அவர்கள் செய்யவேண்டிய தொன்றுமில்லை. ஆனாலும் உலகமானது ஞானசாதனக் கிரமத்தைத்தெரிந்து அநுஷ்டித்து வுச்சீவிக்கும்படி செய்துக்காட்டுவர். அவர்கள் தம்மைசாக்ஷியாக கண்டவர்களாதலின் தாஞ்செய்யுங் கருமங்களால் அவர்களடையும்



பயனும் கருமசம்பந்தமுமில்லை. அவர்கள் சகலவிதமான வுலகப்பிரமைகளை நீத்தவர்களென்றே யறிவாயாக.

**தாயுமானசுவாமிகள்.**

"உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்தார் போற்றிரியுந் தொண்டர் விளையாட்டே சுகங்காண்."

சீ—சீவன்முத்தர்கள் சகலகாரியங்களையுஞ் செய்து கர்த்தா வாகமாட்டாரெனக் கூறினீர்; அஃதெவ்வாறுகூடும், விளக்கவேண்டும்?

கு.—நாகம் நன்றாகவுரித்து கழற்றிவிடாததான சட்டையின்பேரில் பாம்புக்கு அபிமானமில்லாதிருப்பதுபோல, சீவன்முத்தர்களுக்கு இச்சட்டையின்பேரில் அபிமானமில்லை. மேலும் எல்லாந்தாமேவெனக் கண்டவர்களாதலின் கொடுப்பவரும் வாங்குபவரு முண்மை நோக்கிலில்லையாதலின் கருத்ருத்துவமில்லை. மேலும் மியாகாரியமாகின்ற தேகேந்திரியங்களினு லியற்றப்படும் சகலகிருத்தியங்கட்கும் ஐந்து காரணங்களுண்டு. அவைகளுக்குத்தாம் சாக்ஷியென்றறிந்தவர்களாதலின் ஞானகாரமாக விருக்குமவர் எக்காரியஞ் செய்யினும்,

ஈசன் சிருட்டியாதி செய்துந் தானென்றிலும் பற்றுதிருத்தல்போல, இவரும் எக்காரியஞ்செய்யினுங் கர்த்தாவாகிறதில்லை. மேலும் பாவாபாவமற்று வாசனைகெட்டவராதலின் உலகதிருஷ்டிக்குக் கருமஞ்செய்தாலுங் கருத்தாவாகிறதில்லை யென்றறி.

### கைவல்லியநவநீதம்.

"வல்ல சிருட்டி முதற்பல தொழிலால் வருபுண்ணியபாவ, மெல்லவ ருக்கு மநுக்கிர சஞ்செயு மீசனடைந்திலனே."

சீ.—அவ்வைந்து காரணமெவை?

கு.—தேகம், சீவன், இந்திரியங்கள், வாயுக்கள், இந்திரிய அதிதேவதைகளாம். ஆத்மசந்நிதிவிசேஷத்தால் அவ்வைந்தினுல் இயற்கையாய்ச் சகலவியாபாரங்களுஞ் செய்யப்படுகின்றன. சீவன்முத்தர் தம்மை ஆத்மசொரூபமாகவும், தாம் சாக்ஷியேயென்றறிந்தவர்களாதலின் கர்த்தாவாக மாட்டார். மேலுங் காமக்குரோதாதி அந்தக்கரணதருமமாதலின், சூரியனை யிருட்டுபேறைக்காதது போல, ஆத்மாவை காமமாதிகள் வாஸ்தவத்தில் பந்திப்பதில்லை. சுருதி, யுத்தி, அநுபவமு மவ்வாறே



யிருக்கிறதென்றறி. சர்வமும் மித்தையெனக்கண்டு செய்யப்பட்ட கருமம், பந்தத்தையுண்டாக்கமாட்டாது. மேலும் எவ்வாறு மரமசைந்தாலும், அதில் வியாபித்திருக்கும் ஆகாசமசைந்ததாகக் கூறப்படுவதின்றே அதுபோல, தேகேந்திரியங்கள் சலித்தாலும் அவற்றில் வியாபித்திருக்கிற ஆன்மாவுமசைவதில்லை. மோகத்தினலது அசைந்ததாகவும் அசைப்பித்ததாகவுங் கூறப்படுகிறது.

சீ—அஃதெப்படி, நன்குவிளக்கவேண்டும்?

கு—அசையாமலும் அசைப்பிக்காமலு மிருக்கும் காந்தக்கல்லின் முன்னுள்ள இரும்பு சலிக்கிறதுபோல, அசையாதும் அசைப்பிக்காமலுமிருக்கும் ஆத்மசந்நிதியில், எவ்வாறு சகலமுமசைந்தாலும் ஆத்மா சலிப்பதில்லை சலிப்பிக்கிறதுமில்லை. ஆதலின், ஆத்ம சொரூபமாயுள்ள சீவன்முத்தர் கர்த்தாவாகிறதில்லை; கர்த்தாவாகாமையால் போக்தாவாகிறதுமில்லை

### கைவல்லியநவநீதம்.

"செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்குங் காந்தச் சிலைமுன் னிரும்புகள்சேட் டிக்கு மாபோல்,

செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்குமென்முன் செடமான வுலகமெலாஞ் சேட்டை செய்யும்"

பகவத்கீதை.

"குருவந்நபி நகரோதி நலிப்யதே" (இ-ள்.)
கூவஙுநூவிநகரோதிநவிவுதெ.

கருமத்தைச் செய்துஞ் செய்யாதவனுகின்றான், அதில் சம்பந்தப்படமாட்டான்

அகங்காரத்தையுடையவன் தேகமே நானென்று அபிமானித்திருப்பதால் தான் கருமஞ்செய்யாதிருந்தாலும் அவன் செய்தவனேயாதலின் நான் கர்த்தா போக்தாவென்று சொர்க்க நரகங்களுக்காளாகின்றான்; அகங்காரமில்லாத தீரன் சகலகருமஞ்செய்துஞ் செய்யாதவனுவனென்றறி.

சீ—முத்தாபவெப்பமெவை; அவற்றை யில்லாமற் செய்துக்கொள்வதெவ்வாறு?

கு—அவை ஆதிஆத்மீகம், ஆதிதெய்வீகம், ஆதிபௌதீகமெனவுமாம். தேகத்தைப்பற்றிவருந்துன்பம் அஃதாவது, தலைவலி, கால்வலி, பசி தாக முதலியதுக்



கம் ஆதிஆத்மீக மெனப்படும். யக்ஷ, இராக்ஷச பிரேத இடி, கிரகாதிகளினுலுண்டாகுந்துக்கம் ஆதிதெய்வீக மெனப்படும். திருடர், புலி, சிங்க, முதலியவற்றால்வருந் துக்கம் ஆதிபௌதிகமெனப்படும், இவையே தாபத்திரயமாம். இத்துக்கம்யாவும் தேகத்தைப்பற்றினவையேயல்லாமல் தேகாதீதமான ஆன்மாவைப்பற்றினவையல்ல. நீ தேகியான ஆன்மாவாகையாலும், உன்னுடைய தேகம் அனுத்மாவாகையாலும், ஆன்மாவை யவை யுபாதிக்கமாட்டாதாகையாலும், உனக்கொருதாபமுமின்று; எப்போதும் நீ விடுபட்டவனே, அறியாது கலங்குகிறுய்.

சீ.—சுவாமி சின்முத்திரையாவது யாது; அது எதனைக்குறிப்பிக்க நின்றது?

கு.—சின்முத்திரையாவது, கூடத்தபிரம ஐக்கியத்தையுணர்த்தும் ஞானக்குறியாம். பெருவிரலின் முனையுஞ் சுட்டுவிரலின் முனையும் ஒன்றுசேர்ந்திருக்க மற்று மூன்றுவிரலும் நிமிர்ந்து விலகியிருத்தலாம். சுட்டுவிரல் முனையும் பெருவிரலின் முனையும் ஒன்று சேர்ந்திருப்பது கூடத்தபிரம ஐக்கியத்தை யறிவிப்ப

தாம். மற்று மூன்றுவிரல்களும் விலகியிருத்தல் காமம வெகுளி, மயக்கமென்னு முக்குற்றங்களின் நிவர்த்தி யை யறிவிப்பதாம். காம, வெகுளி, மயக்கங்கள் நீங்கி னுல், கூடத்தபிரம ஐக்கியம் நன்கு விளங்குமென்பது திரண்டபொருள்.

சீ:—ஆத்மா அவாங்கமனோகோசரமெனச் சாத்தி ரங்கள் கூறுகின்றனவல்லவா; அதை குருதெரிவிப்ப தும் சீடரறிவதெப்படி ?

கு:—அவாங்கமனோகோசரமெனின், வாக்கிற்கும் மனதிற்கு மெட்டாததென்பதாம். அதுசாதிமுதலிய னவற்றதுஞ், சுகதுக்க முதலியனவற்றில் வேறுனது மாதலின் மனோவாக்குக்கெட்டாததாம். அதனுல்தான் ஆத்மாவை குருவானவர் மகாவாக்கிய இலக்ஷணுவிரு த்தியினுல், (குறிப்பால்) தெரிவிக்கின்றனர். அஃதெவ் வாறுகூடுமெனின், தசமன்கதையில் பத்தாமவனைக் காட்டாமற்காட்டியதுபோலும்; தன்கணவனுடனநுப வித்தசுகத்தைத் தாய் மகளுக்குச் சொல்லாமற்சொல் லிக்காட்டினதுபோலுமாம். ஆதலின், வேதமாதா வஸ் துவாக்குக்கும் மனதுக்கும் எட்டுமெட்டாதென்றது.



திருவிளையாடற் புராணம்.

"எல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்து காட்டிச், சொல்லாமற் சொன்னவரை நினையாம னினைந்துபவத் தொடக்கை வெல்வாம்."

தாயுமானசுவாமிகள்.

"மனவாக் கெட்டாச் சித்துரு வாய்நின்ற வொ ன்றை"

சிவவாக்கியர்.

"வாக்கினுல் மனத்தினுல் மதிக்கொணுத சோதி யை, பார்க்க வேணுமென்றலோ பல திசைக ளோடு வீர், நோக்கிலாத நோக்கை நோக்கி நோக்கி நிற்க வல் லிரேல், நோக்கிலாத நோக்குவந்து நோக்கநோக்க நோ க்குமே."

திருமந்திரம்.

"முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்கா
ளகத்திற் கண்கொண்டு காண்பதே யானந்த
மகட்குத் தாய்தன் மணாளனே டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்கனே"

ஈண்டு வாக்குக்கெட்டாதென்பது, சொல்லின் சத்தவிருத்தியினு லறியப்படாதென்பதும், வாக்குக்கெட்டுமென்பது, மகாவாக்கியத்தின் இலக்ஷணவிருத்தியினு லறியப்படுமென்பதாம். மனதுக்கெட்டாதென்பது ரசோகுண தமோகுணத்துக் கெட்டாதென்பதும், மனதுக்கெட்டுமென்பது, சத்துவகுண மனதுக்கெட்டுமென்பதாம். ஆதலின் குருவுபதேசத்தி னுதவியால் சீடன் ஆத்மாவையறியாமலறிவான். ஆசிரியர்கூறிய மகாவாக்கியத்தை சிரவண மனனுதியால் விருத்தியானு லம் மகாவாக்கிய அருத்தமாகவேயிருப்பன். அவரநுக்கிரகித்த வொருசூக்ஷ்மமானகுறிப்பு சீடனுக்கு நன்ருக விளங்குமானு லதுகாட்டுதற்கரிதாயினும் தற்போதமிழந்த சுத்தசத்துவமான சூக்குமவிருத்தியினு லுணரலாம். அஃதாவது, தன்னையறியப்பட்டதற்கும் அறியப்படாததற்கும் வேருயறிவதாம். மேலும், நானுரென விசாரித்துத் தத்துவங்களையெல்லாம் நானல்ல நானல்லவென நீக்கி சேடித்துநின்ற அறிவு வொன்றிருத்தல்வேண்டும். அவ்வறிவு அசங்கமுஞ் சுயஞ்சோதியுமாதலின் மற்ெருருசோதிவேண்டாது தன்னைக்காட்டாது காட்டும். மேலும் ஒரு நூதனமாக விவாகமானபெண்ணை இவனு வுன்புருஷன், இவனு வுன்புருஷனென மற்றபெண்கள் கேட்டபோது, அல்லாதவர்களைக் குறிக்குங்கால் அல்ல அல்லவெனச் சொல்லிவந்து, தன் கணவனையே குறித்துக்கேட்டபோது, அல்ல ஆமெனச்சொல்லாது தலைகுனியும்போது அவனே அவள் புருஷனென மற்றையர்கொள்ளல்போல தானுன தன்னையுணர்வதுமாம்.



### சிற்றம்பலநாடிகள்.

"மொழியா லுரைக்கிற் குறிக்கப் படுமென்று மூதறிவால், விழியா லெனக்களித் தான்விழித் தேனின்பமேலிட்டதே."

### சசிவர்ணபோதம்.

"கரணத்திர ணிற்பினு மப்பொருளைக்
காணக்கிடை யாதவை கையறவே
மரணப்படி னும்மது கண்டுகொளும்
வழியில்லை யெனும்படி நீமதியே."

### தாயுமானசுவாமிகள்.

"அறியுந் தரமோ நானுன்னை யறிவுக் கறிவாய் நிற்கையினுற், பிறியுந் தரமோ நீயென்னைப் பெம்மானே."

"அருளா லெவையும்பா ரென்றான் அத்தை யறியாதே சுட்டியென் னறிவாலே பார்த்தேன் இருளான பொருள் கண்ட தல்லால் கண்ட வென்னையுங் கண்டில னென்னடி தோழி."

"வாதனை விட்டுன் னருளின் மன்னி னல்லால் வேறுமொரு, சாதனை தானுண் டோநீ சாற்றாய்."

கைவல்லியநவநீதம்.

"தன்பதி யல்லாப் பேர்க டமையல்ல னல்ல னென்றாள், அன்பனைக் கேட்ட நேர மவள்வெட்கி மௌன மானாள், என்பது போல நீக்கி யிதன்றிதன் றெனச்சே டித்த, பின்பரப் பிரமந் தன்னைப் பேசாமற் காட்டும் வேதம்"

"எல்லாங்கண் டறியு மென்னை யேதுகொண் டறிவே னென்று, சொல்லாதே சுயமாஞ் சோதிச் சுடருக் குச் சுடர்வே றுண்டோ, பல்லார்முன் றசமன் றன்னைப் பார்ப்பதுந் தனைக்கொண் டேதான், அல்லாமற் பதினென் றானு மவனிடத் துண்டோ பாராய்"

ஆதலின் தன்னையறிவது குருவருளை முன்னிட் டேயன்றி கேவலந் தன்முயற்சியாலாவது பிறர்செய்



யும் முயற்சியாலாவது வாகாததாரியமே. மேலும் பால் சமுத்திரத்திலொருவன் தன்கழுத்தளவு பாலில் நின்றுந் தான் பாலிலிருப்பதைமறந்து தாகம்தாகமென்றழுது வருந்தும் அவிவேகியைப்போல் ஜீவர்கள் சச்சிதானந்தமாயிருந்து மதையறியாது இன்பம்வேண்டும் இன்பம்வேண்டுமென்றுநினைத்து பிறப்பிறப்பை யடைந்து அவிவேகத்தால் வருந்துகிறார்கள். தெய்வகதியால் பாலிலிருக்கிறோமெனக்கண்டு தானே யெளிதில் தாகந்தீர்த்துக்கொள்வதுபோல, ஒருவன் அனேகசன்மங்களிற்செய்த புண்ணியவசத்தால், ஆத்மவிசாரஞ்செய்து வந்து தேடுதலற்றுநின்றால் தெய்வகதியால் தான் சிதாகாய சொரூபனென யெளிதிலறிவன். ஆதலினவன் வஸ்துவையுணர்ந்ததினாலுபசாந்த மடைகிறான். அடையமுடியாதெனின் ஞானிகளில்லையாதல்வேண்டும். அதனாலவர்கள்செய்த சாத்திரமும் பொய்யாதல்வேண்டும். ஆதலின் அநுபவமின்றி யப்பரவத்துவைக் கண்டதாகக் கூறுபவரும், கூறக்கேட்போரும், சாத்திரங்கற்றுணர்ந்தவித்துவான்களும், அவ்வுத்துவைக் கண்டவராகார்.

ஆன்றோர்.

"கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்"

## தாயுமானசுவாமிகள்.

"தேடு தலுமற் றவிட நிலை யென்ற மௌனியே"
"அண்டமுமாயப் பிண்டமுமா யளவிலாத வாருயிருக் கோருயிரா யமர்ந்தா யானுல், கண்டவரார் கேட்டவரா ருன்னுலுன்னைக் காண்பதல்லா லென்னறிவாற் காணப் போமோ"

## சடகோபர்.

"ஆணல்லன் பெண்ணல்ல னல்லா அலியுமல்லன் காணலு மாகா னுளனல்ல னில்லையல்லன்"

சீ—உள்ளதான்மா வொன்றேயெனக் கூறினீர்; அது பலதேகங்களிலும் பல ஜீவர்களாயிருப்ப தெவ்வாறு கூடும். ஜீவர்களவ்வொறே ஆன்மாவுக்கு பின்னமா அபின்னமா ?

கு.—மலசகிதத்தால் ஆத்மா பலஜீவராக விளங்குகிறது. மலரகிதமானுல் ஜீவர்களெல்லாம் ஒரேயான்மாவாம். அறிவு தானல்லாததைத் தானெனக்கொண்டதால் ஜீவனென்கிற கற்பிதநாமத்தைப்பெறுகிறது; அச்சீவத்துவம் ரச்சுசர்ப்பம்போல மித்தையே; ஆதலின்



ஆன்மாவொன்றுதான். எப்படி ஆகாசமொன்ருயிருந்தும், கடமுதலிய வுபாதியால் கடாகாசம் மடாகாசமென வழங்குவதுபோலும், ஒரேசந்திரன் பல நீர்பாண்டங்களில் பிரதிபலித்தலால் பலவாகத்தோற்றுதல் போலும், ஒரேவிளக்கு கண்ணாடிபேதத்தால் பலவாக விளங்குதல்போலும், ஒரேஆத்மா அவித்தையல்லது அந்தக்கரண பேதத்தால், பலவாயிருப்பதாகத் தோற்றுகிறது. அவ்வாறிருப்பினும் ஆத்மாபலவன்று, ஒன்றேயாம். பலவாகத் தோற்றுவதெல்லாம் சித்தத்தின் விகற்பமேயல்லது வேறன்று. அச்சித்தம் அகண்டபாவனையைச் செய்யச்செய்ய ஆன்மாவுக்கபின்னமான பிரமத்திற் சாந்தியுறும். அப்போது பின்னதோற்றமொழிந்து அபின்னமாகவே விளங்கும் சிருஷ்டிக்குமுன், ஆன்மா வொன்ருயுஞ் சத்தாமாத்திரமுமிருந்து, தனது மாயாவிலாச வுல்லாசசங்கற்பத்தால், சமுத்திரத்தில் அலை நுரை திவலைகளுண்டா யதிலேயே வொடுங்குவதுபோல, ஆன்மாவில் ஜகஜீவபர முண்டாய், மீண்டுமவை யதிலேயே வொடுங்கி பரமாத்மாவேயாகின்றன. வேதாந்தசம்பிரதாயந் தெரிந்தவர்களுக்குச், சீவர்கள் பின்னமா அபின்னமாவென்று கேட்பது ஆச்சரிய

மாகத்தோற்றும். புத்திமானுகிய நீ, இவ்விசாரத்தைச் சிந்தித்துப் பார்ப்பாயானல், ஆன்மாவுக்குச் சீவர் ள் கற்பனையில் பின்னமென்றும், யதார்த்தத்தில் அபின்ன மென்று முணருவாய். தேகாதீதமாயு மொன்றேயாயு முள்ளஆன்மா சாக்ஷிமாத்திரமாயிருப்பதையறியாது, பிரவிர்த்தி நிவர்த்தியுடையவனுக்குகிறுர்கள். இவ்வா திருப்பதை யுணர்ந்து சாக்ஷிமாத்திரமாய் நிற்பவன், சுக துக்கங்களில் வருந்தாது பரமாய்ச் சர்வத்திற்கும் வில க்ஷணமாயிருப்பன். மேலும் புண்ணிய பாபா நுசாரமா யடைந்திருக்கிற வித்தேகத்தை நானென்றெண்ணும் பிராணியே ஜீவனும் அத்தியாசத்தால் தேகமேவான்மா வென்றெண்ணித் தன்னைவிடயா நுபவியாக ஜீவன் கண்டு மயங்கி மோகிப்பன். அச்சிவனது யதார்த்த சொரூபசந்நிதியில், தேகேந்திரியக் கரணங்கள் விவகரித் தித் தான் சாக்ஷியாயிருப்பன் மேலும் மண்ணில் கட மென்னும் பெயருங், கனகத்திற் குண்டலமென்னும் பெயரும், சுத்திகையில் வெள்ளியென்னும்பெயர் கற் பிதம்போல, பிரமத்தில் ஜீவனென்னும் பெயர் கற்பிதமா யிருக்கிறது. பரிபூரணமும் ஏகமுமாயிருக்கும் ஆத்மா, கற்பிதமான அநாதிமாயாவசத்தினல், அந்தக்கரணங்



களுள் ஜீவரூபமாகப்பிரவேசித்து அபிமானித்துத் தேக பேதங்களை நான் எனதென அனேகமாக விளங்குகிறது. அந்த வொரேஆத்மா அத்தியாசத்தால் பிரமன், விஷ் ணு, உருத்திரனென்னும் ஈசபேதமாகவும், எழுவகைத் தோற்றமான எண்பத்துநாலுலக்ஷ மச்சுபேதங்களினுஞ் ஜீவபேதமாகவும், சுவர்க்க நரகமுதலிய லோகபேதமாக வுமிருக்கிறது. அவ்வாத்மாவே அவத்தாவயமாகாது சாக்ஷியாகவுமிருந்து தன்னை சொப்பிரகாசமாகவும், மல ரகிதனுகவுங் காணும்போது கூடத்தனெனவும், தன்னை மலசகிதத்தால் தேகவளவாகக் கண்டபிமானித்து, அவத்தாவயமானபோது ஜீவனெனவும், உலசகாரண மாய் நின்றபோது ஈஸ்வரனெனவும், தானேமாத்திர மாய் நின்றபோது, பிரமமெனவுஞ் சொல்லப்படுகிறது. பலவாகக் கூறுவதெற்றுச்கு, வானசந்திரன் போல்வது ஆன்மாவென்றும், ஜலசந்திரன் போல்வது ஜீவனென வும் நீயறிந்து அனுமதிபெறுவாயாக.

கைவல்லியநவநீதம்.

"அகமெனு மான்மா பூரண மேக மநேக விதஞ்சீவர் அகமெனு மந்தக் கரணே பாதிக ளளவிலே யாதலினல்"

## திருமந்திரம்.

"சீவ னெனச்சிவ னென்ன வேறில்லை
சீவ னார்சிவ னாரை யறிகிலர்
சீவ னார்சிவ னாரை யறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட்டிருப்பரே"

சீ—சுவாமி, ஞானமடைந்தால் ஆகாமிய சஞ்சித மென்கிற வினைகளை யநுபவிக்காது தொலைப்பதெப்படி?

கு—அப்பா, பல ஜன்மங்களுக்கு விதைபோன்ற மகாபாதகங்களைச் சென்றுபோன அநேகமாயிரம் ஜன்மங்களில் ஞானி செய்திருந்தாலும், அவையாவும் பஞ்சின் தொடர்நுனியில் தீப்பட்டாற்போல, தத்துவ ஞானத்தால் விரைந்துகெடும். அவர் ஜீவதசையிலிருக்கும்போது நன்மை தீமையோ அநுபவித்தே தீரவேண்டும்; பிரார்த்தவினை யாராயிருப்பினு மநுபவித்தால் தானொழியும். ஞானி யபிமானமற்று ஆத்மாவில் கருத்ருத்வ பிராந்தியில்லாததினாலே, அவருண்மையில் யாதொரு கருமமுஞ்செய்வதில்லை.



## வாசுதேவமனனம்.

இவ்வணஞ் சஞ்சி தாதி யாவையும் விசாரஞ் செய்திங்
கவ்வண மகங்கா ராதிக் கல்லது சாட்சி யான
தவ்வலி றனக்கில்லென்று சற்குருவருளாற் பார்ப்போன்
செவ்விய சீவன்முத்த னெனவேதந் திகழ்த்துமன்றே"

ஆதலின் ஆகாமியமில்லை. ஆனாலவரது மனோவாக்குக் காயங்களால் நிகழும் புண்ணியத்தை யவரைப் பூசிப்போரும், பாவத்தை யவரையிகழ்பவருங் கொள்வர். (ஆகாமியகருமமாவது, இந்த தேகம் வந்த பதினான்குவயது முதற்கொண்டு செய்யுங்கருமமாம். அது சஞ்சிதத்துடன் சேருங்கருமம். சஞ்சிதகருமமாவது, பூர்வஞ் செய்தநுபவித்ததுபோக, மிகுதி யநுபவிக்கவேண்டிய கருமமாம்; அல்லது, சன்மாந்திரங்களில் செய்து அநுபவத்திற்கு வாராத கருமமாம். பிரார்த்தகருமமாவது பூர்வகருமபலனாக விந்ததேகமிருக்குமளவு மநுபவித்து வருகிற கருமமாம்; அல்லது, சஞ்சித கருமத்திலொரு பகுதியா யுடம்புவருவதற்குஞ் சுகதுக்கமநுபவிப்பதற்குங் காரணமாயுள்ள கருமமாம்.)

சீ—தான் செய்தது தானநுபவியாது ஞானிக
ளுக்கு விலகுமென்பது நன்கு விளங்கவில்லை, அருள
வேண்டும்?

கு—சொப்பனுவத்தையில் செய்தபிரமஹத்தி
தோஷத்ைதப்பற்றி மிகவருந்தியிருக்கு மொருவன்
அவன் சாக்கிரத்தில் விழித்தபோது, அந்த ஹத்தி
தோஷ மெவ்வாறில்லையோ, அவ்வாறு இச்சொப்பன
பிரபஞ்சத்தினின்று சொரூபத்தில் விழித்துக்கொண்ட
வித்துவான்களுக்குச் சஞ்சிதவினையின் சம்பந்தமில்லை.

## கைவல்லியநவநீதம்.

“பஞ்சினை யூழித்தீப்போற் பலசன்ம விவித வித்
தாஞ், சஞ்சித மெல்லா ஞானத் தழல்சுட்டு வெண்ணீ
ருக்கும்”

சீ—உலகம் பொய்யென கூறுகின்றுர்களே, அஃ
திருப்பதினுலன்ருே பஞ்சகிருத்தியங்களும் விசாரணை
முதலியனவும் நடந்தேறி வருகின்றன; பொய்யென்ப
தெப்படி பொருந்தும்?

கு—கடத்துக்கு மண்போல, உலகத்துக்கு பிரமம்
உபாதான காரணமாயிருக்கிறது. மேலும்,மண்ணிலுண்



டாகிய கடம் மண்மயமாயிருத்தல்போல, சித்ரூப பிர
மத்திற்ருேன்று முலகமுஞ் சித்ரூபமேயாம் பிராந்தியி
ஞல்கானனீர் சத்தியமாகத்தோற்றுவதுபோல, அஞ்
ஞானத்தால் பிரமத்திலுலகஞ் சத்தியமாகத் தோற்று
கிறது தெரிந்தவிடத்துக் கானனீர்போல் உலகம்பொய்
யாகின்றது; கானனீர் பொய்யென்றறிந்தவிடத்துந்
தோற்றுவதுபோல வுலகம் பொய்யென்றறிந்த விடத்
துந்தோற்றுகிறது. மண்ணைத்தவிரகடமில்லை; அது முக்
காலத்தும்பொய், அப்படியிருந்து மதுவிலைகொடுத்து
வாங்கல் முதலிய விவகாரங்களுக் குரித்தாயிருப்பது
போல, முக்காலத்தும் பொய்பாயுள்ள விவ்வுலகமும்,
பஞ்சகிருத்திப முதலியவிவகாரங்களை யேற்பதற்குரித்
தாயிருக்கிறது. மேலும் ரச்சுவில்தோற்றும் அரவுக்கு
அதிஷ்டானத்தை விசாரித்தால், மருள்வடிவமான
அரவுநீங்கி ரச்சுவேயாய், ரச்சுவுக்கன்னியமில்லாத
தேபோல, பிரமத்திற்ருேன்றும் இத்துவிதவுலகுக்கு
அதிஷ்டானத்தை விசாரித்தால் மருள்வடிவமான வுல
கம் பொய்யாய் ஆன்மாவுக்குபின்னமான பிரமமேயாய்
விளங்கும். ஆதலின் துவித தோற்றத்துக்கு பேதபுத்தி
தான் காரணம் மேலும். அதிஷ்டானத்தைத் தவிர

அணுவும் ஆரோபமில்லையாகையால் ஆரோபிதஜகம்
அதிஷ்டானமான பிரமமேயாம். எனவுரமாக நிச்சயித்
தா விதுகாறும் பேதமாகத்தோற்றிய ஜகம், பரம், நீ
நான் என்னு மயல் துயில்வோன் கையிலுள்ள பொருள்
சுயமாய் நீங்குவதுபோல தானேவிலகும். நீ நீக்கமுய
லும்வரையி லவைநீங்காவென்றறி. மேலுமிச்சாக்கிர
வுலகஞ் சொப்பனத்திலில்லை; சொப்பனங் காரணமான
சுழுத்திபிலில்லை. இவ்வாறு வுலகம் விபசாரத்தையடை
வதினாலே ஜகத்சத்தியமாகாது. ஆதலினது ஆன்மாவினி
டந்தோன்றி தோன்றி மாய்வதே சுபாவம். அவஸ்தாதிர
யத்தைக் கவனித்துப் பார்த்தா லிச்சகலமும் பிரமமாக
வே விளங்கும், அவஸ்தாதிரயத்தி லுலகம்விபசாரமடை
வதை கவனியாதுங் காரணகாரிய வியல்புகளை யாரா
யாது முள்ளவர்தான் உலகத்தை சத்தியமென்பர்.
அவர் வார்த்தையை நீ நம்பாதே. இம்மூவவத்தையும்
மாயையின்கற்பனை யாதலின் மித்தையே. அவத்தை
களில் ஆங்காங் கிருந்தநுபவித்த அறிவாகின்ற திருஷ்
டா, குணாதீதமும், நித்தியமும், ஏகமுமான, சிதாத்மா
வாம் ஆதலின், வாஸ்தவத்தில் காலத்திரயத்திலும் பிர
பஞ்சமில்லை; காணப்படுந்திரிசியமெல்லா மழிந்துபோவ



தால், திருக்குதிரிசிய விசாரஞ்செய்து, திருக்குவைத் த
விரத் திரிசியமில்லையெனத் தெரிந்தவனுக்கு, மேற்கூறிய
விஷயம் நன்றாய்த்தெரியும் அதில் சந்தேகப்படாதே.
மேலுஞ், சுழுத்தியில் மனம் தன்காரணமாகிய அவித்
தையில் லயமாயிருப்பதா லாங்கணுவளவேனும் உலக
மில்லை. இல்லையாதலின் தோற்றுவதில்லை. இச்சாக்கிரத்
தில் மனமிருப்பதால் சகலமுமுண்டுபோல் தோன்றுகி
றது. இதனால் மனதைத்தவிர வுலகமில்லையாம்; அஃதா
வது, சித்தமென நினைப்புண்டானபோது சித்தே சித்த
மாகத் தோன்றியதனால் ஜக ஜீவ பர தோற்றமுண்டாவ
தால், சித்தைத்தவிர வுலகமில்லை யாதலின் பொய். இதை
யறிபவன் விரைவாக ஞானியாவன், சொப்பனத்திலுமப்
படியே. ஆகவே, சாக்கிரவுலகத்துக்குஞ் சொப்பனவுல
கத்துக்கும் வித்தியாசமேயில்லை. சொப்பனவுலகம் விவ
கார சாமர்த்தியமுடையதாயினும் அநுபவிக்கப்படுவ
தாயினு மதுபொய்யே. அதுபொய்யென்பது லோகப்
பிரசித்தமன்றோ, அப்படியே யிச்சாக்கிரவுலகமுமாம்;

### கைவல்லியநவநீதம்.

"சொற்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்வது பிழையானால், அற்ப மாயையிற் றோன்றிய சகங்களை யசத்தெனல் பிழையாமே"

உலகுக்குவடிவம் உண்மையிலாராயில் நாமரூபமே யாம்; நாமரூபத்தைவிட்டால் உலகமென்பதில்லவே யில்லை. அஃதெவ்வாறெனின், பூஷணாதிகளை நோக்கி னவற்றின் காரணமான பொன்தோன்றுவதில்லை: காரணமான பொன்னைநோக்கினாலோ, அதன்காரியந்தோன்றுவதில்லை. மேலும் உலகங்காரியவடிவமாயிருத்தலின் அதற்கு இடம், பொருள், காலமிவைவிசாரிப்புழி, அனைத்து மல்லவில்லையென எகுதலால் மித்தையாம் கடாதிகளான காரியங் காரணமான மண்ணைக்காட்டிலும் வேறில்லாமையால், கடாதிகள் தோற்றப்பொருளன்றி வாஸ்தவப்பொருளன்றாம். அதுபோல, பிரபஞ்சமாகிய காரியங், காரணமான பிரமத்தைக் காட்டிலும் வேறில்லர்மையால் உலகந்தோற்றப்பொருளன்றி வாஸ்தவப்பொருளன்றாம். அஃதாவது, அனாத்ம சொரூபமான பிரபஞ்சமெல்லாம், ஆத்மசொரூபத்தில் கற்பித



மாம். வாஸ்தவத்தில் பொருளல்லவாதலினிதனை பொய்யென்றது. மித்தையாவது, உளதுபோல்தோற்றி விசாரிப்புழி யில்லையாதல். எதுபோலெனின், கானலில் நீரும், சொப்பன வுலகமும் ஆகாயத்திற் கருமையும், கட்டையிற் கள்வனைப் போலவாம்.

### சொரூபவுந்தீயார்.

"தற்பணச் சாயல்போற் சைதன்னி யந்தன்னி
லிப்பிர பஞ்சமென் றுந்தீபற
இல்லை யிதுவென்றே யுந்தீபற"

### கைவல்லியநவநீதம்.

"கானனீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க னூர்
வானமை கயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின் கோடு
பீனமாந் தறிபு மானிற் பிரபஞ்ச மெல்லாம் பொய்யே
ஞானமெய் மகனே யுன்னை நம்மாணை மறந்தி டாதே".

### தாயுமானசுவாமிகள்.

"உண்டுபோ லின்று முலகைத் திரமெனவுட்
கொண்டுநான் பெற்றபலன் கூறாய்"

"பொய்யுலகும் பொய்யுறவும் பொய்யுடலும்
பொய்யெனவே, மெய்யகினே மெய்யெனவே மெய்யுட
னே காண்பேனோ"

"பாராதி யண்டமெலாம் படர்கானற் சலம்போற்
பார்த்தனையே முடிவினின்று பாரெதுதா னின்றது"

"ஞாலத்தை மெய்யெனவே நம்பிநம்பி நாளுமென்றன்
காலத்தைப் போக்கியென்ன கண்டேன்"

"பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தி யென்
புந்திக்கு ளிந்திர ஜாலஞ், சாதிக் குதே யிதனை வெல்ல
வுமுபாய நீதந்தருள் வதென்று"

"வருவான் வந்தேனெனல்போன் மன்னியழியுஞ்
சகத்தைத், தெரிவாக வில்லையென்ற தீரம்"

## திருக்கு திரிசிய விவேகம்.

"காரணங்கண் டாலொழியக் காரியமீ தென்றறியோங்
காரியமே காரணமாக் காணுமே—யோரில்
அறிவை விளக்கிக்கொண் டப்பாலே காணில்
வெறும் பொய் யுலகாய் விடும்"



சீ—பொய்தோற்றமான வுலகமெனக்குத் தோன்
றாதிருக்க வுபாயம் அருளவேண்டும்.

கு—கடத்துக்கு மண் வுபாதானம்போல, உல
குக் குபாதானம் பிரமமே; ஆதலின் உலகமுழுமையும்
பிரமமேயென்றும், நானே அந்தப்பிரமமென்றும் நிச்
யித்து மாறாதிருப்பாயானா லுலக முண்மையென்கிற
பிராந்தி நீங்கித் தோற்றமுமொழியும். அப்போது இந்
திரியமும் மனமு மொருவேலையுஞ்செய்யா. இந்திரியங்
களும் மனமும் வேலைசெய்யாதபோது விஷயத்தோற்
றம் வருவதில்லையாம். புத்திகற்பிதமானவுலகம் மாயா
மாத்திரமென்றறிந்து அதனை கவனியாதொழிக. மே
லும், உலகம் பாவனைமாத்திரமேயுள்ளது; அது பிரமத்
துக்கன்னியமல்ல உண்மையுமல்லவென வுனக்குத்தீர்
மானித்துக்காட்டி யென்னிலையிலிருக்கக் கூறியுள்ளதோ
ஆங்கு நித்திரையின்றி அகம்பிரமமென்கிற சிந்தனை
மறவாதும், பேதமாகத் தோற்று மிச்சக ஜீவபரம்
ஆன்மாவுக்கபின்னமே யென்னுந்திடநிச்சயத்துடன்
அப்பியாசித்திருந்தா லுலகந்தோன்றாது. உலகம் மித்
தையென்னும் பாவனை குறையாதும், பிரமம் சத்திய

மென்னும் பாவனை யதிகரித்துத் தன்மயபாவனை வளரு மானல் காண்பான் காக்ஷி நீங்கும். ஞானநாட்டத்தி லுலகந்தோன்ருது, உலகநாட்டத்தில் ஞானந்தோன் ருது அஃதெவ்வாறெனின், யானைவாகனத்தைக் காண ப்போன வொருவ னவ்யானையினுருவங்களைக் கவனிப் பானேயன்றி, அவ்யானை யென்னமரத்தால் செய்துள்ள தென அவனுக்குத்தோன்றுமா. தோன்ருது. மற்ருெரு வன் அவ்யானையினுருவ மென்னமரத்தினற் செய்துள தெனக் காணப்போனவன், மரத்தைக்கீறி பார்ப்பானே யொழிய, அதனதுவுருவ மவனுக்குத் தோற்ருதுபோல வாம். அன்றியும் சூரியனையே கொஞ்சநேரம் நோக் கிக்கொண்டிருந்த வொருவ னதைவிட்டு வுலகத்தை நோக்கின், அவனுக்கு சூரியனது வொளிமேலீட்டா லுலகந்தோன்ருதபோது; நீ ஞானசூரியனையே சதாநிலை யிற்பிரியாது நோக்கியிருந்தால், ஞானவொளியின்மே லீட்டால் வுலகந்தோன்றுமா. மேலும் நீ ஆநந்தசொரூபி யாதலின், உலகம்தோன்றினுலென்ன தோன்ருதிருந்தா லென்ன. நீ ஆநந்தசொரூபனென தெரிந்து நிஷ்காமனு யிருப்பதே வுபாயமாம்; பிராரத்தமுடியுவரையும் ஆத் மாவை யிடைவிடாதறிந்துகொண்டும், சிற்சடமெல்



லாம் பிரமமேயெனத்தெரிந்து நீ சும்மாயிருந்து காலத் தைக் கழிப்பாயாக.

### குமாரதேவர்.

"தோன்றி விளங்கும் பொருளெல்லாந் தொல்வே தாந்த விசாரணையில், ஊன்றி நோக்கி யநுதினமும் யூக மதனிற் பரிசுபித்தால், தோன்றி விளங்கு மறி வொன்றே சொன்மாத் திரமாய் விடுமுலகம், ஊன்றி நோக்கா தவர்கட்கே யுளதுபோலத் தோன்றியிடும்"

### தத்துவநிசானுபோகசாரம்.

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே"

"பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தனுகர ணாதிகள்
தன்னின் மறைந்தது தனுகர ணாதியே"

சீ—பொய்யானவுலகந் தோற்றுவதற்கும், மெய்யான பிரமந் தோற்ருதிருப்பதற்குங் காரணம் யாது?

கு—ஆத்மானுத்ம விசாரணை செய்து மனம் தத்துவத்தில் நிலைக்காமையே காரணம். கும்பம் மண்மயமாதல்போல வுலகுஞ் சின்மயமாம். அப்பிரமத்தினுண்மையறிந்துகொள்வதற்கு ஞானமில்லாமையாலும், பொய்த்தோற்றமான வுலகத்தையறியும் அஞ்ஞான மொழியாமையினுலும், பிரமஞ் சின்மயமாய் விளங்காது வுலகமாகத்தோற்றுகிறது. மேலும் இரஜ்ஜுவானது ஞானிகளுக்குப் பயத்தைத்தாராததும், அஞ்ஞானிகளுக்குச் சர்ப்பரூபமாய் பயத்தைத் தருவதுமாகத் தோற்றுவதுபோல, உலகம் ஞானிகளுக்குச் சச்சிதாநந்த பிரமமாகவும், அஞ்ஞானிகளுக்கு அநிர்தஜடதுக்கமாகவுந் தோற்றுகிறதென்றறிவாயாக.

**ஆன்றோர்.**

"தன்னால் விளையுஞ் சகசீவபரம்
தன்னு லழியுந் தனதாம் விழியால்"

சீ—எதுகாறு நிலைபிற்பிறியாதொழுக வேண்டும்?



கு—எதுகாறுங் காண்பான் காக்ஷி யுன்னைவிட்டகலவில்லையோ, எதுகாறும் பிரமத்திற் சித்திரதீபம்போலுன்மனம் நிற்கவில்லையோ, எதுகாறும் பேதநோக்குஞ் சஞ்சலமும் விட்சேபமு முன்னைவிட்டொழிந்து அதனுலுன்மனம் உபசாந்த மடையவில்லையோ அதுகாறுந் திடமானமனதினு விடைவிடாது சமாதி யப்பியாசஞ் செய்தால் திரிசியமெல்லாந் திருக்கேயென காண்பதானஞானமடைவாய்.

**சந்நிதிமுறை.**

"அலையிலாத சாகரம்போ லனிலஞ்சேரா விளக்கதுபோ, லருங்கலிரும்பென் சமமாகி யானதராசினுனியதுபோ"

**கைவல்லியநவநீதம்.**

"எத்தனை நாண்ஞா தாவு ஞானமு மிருக்கு முன்பால், அத்தனை நாளும் வேண்டு மப்பாலோர் செயலும் வேண்டா"

ஞானவாசிட்டம்.

"தண்டாத பரிசயத்தாற் சிலகாலத்திற் ருவுமன நின்மலமாய்ச் சசிபோ னிற்கிற், பண்டாய வநுபூதி ம்ய

மாய்த் தானே பாக்கியவான் களுக்கிந்தப் பார்வை தோன்றும்''

மேலும் மனம்போனவழியே நீ போகாம லுன் வழி மனமெப்போது வருமோ அதுவரையும் உள்நாட்டம் பெற்று, வெளிநாட்டம் விட்டிருக்கவேண்டும். இன்றேலனர்த்தமாய் மோகத்தாலகந்தையு மதனால் பந்தமுமுண்டாய்த் துன்பப்படுவாய்.

சீ:—அப்பியாசிகளுக்கு தூக்கமும் ஏக்கமுமாகாவென்று சொல்லுகிறதாலே வவற்றை யொழிக்க வுபாயம் யாது?

கு—தூக்கமானது சகலஜீவர்களுக்குத் தாமதகுணத்தால் பொதுவாய்வருவதே; அது பலவாறாக வுழைத்து வடம்பலுப்படைதலினாலும், வயிறுநிரம்ப வுண்பதினாலுந் தூக்கம் மிகுதியாகவுண்டாகிறது. இளைப்படைந்தஜீவன் சுகமடையவிரும்பி யச்சுகஞ் சுழுத்தியவத்தையிலிருப்பதால், ஆங்கதனை யடையவிரும்புவது சகஜம். ஆனாலாங்கநுபவித்த சுகமின்னவாறிருந்ததென அறியாமற் றன்னையுமறந்து தூங்குவதாலது



மூடச்சுகமே. விசாரதரர்களாய் நிட்டைசெய்யும் புருஷர்கள், திரிசியத்தில் அழுத்தமான நாட்டமின்றி, ஆசையின்றி, சம தமாதி குணங்களைப்பொருந்தி, தேகோகபாவமின்றி, தேசமலுப்படையும்படி செய்யாது. மனதை யிந்திரியவாயிலாக செல்லவொட்டாது தடுத்து; மனோலயத்திற்காக வுழைப்பார்கள். ஆதலினவர்கள் தனியாகவிருந்து, (ஜனக்கூட்டமற்றவிடத்திலே) தனியாகவிருந்து (சகலகேவலமற்றவிடத்திருந்து) ஒழுகுவார்கள்.

ஆன்றோர்.

"இரவு பகலில் லாவிடத்து யேகமாய் நின்றநின்
னருள்வெள்ளமீதிலே,யானென் பதற கழலு வகையென்
கொல்''

அவர்கள், மற்றையர்போல வயிறு நிரம்பவுண்ணார்கள்; நாக்குருசி கருதார்கள், கிடைத்தமட்டில் திருப்தியோடு வுதராக்கினியினிமித்தமுண்பார்கள். அதுவும் அரைவயிறன்னமும், கால்வயிறு ஜலமுமாக நாளொன்றுக்குப் பகலிலொருபொழுதுண்பர்;

நிட்டாநுபூதி.

"அருந்துபோனகமும் பாதியா நீரு மதனினும் பாதிய தாகப், பொருந்துநா ளொன்றுக் கொருபொழு தருந்தல் புரிகமற் றெவ்விடத் தெனுந்தான்"

கைவல்லியநவநீதம்.

"அறுசுவையின் குணங்குற்ற மசுத்தஞ் சுத்த மபத்தியம் பத்தியமெனவூ ணுய்ந்தி டாமல், பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத் தீப்போற் போகங்கள் புசிப்பன்மா போகி யாகும்."

மேலும் மிதமாகத் தூங்கி யஃதாவது இரண்டரை நாழிகையே தூங்கி மற்றிரவெல்லாந் தூங்காமற்றூங்கி யதாவது அறிதுயில்செய்து அல்லது வுணர்வோடுமுறங்கி சுகமாகவிளங்க முயலுவார்கள் அநேக சன்மங்களிற்செய்த நிட்காம புண்ணியத்தாலுங்,குருவினுடைய யருளினுலுந் தேவா நுக்கிரகத்தாலுஞ் சமாதியினுலும் பிரமமுந்தானு மொன்றேயெனவறிந்த அபரோக்ஷ ஞானத்தாலும் உலக அதீதராய் விளங்கும் புருஷர்களுக்கு தூக்கம் நீங்காமல் நீங்கும். தேகாபிமான



ள்ளளவும் நித்திரையை யொழிப்பதரிது, அதனுலி ழுத்தியடைவதில்லை. நிட்டைபழகுபவர் ஆத்மநோக்கில் தூக்கந்தவிர்ந்தவரும், தேகநோக்கில் சிறிது தூக்கமுடையோருமாயிருப்பர்;

தாயுமானசுவாமிகள்.

"காய நிலையல்ல வென்று காண்பா ருறங்கு வரோ தூய வருட் பற்றுந் தொடர்வார்:"

இந்தநித்திரையை யொழிக்குமுபாயும் யாதெனின், அப்பியாசஞ்செய்யும்போது தூக்கம்வந்தாலும் விழித்தவுடன் மகாவாக்கியத்தை மறவாது சிந்தித்து, குரு கூறிய லக்ஷியத்தில் நிறுத்தின் தூக்கமொழியும். இப்படி செய்துவருபவருக்கு நனவிற்சுழுத்தி யெளிதிலுண்டாம்.

தாயுமானசுவாமிகள்.

"தூங்கிவிழித் தென்னபலன் றூங்காமற் றூங்கி நிற்கும், பாங்குகண்டா லன்றோ பலன்காண்பேன்"

மேலும் எக்கமென்றல், இஷ்டவஸ்து பிரிந்தகாலத்தும், அது மறுபடியுங் கிடைக்கமாட்டாதென்றறிந்த

நிட்டாநுபூதி.

"அருந்துபோனகமும் பாதியா நீரு மதனினும்
பாதிய தாகப், பொருந்துநா ளொன்றுக் கொருபொழு
தருந்தல் புரிகமற் றெவ்விடத் தெனுந்தான்"

கைவல்லியநவநீதம்.

"அறுசுவையின் குணங்குற்ற மசுத்தஞ் சுத்த மப
த்தியம் பத்தியமெனவூ ணைய்ந்தி டாமல், பொறுமை
டன் கிட்டினதைக் காட்டுத் தீப்போற் போகங்கள் புசி
ப்பன்மா போகி யாகும்."

மேலும் மிதமாகத் தூங்கி யஃதாவது இரண்டரை
நாழிகையேதூங்கி மற்றிரவெல்லாந் தூங்காமற்றூங்கி
யதாவது அறிதுயில்செய்து அல்லது வுணர்வோடுமுற
ங்கி சுகமாகவிளங்க முயலுவார்கள் அநேக சன்மங்க
ளிற்செய்த நிட்காம புண்ணியத்தாலுங்,குருவினுடைய
யருளினாலுந் தேவா நுக்கிரகத்தாலுஞ் சமாதியினா
லும் பிரமமுந்தானு மொன்றேயெனவறிந்த அபரோ
க்ஷ ஞானத்தாலும் உலக அதீதராய் விளங்கும் புருஷர்
களுக்கு தூக்கம் நீங்காமல் நீங்கும். தேகாபிமான



ள்ளளவும் நித்திரையை யொழிப்பதரிது, அதனால்
முத்தியடைவதில்லை. நிட்டைபழகுபவர் ஆத்மநோக்
கில் தூக்கந்தவிர்ந்தவரும், தேகநோக்கில் சிறிது தூக்க
முடையோருமாயிருப்பர்;

தாயுமானசுவாமிகள்.

"காய நிலையல்ல வென்று காண்பா ருறங்கு வரோ
தூய வருட் பற்றுத் தொடர்வார்."

இந்தநித்திரையை யொழிக்குமுபாயம் யாதெ
னின், அப்பியாசஞ்செய்யும்போது தூக்கம்வந்தாலும்
விழித்தவுடன் மகாவாக்கியத்தை மறவாது சிந்தித்து,
குரு கூறிய லக்ஷியத்தில் நிறுத்தின் தூக்கமொழியும்.
இப்படி செய்துவருபவருக்கு நனவிற்சுழுத்தி யெளிதி
லுண்டாம்.

தாயுமானசுவாமிகள்.

"தூங்கிவிழித் தென்னபலன் றூங்காமற் றூங்கி
நிற்கும், பாங்குகண்டா லன்றோ பலன்காண்பேன்"

மேலும் ஏக்கமென்றால், இஷ்டவஸ்து பிரிந்தகாலத்
தும், அது மறுபடியுங் கிடைக்கமாட்டாதென்றறிந்த

போதும், விரும்பிய பொருள் சித்தியாதபோது முண்டாகிய வருத்தம். அல்லது, இருந்த பணமொழிந்ததே, வருமென்று நம்பியிருந்த பணம் வரவில்லையே, குழந்தையில்லையே, என்கிற வருத்தமே ஏக்கமெனப்படுவது: தத்துவவிசாரபுருஷர் தத்துவங்களாருறையுந் தள்ளி, தத்துவாதீதமான தன்னைக்கண்டு சர்வம் பிரமமயமென்றும், அப்பிரமம் தன்னைத்தவிர இல்லையென்றும், அனைத்துந் தனக்கன்னியமன்று உண்மையுமன்று என்றுணர்ந்தவராதலின் அவர்களுக்கு ஏக்கம்வரக் காரணமில்லை. சிலருக் கிருக்கிறதேவெனின் அவர் நிரவிசாரித்தவரல்லவென்றறிக.

சீ--விவகாரஞ் செய்யும்போது நிலையை விட்டுத் தானே விவகரிக்கவேண்டும்; இன்றேல் விவகாரந் தவருமே; எவ்வாறு பழகுதல்?

கு—சிவன்முத்தர்கள் நாட்டமகலாமல் பலவிவகாரங்களை நடத்துகிறார்களே கண்டதில்லையா.

பட்டினத்தார்

“எத்தொழிலைச் செய்தாலு மேதவத்தைப் பட்டாலு
முத்தர் மனமிருக்கு மோனத்தே”



சொரூபசாரம்.

“ஏதேது வந்தாலு மேதேது செய்தாலு
மேதேதி லின்புற் றிருந்தாலு—மேதேதுந்
தானாகா வண்ணந் தனியே தெரிந்திருக்கு
ஞானாகா ரந்தானே நாம்.”

இதுநிற்க, உலகில் சாதாரண மனிதரப்பியாச முதிர்ச்சியால், அஷ்டாவதானமுதலியவற்றைச் செய்கிறார்களே, அதெப்படி கூடுமென்று நினைக்கிறாய். கேவலமோர்பெண் கள்ளபுருஷனுடன் கூடியநுபவித்த சுகத்தைச் சதாநாடினவளாய்ச், சுயபுருஷனிடமநுபவிக்கும்போதும், மனைத்தொழில்கள் செய்யும்போதும், அக்கள்ளபுருஷனை மறவாதிருக்கிறாளென்பதை நீயறிந்ததில்லையா?

பசுபதிபாசவிளக்கம்.

“மன்னிய சோரன் றன்னை மனதினில் நினைந்து
கொண்டு, தன்னுரு கணவ னோடு தழுவிய வாறு
போல, தன்மனஞ் சிவத்தில் வைத்துத் தானவ னான
ஞானி, பின்னையு முலகி னின்று பேசுவான் மாசெரக்
றில்லான்.”

போதும், விரும்பிய பொருள் சித்தியாதபோது முண்டாகிய வருத்தம். அல்லது, இருந்த பணமொழிந்ததே, வருமென்று நம்பியிருந்த பணம் வரவில்லையே, குழந்தையில்லையே, என்கிற வருத்தமே ஏக்கமெனப்படுவது: தத்துவவிசாரபுருஷர் தத்துவங்களாறுறையுந் தள்ளி, தத்துவாதீதமான தன்னைக்கண்டு சர்வம் பிரமமயமென்றும், அப்பிரமம் தன்னைத்தவிர இல்லையென்றும், அனைத்துந் தனக்கன்னியமன்று உண்மையுமன்று என்றுணர்ந்தவராதலின் அவர்களுக்கு ஏக்கம்வரக் காரணமில்லை. சிலருக் கிருக்கிறதேவெனின் அவர் தீர விசாரித்தவரல்லவென்றறிக.

சீ.—விவகாரஞ் செய்யும்போது நிலையை விட்டுத் தானே விவகரிக்கவேண்டும்; இன்றேல் விவகாரந் தவறுமே; எவ்வாறு பழகுதல்?

கு—சிவன்முத்தர்கள் நாட்டமகலாமல் பலவிவகாரங்களை நடத்துகிறார்களே கண்டதில்லையா.

பட்டினத்தார்

“எத்தொழிலைச் செய்தாலு மேதவத்தைப் பட்டாலு முத்தர் மனமிருக்கு போனத்தே”



சொருபசாரம்.

“ஏதேது வந்தாலு மேதேது செய்தாலு
மேதேதி வின்புற் றிருந்தாலு—மேதேதுந்
தானாகா வண்ணந் தனியே தெரிந்திருக்கு
ஞானாகா ரந்தானே நாம்.”

இதுநிற்க, உலகில் சாதாரண மனிதரப்பியாச முதிர்ச்சியால், அஷ்டாவதானமுதலியவற்றைச் செய்கிறார்களே, அதெப்படி கூடுமென்று நினைக்கிறாய். கேவலமோர்பெண் கள்ளபுருஷனுடன் கூடியநுபவித்த சுகத்தைச் சதாநாடினவளாய்ச், சுயபுருஷனிடமநுபவிக்கும்போதும், மனைத்தொழில்கள் செய்யும்போதும், அக்கள்ளபுருஷனை மறவாதிருக்கிறாளென்பதை நீயறிந்ததில்லையா?

பசுபதிபாசவிளக்கம்.

“மன்னிய சோரன் றன்னை மனதினில் நினைந்து கொண்டு, தன்னுரு கணவ னோடு தழுவிய வாறு போல, தன்மனஞ் சிவத்தில் வைத்துத் தானவ னானஞானி, பின்னையு முலகி னின்று பேசுவான் யாசெரக் றில்லான்.”

கைவல்லியநவநீதம்.

"நவமாகப் பரபுருடன் றன்னைக் கூடி
நபந்தசுக மநுபவித்த நாரி நெஞ்சந்
தவமாக மனைத்தொழில்கள் செய்யும் போதுந்
தழுவியநு பவித்தசுகந் தனைவி டாதே"

ஆதலின் அப்பியாசமுதிர்ச்சியில் அகம்புறமின்றி சமதிருஷ்டியாயிருந்து ஞானமடையின், சும்மாயிருந்தாலு மிடைவிடாமல் தொழிலைப்புரிந்தாலும், வித்வான்கள் சதாகாலமுஞ் சமாதியைவிட்டு நீங்காதவரென்றேயறி.

சீ—நிதித்தியாசனமடைவதெப்படி?

கு—நிரந்தரவப்பியாசமின்றி சச்சிதாநந்த ஆத்மாவினை யடைதல் முடியாது ஆதலின், சற்குருவினிடம் மகாவாக்கியார்த்தத்தை சிரவணமனனஞ்செய்து அதனால் நான் நீயென பேதமாகத்தோற்றும் விபரீதங்களை யொழிக்க இடைவிடாது இரவும்பகலும் நிதித்தியாசனஞ் செயல்வேண்டும். அதனால் அகண்டாகார விருத்தியில் பிரதிபலிக்கும் அறிவுருவே சாட்சாத்கார



மாகும். நிதித்தியாசனஞ் செய்ய மனம் வசமாகாவிடில் அது நிலைக்குமட்டுஞ் சதாவிசாரணைசெய்வதால் அம் மனம் ஓயும், பிறகு நிதித்தியாசனமடைவாய். இதற்கு அங்கங்கள் பதினைந்தென்று பெரியோர்களால் சொல்லப் பட்டுள்ளது; அவற்றையநுஷ்டிக்கவேண்டும்.

சீ:—பதினைந்து அங்கமாவனவெவை?

கு—இயமம், நியமம், தியாகம், மௌனம், தேசம், காலம், ஆசனம், மூலபந்தம், தேகசமத்துவம், பார்வை நிலை, பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, ஆத்ம தியானம், சமாதி என்பனவாம்.

(1) சர்வம் பிரஹ்மமென்கிற விஞ்ஞானத்தாலிந் திரியங்களை யடக்குதல் இயமம், (2) ஓரினமாகிய ஆத்மாகார விருத்தியின் தொடர்பும், வேற்றினமாகிய அநாத்மாகார விருத்தியின் நீக்கமே நியமமாம், (3) சிதாத்மாநுசந்தானத்தால் பிரபஞ்சரூபத்தை விடுதல் தியாகமாம், (4) வாக்குபேசாது மனமசைவின்றியிருக்கும் விதமே மௌனமாம், (5) எதனுலெப்போதும் உலகம் வியாபிக்கப்பட்டுளதோ, அதுவே நிர்சனப் பிரதேசமாம், (6) பிரமாவின் நிமிஷமுதல் சகலபூதங்

களின் சிருட்டி, திதி, நாசங்களுக்காதாரமாயிருத்த லான அகண்டாநந்த அத்வையம் (பிரமம்) காலமாக சொல்லப்படும், (7) எதனிடபிடைவிடா பிரஹ்மசிந்த னஞ் சுகமாகவுண்டாகுமோ அது ஆசனமாம், (8) எது சகலபூதாதி ஜகத்திற் கதிஷ்டானமோ, சித்தத்தின் பந்தன மெதற்குக் காரணமோ அது மூலபந்தமாம், (9) அங்கங்களின் சமத்தன்மையையறியின், அவற்றின் விஷமத்தன்மைப் பிரஹ்மத்திலொடுங்குமதுவே தேக சமத்துவமாம், (10) திருஷ்டியை யகண்ட பிரஹ்மாகார விருத்தியைச்செய்து ஜகத்தை பிரஹ்மமாகப் பார்த்தல் அல்லது, ஞாதுரு, ஞான, ஞேயத்தின் லயமெங்குண் டோ, அது பார்வைநிலையாம், (11) சித்தமுதலிய சர்வபாவங்களிலும் பிரஹ்மத்தன்மையாகப் பாவித்த லால் சகல விருத்திகளையும் நிரோதித்தலெதுவோ, அது பிராணயாமமாம், அல்லது, பிரபஞ்சத்தை நிஷேதித் தல் ரேசகமும், பிரஹ்மமே யானென்னும் விருத்தியே பூர கம், இவ்விருத்தியின் நிஸ்சலத்தன்மை கும்பகப்பிராண யாமமாம், (12) விஷயங்களில் ஆத்மத்தன்மையையறி ந்து, மனஞ் சித்திலமுழ்குதல் பிரத்தியாகாரமாம், (13) மனஞ்சென்றவிடமெல்லாம் பிரஹ்மத்தையே கண்டு



மனதை நிறுத்துதல் தாரணையாம், (14) பிரஹ்மமே யானென்னுஞ் சத்விருத்தியினால், நிராலம்பத்தன்மை யாக நிற்றலே ஆத்மதியானமாம், (15) நிர்விகாரத்தன் மையினால், விருத்தி சூனியமாயிருந்து துவைதாநுசந் தானமின்றியிருத்தலே சமாதியாம். மேலும், எது காறுமுனக்கு அஞ்ஞானந்தோன்றுமோ அதுகாறுந் துரியஸ்தானமான விஸ்ராந்திவரப் பழகவேண்டும். அத னால் நிதித்தியாசனமடைவாய், அதனால் மனோவிகற்பத் தால் தோற்றும் ஜகஜீவபரமெல்லாம் பிரஹ்மமேயென் கிற சாட்சாத்காரமடைந்து மோட்சமடைவாய். சொ ரூபநிட்டையை யோர்காலுஞ் சொற்பமுந் தவரவொ ண்ணு, அந்த நிட்டை தவர்தலே காலனென்று விவேக சூடாமணி கூறுவதால், வெளிநாட்டத்தி லெதுகாறு முழலுகின்றுயோ அதுகாறுந் துக்கமே பிராப்தமாம். அதுவே உனக்கு இயமனும். ஆதலினுள்நாட்டம்பெற் றுழைத்தால், ஆத்மஞானமானது சந்தேகவிபரீதமற வுண்டாகும். அப்போதுதான் ஞானயோகத்தில் நிலைத் தவனும் ஆநந்தமாய் விளங்குவாய்.

### கைவல்லியநவநீதம்.

"அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினு லம்மட்டும், கிசத்தி னுள்விழிப் பார்வையா மிப்படி நிரந்தரப் பழக்கத்தால், வசத்தி னுன்மன நின்று சின்மாத்திர வடிவமா யிடின்மைந்தா, கசத்த தேகத்தி விருப்பினு மாநந்தக் கடல்வடி வாவாயே.

### ஆன்றோர்.

"நோக்கா நோக்கை நோக்க நோக்க
நோக்கா நோக்கு நோக்கு மன்றே."

சீ—ஆன்மா காணப்படுவதெனின், திரிசியமா யழியுமே, காணப்படாததெனின், இருந்தால் காணப்படாதா, ஆதலினில்லையென வருமே?

கு — ஆத்மாவானது பாவாபாவங்களுக்கப்பாற் பட்டதாதலி னதுகாணப்படுவதுமன்று, காணப்படாததுவுமன்று. காணப்படுவது உலகம்; காணப்படாதது மாயையேயாம். ஆத்மா, அவ்விரண்டிலும் வேறுயிருத்தலின், அது அறியப்படுவதற்கும் அறியப்படாததற்கும் வேறான அறிவுசொரூபமாம். ஆதலினது திரிசியமு



மல்ல சூனியமுமல்ல. அது நித்தியமாயும் ஆநந்தமாயும் சித்தாயுமுள்ளதாதலின் அதனை சூக்குமமான புந்தியா லுணரலாமென்றறி.

### பட்டினத்தார்

"ஆரூர ரிங்கிருக்க வவ்வூர்த் திருநாளென்
றாரூர்க டோறுமுழலுவீர்—நேரே
யுளக்குறிப்பை நாடாத வூமர்கா ணீவிர்
விளக்கிருக்கத் தீத்தேடு வீர்."

### சோரூபசாரம்.

"தேகா லயத்திற் சிதாகாச தேவதையை
யாகாய சாந்தி மலராலே—யேகாந்த
மந்திரத்தாற் பூசைசெயு மாதவரை."

### வள்ளலார்.

"ஆலயமே காய மறிவே சிவலிங்க
மாலயனுங் காணாத வள்ள லுக்குச்—சீலமுறு
மன்பே யபிடேக மன்பேநல் லர்ச்சனையு
மன்பேநை வேத்தியமு மாம்."

"நல்லகுலத் திற்பிறந்து நல்லாரைச் சேர்ந்தொழுகி
நல்லறிவு பெற்றுடைய நன்மாணு-நல்ல
சிவம்வேறே யென்றெண்ணிச் சிந்தை கலங்காதே
சிவமென்ற நீயே சிவம்"

திருமந்திரம்.

"உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம்
வள்ளற் பிரானுர்க்கு வாய்கோ புரவாசற்
றெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கங்
கள்ளப் புலனைந்துங் காளாமணி விளக்கே."

சொரூபானு சந்தானம்.

"இதயாம் பரத்தி லுதித்தொளிரு மிணையிலாத்ம தேவந்தனையைத், திதமா நோக்கிச் சிந்தித்துத் தெளிந்தே காக்ர சித்தமொடும்."

இப்பிரமாணங்களால் பிரதிதேசத்திலும் ஆன்மதத்துவம் பிரகாசரூபமாய் இருதயாம்பரத்திலே விளங்குவதாக நீயுணர்வாயாக. எவன் அக்ஷர பிரம்மத்தை யிருதயகுகையில் தெரிந்துக்கொள்ளுகிறானோ, அவன்



அகங்கார கிரந்தியைப் போக்கினவன். அவனே தீரன், அவனே சுகமடைவன். இதனதுண்மையறிந்தாரில்லை. ஈதெவ்வாறிருக்கிறதெனின், இரத்தினத்தைத் தேடப் புறப்பட்டவொருவன், அருகே இலேசில் கிடைத்த இரத்தினத்தை யெடுத்துப்பார்த்து, இரத்தின மிவ்வள வுலேசில் கிடைக்காதே, ஆதலினிது இரத்தினமாயிராதென வதனையெறிந்துவிட்டு, அது மிகப்பிரயாசைப்பட்டால்தான் கிடைப்பதெனக் கேள்விப்பட்டோமென யோசித்து, மீட்டும் இரத்தினத்திற்காக காடு, நாடு, மலையெங்குந்தேடிப் பிரயாசையால் சங்குமணியொன்றகப்பட, வதனையே யிரத்தினமாகக் கருதி பெட்டியிலிறுத்திவைத்தவன் கதையையொக்கும். இருந்தவிடத்திலேயே சற்குருநாதனருளால் தன்னை விசாரித்தறிந்து, ஆநந்தக்கடல்வடிவமாய் விளங்குவதைவிட்டு, வழிதெரியாது வீணேமிகுந்த பிரயாசையோடு, யிங்குமங்குந்தேடியுழலுகிறார்கள் பிரமம் பிரத்தியக்ஷமாயின் திரிசியமாகுமே, திரிசியமாயின் நசிப்பதாகுமே நசிப்பது பிரமமாகுமாவெனவுணர்ந்தாரில்லை.

### ஞான வாசிட்டம்.

"திகழிதய குகையுறையுந் தேவதையை விட்டய லே தெய்வந் தேடன், மிகவரிய கவுத்துவத்தை யெறிந் துசிறு மணிதேடும் வேட்கை போலாம்."

### தாயுமானசுவாமிகள்.

"எங்கணு நீயென்று விருந்தபடி யெய்தாம
லங்குமிங்கு மென்றலைய லாமோ';

### சொரூப சாரம்.

"தேரைத் திருநாளைச் சேவிப்பார் தம்மைவிட்டங்
காரைத் தொழப்போரு ரையகோ-தேரிடையே
பார்க்கின்ற தெய்வம் பரிபூரணமலவோ
யார்க்குந் தெரியாத தோ."

சீ—சுவாமி தாங்கள் கூறிவந்ததினால், அப்பர மான்மாவை யிக்காயத்திலேயேதா னறியவேண்டியதெ ன்றுந் தெரிந்திருக்க, இங்குமங்குஞ்சென்று அனேகரத னைத் தேடுகிறார்களே அது தவரா, நியாயந்தானா?

கு—அப்பா தேகத்தை க்ஷேத்திரமென கூறப்பட் டுள்ளதால், தேகமாகிய கோயிலிலுள்ள பரசூரியனை



ஞானேந்திரியங்களை யடக்கி, மனதை யொருவழியில் நிறுத்தி, சற்குருநாதனருளால் பெற்ற மகாவாக்கிய சிந்தனைவாயிலாக அகமுகமாக நோக்கின் சமாதி சித் திக்கும். ஆங்கு இதயாகாயத்தில் யாவுமாகவும், ஏக மாகவும், சோதிமயமாகவும் அகண்டபோதசொரூப மாயுள்ள தனதான்மாவான பரசூரியனைக் காணலாம். இவ்வாறு அந்தரியாமியாயிருக்கிற தன்னுடைய ஞான சொரூபத்தையறிந்தவரே ஞானி. பரசூரியனாகிய தன்னை நோக்கிநிற்பது சமாதிசித்திப்பதற்கு இலே சான வழியாகும். இந்த உள்ளுணர்ச்சியானது, மூர் த்தி தலம், தீர்த்தம் முரையாயுணர்ந்தோர்க்கு வுண்டா வதாயிருத்தலின், பரமான்மாவை யங்குமிங்குந் தேடிக் காண முயல்வது பயனற்ற காரியமல்லவாம். ஆயினும், மேல்படி யேறியிருப்பவருக்கு, கீழ்ப்படியிலிருப்பவர் கள் குறைவாகத்தான் காணப்படுவார்கள். தான் பூர ணன், தன்னைத்தவிர ஒன்றுமில்லையென்றறிந்தவருக்கு அங்குமிங்குந் தேடும் வியாபாரமில்லை. அப்படியுண ராதவர், அன்னியத்தில் பரமான்மாவுள்ளதெனக் கருதி, அங்குமிங்குந் தேடியலைவார்கள். சர்வத்திலுஞ் சாக்ஷியாயுஞ், சேதனனாகவுமிருக்குந் தேவதையை தந்

களுக்குள்ளேயிருப்பதாக எவர் காண்பாரோ அவர் வீடடைவர். மேலுஞ் சாதிவிசேஷத்தினுலுஞ், செல்வமிகுதியாலும், பலசாத்திரங்கற்றதினுலும், வேதாத்தியயனஞ்செய்வதினுலும், மதாபிமானிகளா யனேகர், ஆத்மாவைத் தெரிந்துகொள்ளாது மயங்காநிற்பர். அன்னவரோ, கரிச்சுவையை யறியாத அகப்பைக் கொப்பாகுவரேயன்றி வேறல்லர். ஜாதியிரண்டொழிய வேறில்லை. அஃதாவது, தன்னைத்தானறிந்தவன் ஞானி; அறியாதவன் அஞ்ஞானியெனவுமாம். அதனதுண்மை தெரிந்த ஞானிகள் உடலெல்லாமொன்றேயாயும் அது அசத்துமாதலின் ஆன்மநாட்டத்தில் சாதிபேதங் கூறுவதில்லையென்றறி.

சிவாநந்தபோதம்.

"சாதி யாவ ரெவரென்னில் தன்னை யறிந்து சிவமான, சாதி பெரிய சாதியென்று சாற்று மறைகள் சத்தியமே."

சீ.—மௌனமென்பது யாது, சிலர் வாய்பொத்தியுஞ், சிலர் பேசியுமிருக்குங் காரணம் யாது?



கு.—எவன் குருவினருளால் மாயையை வென்று அபரோக்ஷமாக விச்சகமுழுதையும் பிரஹ்மமாக காண்கிருனே, அப்போதவனுக்கு விவகாரம் மிகுதியாகத் தொலைந்துபோம். சர்வம் பிரஹ்மமயமாகப் பார்த்து, அன்னியமில்லாது தற்போதமற்று தான் விளங்கினபோது, எதனுலெதனைக் காண்பன்; எதனுலெத்துடன் பேசுவன். மற்றுஞ் சிலர், மைத்திரியாதிகுணமுடையோராய்த்தாமடைந்தவுண்மையையுத்தம அதிகாரிகளுக்குமாத்திரம் போதித்துவருவர். இது சம்பிரதாயமாகவிருப்பதால், குரு சீடனெனவும், சிரவண முபதேசமெனவுஞ் சாத்திரங்களில் காண்கிறோம். இவ்வாறுவுத்தம அதிகாரிகளுக்குச்சொல்வது அன்னியமாகாதோவெனின், அவர்களுக்கிந்த அவத்தை தீர்க்கசொப்பனமெனக் கண்டுதெளிந்தவர்களாதலின், அதுவுஞ் சொப்பனவிவகாரமேயாகையால், அன்னியமாகாதென்றுணருவாயாக. மேலும், வேதாகமங்களிம்மாதிரி மவுனம், தற்போதம் நீங்கி, பிரமோகம்பெற்ற முத்தான்மாக்களுக்கே வாய்க்குமென்றும், இதுவே ஞானவரம்பென்றும், பேசாவநுபூதியென்றுங் கூறும். இது எவன் ஜன்மாந்தரங்களில் இறைவனைப் பத்தியோடு பூசித்து அவனதருளைப்பெற்றுனே அவனுக்கே மீண்டுகூறிய

அநுபவமும் மவுனமுமுண்டாம். இம்மவுனம் நான்கு வகையாகக் கூறப்படும்.

சீ.—அவை யாவை?

கு.—(1) சொல்மவுனம், (2) கரணமவுனம், (3) காஷ்டமவுனம், (4) சுழுத்தி மவுனமெனவுமாம் (1) பேசாதிருப்பது, (2) இந்திரியங்களையடக்கல், (3) தேகமும் கரணமும் அசையாமல் காஷ்டம்போலிருத்தல், (4) இம்மூன்று வியாபாரமும் நீங்கி நிருவிகற்பசமாதியாயிருப்பது.

கோன்றைவேந்தன்.

"மோன மென்பது ஞான வரம்பு."

கந்தரநுபூதி.

"சும்மா விருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே"

குமாரதேவர்.

"எல்லா நாமே யெனவறிந்தா லெஃதை நினைவா னினைத்திடுதல், சொல்லா லெஃதை யுரைத்திடுதெ றொழிலா லெஃதைச் செய்திடுதல், நில்லா வுலகை வேறெனவே நினைத லுரைத்த றொழில்புரிதல், நல்லா ரனைத்து நாமெனவே நாடா ரிவையி லொன்றையுமே."



ஔவைக்குறள்.

"மறவா நினையா மவுனத் திருக்கில்
பிறவா ரிறவார் பின்."

ஆன்றோர்.

"பேசா திருப்பது ஆசா னிருப்பிடம்."

வள்ளலார்.

"மாயை மயக்கற் றுத்தற் போத மற்று
மவுன நிலை யுற்றோர்கள் பெற்ற பேறே."

கந்தரநுபூதி.

"ஆசா நிகளந் துகளா யினபின்
பேசா வநுபூதி பிறந்ததுவே."

தாயுமானசுவாமிகள்.

"பேசாத மோனநிலை பெற்றன்றோ நின்னருளாம்
வாசாம கோசரந்தான் வாய்க்கும்."

"வாயொன்றும் பேசா மௌனியாய் வந்தாண்ட
தேயொன்றும் போதாதோ வின்பம்"

"சொல்லாடா வூமரைப்போற் சொல்லிறந்து நீயாகி னல்லா லெனக்குமுத்தி யாமோ."

மௌனதரிசனம்.

"அருமை யென்ற மௌனத்தை மூட்டு மூட்டு
வடங்காத கரண மைந்து மடங்கிப் போகும்
இருமை யென்ற விந்திரிய மாண்டு போகு
மிருண் மலம்போம் திரோத மில்லை மயக்கம் நீங்கும்
வெருவு பலகோடி கன்மம் கணத்தில் நீங்கும்
வெளியி னுள்ளே யொளி தோன்றும் நாதங் கேட்கும்
உரிமை யுடன் மோன சித்தியாக வாக
வருவ முனக் கானந்த வுருவ மாமே."

சீ—சுவாமி நனவிற்சுழுத்தியாவது யாது?

கு—அப்பா சாக்கிராவத்தையில் இந்திரிய மன வியாபாரங்களில்லாமல், அறிவுமாத்திரமாயிருப்பதாம். இதனை அரிதுயிலென்றுஞ் சொல்லப்படும்.

ஞானவாசிட்டம்

"அறிபொருளை விட்டகன்று லழியுஞ் சித்த மந்த நிலை வியாபார பனைத்து மில்லாச், செறிநனவிற் சுழுத்தியா மிதனை நாளுந் தீராத பரிசயமே செய்யச் செய்யப், பிறிவின்முது துரியமா மென்பர் மேலோர்."



சீ.—விதேகமுத்தியென்பது யாது?

கு.—சீவன்முத்தருடைய தேகம் விழுதலே விதேக முத்தியெனப்படும். கடமுடைந்தபோது கடாகாசம் மகாகாசமாகவேயிருப்பதுபோல, சீவன்முத்தர் தேகம் நீங்கியகாலத்து மனது மாயையென்கிற அன்னியமாகிய யாதொருபாதிகளுமின்றி தேசகாலவத்துபேதமின்றி தனதன்னியமின்றி பிரமசொரூபமாகவே யிருப்பர். பிராரப்தமுடிந்தவுடன் திரியும் நெய்யுமில்லாத தீபம் போல, உபசாந்தமடைந்து இனிப்பிறவாமலிருப்ப தாம்.

சீ—பரமாத்மாவொன்றாகவேயிருக்க மதவாதிகள் பல்வாக நினைத்து பூசித்து, ஒன்றை புகழ்ந்துபேசியும் பிறவற்றை யிகழ்ந்துபேசியும் வருவது நியாயமாமா. மேலுந் தமது காமியார்த்தங்களை தந்தங்கடவுளின் மூலமாயடைகிறார்களென்பது நிசமா?

கு—சிற்சொரூபமும் நாசரகிதமும் நிரவயவமும் பிரபஞ்சவிலக்ஷணமுமான பிரமம், மதவாதிகள் சொல்

னுந் தெய்வவடிவங்களினும் வியாபித்திருப்பதாம். ஒன்றுயிருக்குமது, அவரவர்கள் பூசிக்கும் தெய்வவடிவங்களின் வாயிலாக, அவர்களுக்கு காமியார்த்தங்களைத் தருகின்றது. இவ்வுண்மையறியாது நந்தெய்வஞ் சிறிது, எந்தெய்வம் பெரிதென சண்டையிடுவது அறியாமையே. அறிவாய் விளங்கு மான்மாவைத்தள்ளி, அதற்கன்னியமாக கடவுளிருப்பை யெவரானுங் காட்டுதலேலாது. எல்லாம்வல்லதும், எல்லாமுணர்வதும், எங்கும் நிறைந்திருப்பதும், வேதமுடிவில் விளங்குவதுமவ்வொன்றேயென்றறி. இதனதுண்மை தெரியவொட்டாது மறைத்துத் தடையாயுள்ளது பேதபுத்தியாகிய அஞ்ஞானமே. அவ்வஞ்ஞானம் நீங்காதவர் பலவாகக் கூறி பயத்தையே பயனாக அடைவர்.

### சோருபசாரம்.

"பொன்னையுரு, வேறாக்கிப் பேருரைத்த வேற்றுமைப்போ னம்மையுமவ், வாறுப் பகுத்துரைத்தோமால்."

மேலும் யார்யாரென்னென்ன வுருவமாக வுபாசித்தபோதிலும், அந்தந்த வுருவங்களிலிருந்து அவரவர்களின் காமியார்த்தத்தை யநுக்கிரகிப்பது அந்த வொன்றேயாம். ஆனல் வேறுவேறு வுருவங்களில் வேறு வேறு தெய்வங்களிருந்தநுக்கிரகிப்பதாக நினைத்துத் தமதுதெய்வத்தை பூசித்தும், பிறவற்றைத் தூஷித்துவருவது மூடமே. மும்மூர்த்திகளுக்குள் பேதங்கொள்பவன், சூரியசந்திரர்களுள்ளவரையும் நரகத்தையேயடைவன். மும்மூர்த்திகளையு மொன்றாகவெண்ணுபவனே வெளிதாக பிரம்மானந்தத்தையடைந்து என்றுஞ் சுகக்கடல் வெள்ளத்தில் மூழ்கியிருப்பன். சிவனுடைய விருதயமே விஷ்ணு, விஷ்ணுவினுடைய விருதயமே சிவன். இவ்விருவருக்கும் பேதங்கிடையாதென்றறி. பேதங்கூறுபவர் தேகமேஆன்மா, போகமேமுத்தியென்னு மூடத்தால், பிரமத்தையு முடலளவாக வைத்து வெவ்வேறாகக்கூறுநிற்பர். மேலும், பிரமம் சுசாதி, விசாதி, சுவகதபேத ரகிதமென்னுமுணர்ச்சியில்லாதவர்களே அவ்வாறு கூறுவர்.

### ஞான வாசிட்டம்.

"மாளாத காதலெனும் வற்சநா பிக்கொடியின் வனத்தைச் சுட்டு, நீளாசை யனைத்துமறுத் தவர்க்

கன்றே விப்பயன்று னேரா நிற்குங், கோளான பொரு ளனைத்தின் முன்பொடுபின் பினிமையிலாக் குற்றங் கண்டு, மீளாத பாவனையாற் கட்டுண்பார் வேசரியே வேறென் றன்றால்.''

அஞ்ஞவதைப்பரணி.

"தலைபலவாய்ப் பெயர்பலவா நதிக ளெல்லாஞ்
சாகரத்தி னொருநீராந் தன்மை போலப்
பலபலவாய்ச் சொல்லுநெறி யெல்லாஞ் சொல்லப்
ப்பட்டவொரு பொருளினையாம் பணிதல் செய்வாம்.''

தாயுமானசுவாமிகள்.

"நெறிக டாம்பல பலவுமா யந்தந்த நெறிக்காஞ்
செறியுந் தெய்வமும் பலபல வாகவுஞ் செறிந்தா
லறியுந் தன்மையிங் காருனை யறிவினா லறிந்தோர்.''

"ஆறு சமயங்க டொறும் வேறு வேறாகி விளையாடு முனை யாவ ரறிவார்.''

"சமய கோடிக ளெலாந் தந்தெய்வ மெந்தெய் வமென்
றெங்குந் தொடர்ந் தெதிர் வழக்கிடவு நின்றதெது.''



சீ—சுவாமி, வேதாகமங்கள் அத்துவிதமொன்றை யே சத்தியமாக பிரதிபாதித்திருக்க, மதவாதிகள் பல வாறாகக் கூறுவது யாதுகாரணம்?

கு—அவர்கள் பூரணவிலக்கணத்தை யறியாமையி னால் துவைதபுத்திகொண்டு மயங்கினார்கள். அந்தப் பிரமம், அபரிச்சின்னமாயும் கோசரிக்கப்படாததாயும் சச்சிதாநந்தமயமாயும் ஒப்புவமையில்லாததாயுமிருப் பதால் அத்துவிதமே சித்தாந்தமாம். அத்துவிதமென் பதின் அர்த்தம் இரண்டாவதில்லாதது; சகல கேவலம் நீங்கி காண்பானுங் காட்சியுமாயறிந்த தற்போதங்கெ ட்டு, பரத்திவிரண்டறக் கலந்தோமென்னும் போதவாச னையுமொழிந்த சுகாதீதநிலையே அத்துவிதாநுபவமாம். மேலும் பேதங்கூறுவதால் பீதியேயுண்டாகும்; எவ்வா றெனின் சாக்கிர சொப்பனங்களில் பேதங்காணப்படு வதால் பீதியுண்டாகின்றது; சுழுத்தியில் பேதமில்லா திருப்பதால் அணுவேனும் பீதியில்லை, இது லோகபிர சித்தமன்றோ. ஆதலின், யஜுர்வேதம் "ஏகமேவாத்வி தீயம் பிரமம்'' என்றது மேலும் ஆத்மாவின் ஸ்புரிப் பையன்றி யுலகுயிர் பரமென்பன வுண்மையிலில்லாமை யால் துவிதஞ்சித்தியாதாம், சித்தியாததனால் அணு

வும் பேதமில்லை. நதிகளெல்லாமெங்கேபிறந்தாலு முடி வில் சமுத்திரத்தில்விழுந்து வொன்றுகுவதுபோல, மதங்களெல்லா மெங்கேவுண்டானுலும் முடிவில் அத்து விததாத்பரியமாய் முடிவுபெறுவனவாம். மதவாதிக ளிவ்வுண்மையறியாது விசிஷ்டாதுவிதம், கேவலாதுவி தம், சமரசாதுவிதம், சிவாத்துவிதம், சுத்தாத்துவிதம், முதலியனவாகக் கூறுநிற்பர். துவிதம் அத்துவித மென்பதற்குச் சாதனமென்பதை யறிந்தாரில்லை. அறிந் திருந்தால் அத்துவிதத்துக்கு அடைமொழிகொடுத் திருக்கமாட்டார். ஆதலின் துவிதம் மாயாமாத்திரமும், அத்துவிதம் பாரமார்த்திகமுமாம். மேலுமவர் சொல் லுவது சரி, இவர் சொல்லுவது தப்பென்று அபிமானங் கொண்டு தீர்மானிக்கலாகாது. ஆனலுன்புத்திக்கெது சுருதி, யுத்தி, அநுபவத்திற்கொத்திருக்கிறதோ அதை யே கொள்வது வுசிதம்.

### தாயுமானசுவாமிகள்.

"அத்துவித மான வயிக்ய வநுபவமே
சுத்தநிலை யந்நிலையார் சொல்வார்"
"சொல்லுஞ் சமயநெறிச் சுற்றுக்குளே சுழலு
மல்ல லொழிவ தென்றைக் கையா."



"வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லான்
மாறுபடுங் கருத்தில்லை முடிவின் மோன
வாரிதியி னதித்திரள்போல் வயங்கிற் றம்மா."

### ஞானவாசிட்டம்.

"ஊகமுள தேற்சிறுவ ருரையுங் கொள்க
வொழிந்தஅய னுரைசெயினுந் திரண மொப்ப
வேகவிடு வாய்ஞான மெளிது தோன்ற
வியம்புமுவ மானமெலா மேக தேசம்."

மேலும் மதவாதிகள் கருமகாண்டிகள்; விசாரணை யுடையோர் ஞானகாண்டிகள். கருமமின்றி ஞானத் தையடைதலுமுடியாது. நிட்காமியகருமஞ் சித்தசுத் தியைத்தந்து ஞானமடைய சாதனமாயிருப்பதாலதை சாத்திரங் கூறியவாறு செய்பவர் அத்துவிதஞானத் தைத் தவறுதடைவர். இதன்பொருட்டே நற்பயனை யடைவதற்கு பேதத்தோடுகூடிய சருமத்தைப் போ தித்து, அதனல் பரீட்சையும் பயனிலிச்சையு மொழித்து, பிரமதத்துவத்தை யுணர்த்தி, அதுகைவல் லியமாகும்வண்ணஞ் சகுணோபாசனையைக்கூறி, அப்

பேதத்தையொழிக்க நிற்குணோபாசனையைக் கூறி யதற்குமேல் அத்துவிதத்தைக்கூறி, அதுவே மேம்பட்டதெனவும் மற்றவையனைத்துஞ் சோபானமெனவும் வேதம் விளக்கியது. ஆதலின் தத்துவமசி மகாவாக்கியத்தின் அர்த்தத்தை நல்லாசிரியரையடுத்துக் கேட்டுத் தெளிவதே வுசிதம். பலவாறு கூறுவது யாதுக்கு, அலைநுரை திவலையாவும் சமுத்திரஜலமேபோல, திரிபுடியாவும் பிரமமே; அணுவளவும் பேதமில்லையென்றறிவதே வேதத்தின் முடிவு.

திருவருட்பா.

"நானானன் றானானன் நானுந்தா னும்மானன்
றேனானன் றெள்ளமுதாய்த் தித்தித்து நிற்கின்றான்."

பிரத்தியட்சாநுபூதிவிளக்கம்.

"எவர்மத மேனு மெமக்கென்ன உண்மை
யெவர்மதத் துண்டோ வெடுப்பம்."

"என்னகண்டு தம்மத மேமே லென்னல்
சாற்றின தார்போய் வந்து."



திருமழிசையாழ்வார்.

"நானுன்னை யன்றியிலேன் கண்டாய் நாரணனே
நீயென்னை யன்றி யிலை."

சடகோபர்.

"யானே நீயென் னுடைமையும் நீயே
வானே யேத்துமெம் வானவ ரேறே."

தாயுமானசுவாமிகள்.

"நானேகமாய் நின்னோ டிருக்கு நாளெந்த நாளிந்நா ளின்முற்று றுதோ."

"என்றடியர் மனமகிழ வேதா கமத் துணிபிரண்டில்லை யொன்றென்னவே, வந்தகுரு வேவீறு சிவஞான சித்திநெறி மௌனோபதேச குருவே."

"அத்துவித வத்துவைச் சொற்பிர காசத் தனியை
யருமறைகண் முரச லையவே"

"ஓதரிய துவிதமே யத்துவித ஞானத்தை
யுண்டுபண்ணு ஞானமாகும்."

"நீயென நானென வேறில்லை யென்னு நினைவருளத்
தாயென மோன குருவாகி வந்துதடுத் தடிமை."

அவிரோதவுந்தியார்.

"எம்மதத் தோரெவ் வகைநிட்டை சொல்லினுஞ்
சம்மத மேயெமக் குந்தீ பற,
தற்போத மாய்க்குமே லுந்தீ பற."

"அந்தப் பரத்தோ டிரண்டற் றயிக்கமா
மந்தநன் னிட்டையே யுந்தீ பற
அத்துவித வீடென் றுந்தீ பற."

விநாயகரநுபூதி.

"நீநா னற வொன்றி நிலைக்க வருள்
கோனுன குணலய குஞ்சரனே,"

சீ.—சுவாமி, குருவுபதேசத்தால் பலஜன்மவாசனையாகிய ஜீவபோதம் நசித்து சிவோகம் பாவனைவருவதெப்படி?

கு—அப்பா, பாவநாட்டத்தால் பாவாகாரவிருத்தியுண்டாதலுஞ், சூனியநாட்டத்தால் சூனியாகாரவிருத்தியுண்டாதலும்போல, இவ்விரண்டு விருத்தியும் நீங்குவதற்கேதுவான பிரமநாட்டத்திருந்தால் பிரம்மாகாரவிருத்தியுண்டாகும் இந்த பிரமாகாரவிருத்தியே சிவோகம்பாவனையாம். மேலும், பிரமரகீடநியாயம் போல அஃதாவது, குளவி தன்முள்ளினல் கொட்டி தானெடுத்துவந்து கூண்டில்வைத்த புழுவை, பிரதிதினமுஞ் சிலநாள்பரியந்தங் கூவிவர, அந்த பயத்தினல் புழு சதாகாலமு மக்குளவியையே நினைத்திருந்து பிறகு அக்குளவியேயாய்விடுகிறது. அது போல நீ, நான் ஜீவனென்கிற சங்கற்பத்தைவிட்டு சதாகாலமு மிடைவிடாது மிகவுந் திடமானவிஞ்ஞானபலத்தாற் சிவோகம்பாவனை செய்துவருவாயானல் அவித்தையும் அவித்தையாகாரியங்களுஞ் சிறிதேனு மில்லாததான பாவனதீதநிலையையடைவாய். மேலும், ஈனமாகிய ஜீவபாவம் ஆன்மாவினிடங் கானனீர்போல் கற்பிதமே. நானது வெப்படியாவேனென சங்கிக்கவேண்டாம்; ஜீவபரவைக்கியமென்றல் ஜீவனென்னும் பதத்துக்கு லட்சியார்த்தம் கூடத்தன்; பரத்துக்கு லட்சியார்த்தம் பரபிரமசொரூபமே. இவ்விரண்டின் லட்சியமான கூடத்தபிரமவைக்கயமே அகம்பிரமாஸ்மி என்னும் வாக்கி

யத்துக்கு அர்த்தமாதலின் நீயதுவாகவேயிருக்கிறாய். உனது சொரூபமெத்தகையதென நீயறியாய். அது சத்து, சித்து ஆநந்தமாயிருப்பது; அதைமறந்து, பேத பாவனையடைந்தாய். அதைவிட்டால், நீ நான், உனது, எனதென்கிற பேதஞானமுண்டாகாது. மேலும் பூமியில் புதைத்திருந்த இரும்பானது சிலகாலத்தில் மண்ணாய் மாறி மறுபடி நெருப்புக்குங் கருமானுக்குமுபயோகமாகாததுபோல, பிரமாகாரபாவனையாய் ஆத்மாவில் லயித்தமனம் நிரந்தரவப்பியாசத்தால் ஆத்மாவேயாகிவிடும்; அது மீட்டும் லோகவாசனை தேகவாசனை சாத்திரவாசனைகளையடையாது. மேலும், வெளியானதுவுள்ளும்புறமுமெங்கணும் பரிபூரணமாய் நிறைந்துள்ளதேயொழிய, பூமியைத்தோண்டினதால் வெளியானது வரவில்லை; அதுபோல, காலாதீதமாய் பிரமமும் நீயுமொன்றே, குருவுபதேசித்தபிறகல்ல நீயதுவானது; நான்குகாலத்து மதுவாகவேயிருக்கிறாய். முன்பு அவ்வாறு விளங்காதிருந்தது அஞ்ஞானம்; இப்போது விசாரிப்புழி குரு நீயதுவாயிருக்கிறாயென்று பலவேதுக்களால் காட்ட நீயுணர்ந்தாய். எவன் தன்னையறிவாகவும், பிரமத்துக் கன்னியமில்லாதுங்கண்டு விளங்குவானோ



அவனே யனைத்துமாய் விளங்கியதுவாவன்; எவன் தன்னை பிரமத்துக்கயலாகக்காணுவானோ அவனுக்கு ஆநந்தமுமயலாகக்காணும்; எவன் தன்னைபிரமமாகக் காண்பானோ அவன் தானேஆநந்தசொரூபமாய் விளங்குவன். எவன் பரமாத்மாவோடு தான் அநாதியே கலந்துள்ளவனென யுள்ளபடி தெரிந்துக்கொள்ளுகிறானோ அவனே தனது நிசசொரூபத்தையறிந்தவன். மேலும் தவறிப்போன அரசனுடையபிள்ளை வேடனிடமகப்பட்டு, சிலகாலம் வேடன்மகனாயிருந்தான்; அரசன் மீட்டுமப்பிள்ளையைக் கண்டுபிடித்து அரசனாக்கிக்கொண்டான்; அப்பிள்ளை அரசனானது ஆச்சரியமோ? அதுபோல, நீ சிவமாவது ஆச்சரியமல்ல. எப்படி, அப்பிள்ளைவேடனிடத்திருந்தபோது வேடனாகாது அரசனாகவேயிருந்ததோ, அப்படியே நீ, நான் ஜீவனென விவகரிக்கும்போதுஞ் சிவமே.

சிவஞானசித்தியார்.

"மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்
பின்னவனு மென்மகனீ யென்றவ ரிற்பிரித்தும்
பெருமையொடு தானாகப் பேணுமா போற்

றுன்னியவைம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையு மறியாது துயருறுந் தொல்லுயிரை
மன்னுமருட் குருவாகிவந்தவரி னீக்கி
மலமகற்றித் தானுக்கி மலரடிக்கீழ் வைப்பன்."

மேலும், இது பாம்பல்ல பழுதையென்று கூறின வுடனே பாம்பு பயம்போய் பழுதையாய்க் கண்டது போல, நீ சிவனல்லவெனக் குரவன் கூறினவுடனே நீ சிவமாவாய் தடையில்லை. மேலும், மாந்தரெந்தெந்த வினத்திற்கூடி பழகிவருவரோ அந்தந்தவினத்துக்குத் தக்கபடி அவரறிவுமிருக்கும். புழுவானது குளவியினத்தைச்சார்ந்து குளவியானதுபோல, நீ சாதுக்களினத்திற்சார்ந்து பழகினல், நீ சாதுவாய்ச் சிவோகம்பாவனையடைவாய் சந்தேகப்படாதே; அதுவின்றே விதுவுமின்றும் .

அத்துவிதானுபவம்.

"வெப்பொழுதும் பிரமமா கியசிவன் பாவனைவேறிலாமலேநா, னப்பொருளென் றேபாவித் தாலஃதாவதிலருமை யன்று தானே."

சீ.—நிட்டையென்றால் யாது; அதனை யெவ்வாறு பழகுதல்?



| விஷயம். | பக்கம். |
|---|---|

றுன்னி
துனே
மன்னுட
மலம

மேஜ
வுடனே
போல, நீ
சிவமாவா
வினத்திற்
தக்கபடி
தைச்சார்
திற்சார்ந்
ளையடைவ
மின்றும்





அத்துவிதானுபவம்.

"வெப்பொழுதும் பிரமமா கியசிவன் பாவனேவே திலாமலேனா, னப்பொருளென் றேபாவித் தாலஃதா வதிலருமை யன்று தானே."

சீ.—நிட்டையென்றுல் யாது; அதனே யெவ்வாறு பழகுதல்?

விஷயம். பக்க

ஆத்மஞான தீபிகை நூலினுட்பிரிவு

முற்றிற்று.

---

ஓம்

பரப்பிரஹ்மணேநம:

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 23 | 6 | நாராயணசதகம் | திருவேங்கடசதகம் |
| 34 | 10 | அவனது | அவர்களது |
| 42 | 6 | த்நிதியனென்று | நித்தியனென்று |
| 59 | 15 | தோன்ரறிய | தோன்றிய |
| 62 | 17 | சகலமும் | சகலகருமமும் |
| 76 | 16 | படியிருந்த | படியிந்த |
| 87 | 19 | உபரதிரவது | உபரதியாவது |
| 91 | 1 | சொற்சொரூபம் | சொச்சொரூபம் |
| 92 | 7 | திருசியம் | திரிசியம் |
| 96 | 16 | பேகங்களை | போகங்களை |
| 99 | 8 | நிரதிசவானந்தாநு | நிரதிசயவானந்தாநு |
| 103 | 14 | கெடுகின்ருள் [பவ | கெடுகின்ருன் [பவ |
| 107 | 1 | கேள்மகனே | கேண்மகனே |
| ,, | 2 | நுடர்க்கிச | நுடர்க்கிசன் |
| 113 | 13 | வர்யில்ாக | வாயிலாக. |
| 123 | 1 | தவநெறி | வறநெறி |
| ,, | 19 | பெருமானே | பெருமாளே |
| 127 | 12 | உள்ளத்திணின்று | உள்ளந்தனினின்று |
| 128 | 12 | கிடையாதோ | கிடையாதே |

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 133 | 17 | சிறத்தை | சிரத்தை |
| 138 | 14 | சொல்லுகின்றன | செல்லுகின்றன |
| 142 | 17 | சூரினது | சூரியனது |
| 145 | 18 | தகிபோனவழி | தேகிபோனவழி |
| 150 | 16 | ஈவக்கடன் | ஈமக்கடன் |
| 174 | 1 | ழிருவகை | விருவகை |
| 188 | 9 | வேறுஞ் | வெறுஞ் |
| 194 | 10 | நீனைத்தாலும் | நினைத்தாலும் |
| 204 | 10 | தேகம் | தேசம் |
| 283 | 7 | மூபயவிலக் | முடயவிலக் |

பிழை திருத்தம் முற்றிற்று.